# பகல் கனவு

ஜிஜுபாய் பதேக்கா

தமிழாக்கம்
சங்கரராஜுலு

சித்திரங்கள்
ஆனந்த் மங்கபூர்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# முன்னுரை

சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு, ஆங்கிலேய அரசாங்கம் இளம் சிறார்களுக்குக் கற்றுத்தரும் ஆசிரியர்களை சோம்பலான, சக்தியற்ற கல்விமுறையை ஏற்றுக்கொள்ளச் செய்தது. அந்தச் சூழலிலேயே நமது ஆசிரியர்கள் தொடர வேண்டியதாயிற்று. இதற்கிடையே கல்வி முறையின் விரிவாக்கம், நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் கல்வியைக் கொண்டு சென்றது. ஆசிரியர் களின் அக்கறையின்மையை லட்சக்கணக்கான குழந்தைகள் சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது.

தன்னைச் சுற்றியிருந்த சூழல்களிலிருந்து வேறுபட்டுக் கல்வி கற்றுத்தர விரும்பும் ஆசிரியர் இருந்திருக்க முடியாது என்பது தெளிவு. ஆயினும், குழந்தைகளுக்குப் பிடித்தமான ஆயிரக் கணக்கான விஷயங்களை—மண்ணில் இருக்கும் பூச்சி புழுக்களி லிருந்து, வானத்திலிருக்கும் நட்சத்திரங்கள் வரை—வகுப்பறைக் கல்விக்கு ஏற்றதல்ல என்றே நம் நாட்டில் நிலவிய கல்விமுறை கருதி வந்தது. தனக்குக் கொடுக்கப்பட்ட பாடப்புத்தகத்திலிருந்தே தான் கற்பிக்க வேண்டும், குழந்தைகளைப் பரீட்சைகளுக்குத் தயார் செய்ய வேண்டும் என்ற நோக்கிலேயே சராசரி ஆசிரியர் எவரும் வேலை செய்கிறார். குழந்தையின் அறிந்து கொள்ளும் ஆர்வத்துக்கு தீனிபோட்டு வளர்க்க வேண்டும் என்பது தனது கடமை என்று எந்த ஆசிரியரும் கருதவில்லை. அப்படி எண்ணினாலும், அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்குரிய சூழ்நிலையை பள்ளிகள் கொண்டிருக்கவில்லை.

குஜராத் மாநிலத்தின் சிறந்த ஆசிரியரும், கல்வியாளருமான ஜிஜுபாய் பதேக்கா (1885–1939) எழுதிய 'திவசப்னா' (பகல் கனவு) என்னும் நூலை மறுபதிப்புச் செய்வதற்குப் பொருத்தமான சூழல் இருக்கிறது. இந்த நூல் 1932இல் குஜராத்தி மொழியில் முதன் முதலாக வெளியிடப்பட்டது. அதே ஆண்டில், மத்தியப் பிரதேசத்தின் சிறந்த கல்வியாளரான திரு காசிநாத் திரிவேதி

'பகல் கனவு' நூலை இந்தி மொழியில் வெளியிடும் முயற்சியைத் தொடங்கினார். சரியான நடவடிக்கை எதுவும் வெற்றிபெற வேண்டுமானால், அதற்கு எல்லையற்ற பொறுமை தேவை என்பதை மகாத்மா காந்தியிடம் கற்றவர் திரிவேதி அவர்கள். கல்விமுறை குறித்த ஜிஜுபாயின் எழுத்துக்கள் நாடெங்கும் பரப்பப்பட வேண்டும் என்று திரிவேதி கண்ட கனவு கிட்டத்தட்ட நிறைவேறும் கட்டத்தை அடைந்து விட்டது. ஆனால், காந்திஜி, தாகூர், ஜிஜுபாய் ஆகியோர் சென்ற வழியில் நெடும் போராட்டத்தை நடத்தினால்தான் கல்விமுறையில் மாற்றம் செய்ய வேண்டும் என்னும் கனவை நனவாக்க முடியும். இந்த மூவரும் வலியுறுத்திய கல்வி முறை, குழந்தைகளுக்கு சுதந்திரமும் தற்சார்பும் கொண்ட சூழல் அமைய வேண்டும் என்று வலியுறுத்தியது. 1920ஆம் ஆண்டில் பாலமந்திர் (குழந்தைகளின் கோயில்) அமைத்ததன் மூலம் இந்தக் கருத்துக்கு அமைப்புரீதியான செயல் வடிவம் கொடுத்தவர் ஜிஜுபாய்; அவருடைய எழுத்துக்களில் இந்தக் கருத்தின் பல்வேறு அம்சங்களை அவர் கண்டறிந்தார்.

பாரம்பரியமாகத் தொடர்ந்து வரும் கல்விமுறையைப் புறந் தள்ளும் ஒரு ஆசிரியரைப் பற்றிய கற்பனைக் கதைதான் பகல் கனவு. காலம் காலமாக அங்கீகரிக்கப்பட்ட பாடப்புத்தகங்களைத் திட்டமிட்டே ஒதுக்கிவிட்டு, குழந்தைகளிடையே தனது பரி சோதனையை உற்சாகத்துடன் மேற்கொள்கிறார் அந்த ஆசிரியர். அவருடைய பரிசோதனைகளின் பின்னணி மான்டிசோரி கல்வி முறையிலிருந்து கிடைத்தது; ஆனால் அவர் நடைமுறைப்படுத்திய, கடைப்பிடித்த முறை முற்றிலும் உள்ளூர் அடிப்படையிலானது.

பகல் கனவு நூலைப் படிக்கிற வாசகர் எவரும் ஆர்வத்திலும் மகிழ்ச்சியிலும் துள்ளிக் குதிப்பார்; இந்தியாவில் நிலவுகின்ற சுவையற்ற, தூசிபடிந்து போன தொடக்கப் பள்ளிகளின் சோக நினைவுகள் அவரிடமிருந்து மறைந்து போகும். நாட்டின் பள்ளிகளில் சிறைப்பட்டிருக்கின்ற திறமைகள் வெடித்துக் கிளம்பி வெளிவரும் ஒரு எதிர்காலத்தைப் பற்றிய ஓவியத்தைக் காண்பார்; அதில் குழந்தைகள் தங்கள் ஆசிரியருடன் சேர்ந்து தங்கள் வகுப்பறையைச் சுற்றியுள்ள உலகைப் பற்றி மகிழ்ச்சியுடன் அறிந்து கொள்வார்கள்.

தில்லி கிருஷ்ண குமார்
ஜூலை 20, 1989

# பரிசோதனை தொடங்குகிறது

## 1

நான் அதைக் குறித்துப் படித்ததோடு மட்டுமல்லாமல் நிறையச் சிந்தித்தும் இருக்கிறேன். ஆனால் எனக்கு அதைப்பற்றிய நடைமுறை அனுபவம் இல்லை. எனக்கு ஓரளவு நேரடியான அனுபவ அறிவு வேண்டும் என்று தோன்றியது. அப்பொழுதுதான், என்னுடைய கருத்துக்களுக்கு உருவமும் அமைப்பும் ஏற்படும் என்றும் அவை நிறைவடையும் என்றும் நான் கருதினேன். என் கருத்துக்கள் எந்த அளவுக்குச் சரியானவை, அவை எந்த அளவுக்கு உள்ளீடற்ற கற்பனைகள் என்பதும் அப்பொழுதுதான் எனக்குத் தெரியவரும்.

நான் கல்வித்துறைத் தலைவரை அணுகி, என் பரிசோதனைக் காக ஒரு ஆரம்பப்பள்ளி வகுப்பை அளிக்கும்படி கேட்டுக் கொண்டேன்.

கல்வி அதிகாரி சிரித்துக் கொண்டே, "அதை மறந்துவிடு" என்றார். "உன்னால் அதைச் செய்ய இயலாது. ஆரம்பக் கல்வி நிலையில் குழந்தைகளுக்குக் கற்பிப்பது விளையாட்டு அல்ல. அது மலையேறுவது போன்ற கடினமான காரியம். நீ ஒரு சிந்தனை வாதியும் எழுத்தாளனும்தான். சுகமாக மேஜையின் முன் ஒரு நாற்காலியில் அமர்ந்துகொண்டு, படபடவென்று ஒரு கட்டுரையை எழுதித்தள்ளி விடுவதும், பாடம் கற்பிப்பதாகக் கற்பனை செய்து கொள்வதும் எளிது. ஆனால், உன் கருத்துக்களை நடைமுறைப் படுத்துவதும், இப்பரிசோதனையைச் செய்து முடிப்பதும் மிகவும் கடுமையானவை."

"இதே காரணங்களால்தான் நான் நேரடி அனுபவம் பெற விரும்புகிறேன். உண்மையின் அடிப்படையில் சில முடிவுகளுக்கு வர விரும்புகிறேன்" என்றேன் நான்.

முடிவில் கல்வி அதிகாரி ஒப்புக் கொண்டார்:

"சரி, சரி. உனக்கு அவ்வளவு ஆர்வம் இருந்தால், ஒரு வருடத் திற்கு முயற்சி செய். ஒரு ஆரம்பப்பள்ளியில் நான்காம் வகுப்புக்குப் பாடம் எடுக்க நான் உனக்கு ஏற்பாடு செய்கிறேன். இதோ

பாடத்திட்டத்தில் ஒரு பிரதி. இவை பாடப்புத்தகங்கள். இவை விடுமுறை மற்றும் கல்வித்துறை விதிமுறைகள்" என்றார்.

அந்தத் தாள்களை நான் வேண்டா வெறுப்பாகப் பார்த்தேன். பாடத்திட்டத்தை எடுத்துச் சட்டைப்பைக்குள் வைத்துக் கொண்டேன். பாடப்புத்தகங்களைக் கட்டிக்கொண்டிருந்தபொழுது கல்வி அதிகாரி, "இதோ பார்! நீ விரும்பியபடி எந்தவிதப் பரிசோதனையையும் செய்து கொள்ளலாம். ஆனால், ஆண்டு இறுதியில் தேர்வுகள் உண்டு என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். இந்தத் தேர்வுகளின் முடிவைக் கொண்டுதான் உன் பணி மதிப்பிடப்படும்" என்றார்.

"ஆகட்டும். ஒரே ஒரு வேண்டுகோள். நீங்கள் மட்டும்தான் பரிசோதகராக இருந்து என் பணியை மதிப்பீடு செய்ய வேண்டும். நீங்கள்தான் இந்தப் பரிசோதனையைச் செய்ய என்னை அனுமதிக்கிறீர்கள். ஆகவே நான் உங்களிடமே நேரடியாக என் பணியைக் காண்பிக்க விரும்புவது இயற்கைதானே. எனக்கு வெற்றியோ தோல்வியோ எதுவாக இருந்தாலும் அதற்குரிய காரணத்தை நீங்கள் தான் புரிந்து கொள்ள முடியும் என்று நான் நினைக்கிறேன்."

கல்வி அதிகாரி புன்னகையுடன் எனக்கு அனுமதி கொடுத்த பின் அவரது அலுவலகத்திலிருந்து புறப்பட்டேன்.

## 2

பாடத்திட்டம் முழுவதையும் நான் படித்தேன். அதைச் சீர்திருத்த சில மாறுதல்கள் செய்ய வேண்டும் என்று நான் உறுதியாக நினைத்தேன். பாடப்புத்தகங்களையும் நான் பார்த்தேன். எது நல்லது எது சரியில்லை என்று எளிதாகப் புரிந்து கொண்டேன். என்னென்ன மாறுதல்கள் செய்யவேண்டும் என்பதை நான் அனுமானித்துக் கொண்டேன். முதல்நாளில் இருந்து கடைசிநாள் வரை என்ன செய்யவேண்டும் என்று என் பணி முழுவதன் திட்டத்தையும் என் அகக் கண்ணிலேயே கண்டுகொண்டேன். தேர்வுகள், தேர்வு முடிவுகள் முதலியவற்றுக்கு எத்தனை நாட்கள் தேவைப்படும் என்பதையும் நான் கணக்கிட்டுக் கொண்டேன். திட்டம் முழுவதுமே தயாராகிவிட்டது போல் தோன்றியது. எத்தனைநாள் வேலை, எந்த முறையில் நிறைவேற்றுவது, விளைவு இவற்றையும் திட்டமிட்டேன். நான் என் சிந்தனைகளிலேயே மூழ்கிப்போயிருந்ததால் இரவு இரண்டு மணியாகி விட்டதுகூடத் தெரியவில்லை. மறுநாளுக்குரிய பாடக் குறிப்புகளைத் தயாரித்தேன். நான் படுக்கச் செல்லும்போது காலை மணி மூன்று ஆகி விட்டது.

மறுநாள் எனக்கு ஒரே உற்சாகம்; முழுமையான தன்னம் பிக்கை; அவசரமும்கூட. சீக்கிரமே குளித்து, காலை உணவருந்தி, குறிப்பிட்ட பள்ளியைக் குறித்த நேரத்தில் சென்று அடைந்தேன். பள்ளியின் கதவுகள் திறக்கப்படவில்லை. தலைமை ஆசிரியர் வந்திருக்கவில்லை. பள்ளிச்சாவிகளைப் பெற்று வருவதற்காகப் பள்ளிச் சேவகன் அவர் வீட்டுக்குப் போயிருந்தான். கொஞ்சம் கொஞ்சமாக வந்து சேர்ந்து கொண்டிருந்த குழந்தைகள் சாலையில் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

பள்ளி தொடங்குவதற்காக நான் ஆவலோடு காத்திருந்தேன். என்னுடைய வேலையைத் தொடங்கவும் வகுப்பை நடத்தவும் எனக்கு ஒரே ஆவல்; என்னுடைய புதிய திட்டத்தை நடைமுறைப் படுத்த ஒரே துடிப்பு. வகுப்பில் அமைதியையும் ஒழுங்கையும் நிலவச் செய்ய எனக்கு ஆர்வம். வகுப்பறைப் போதனையைச் சுவையுடையதாகச் செய்யவும் என் மாணவர்களை என் வழிக்குக் கொண்டு வரவும் மிகுந்த ஆவல். என்னுடைய இதயம் படபட வென்று அடித்துக் கொண்டிருந்தது.

மணி அடித்ததும் பையன்கள் வகுப்புக்குள் நுழைந்தார்கள். தலைமை ஆசிரியர் என்னை என் வகுப்புக்கு அழைத்துச் சென்று மாணவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"மாணவர்களே கேளுங்கள். திரு. லட்சுமிராம்தான் இன்று முதல் உங்கள் வகுப்பின் ஆசிரியர். அவர் சொன்னபடி கேட்க வேண்டும். குறும்புகள், அழும்புகள் செய்யக்கூடாது. ஜாக்கிரதை!" என்றார் அவர்.

அடுத்த பன்னிரண்டு மாதங்களுக்கு என்னிடம் ஒப்படைக்கப் பட்ட அந்தக் குழந்தைகளை நான் நோக்கினேன். அவர்களில் சிலர் புன்னகை புரிவதையும், சிலர் ஒருவருக்கொருவர் கண்ஜாடை செய்து கொள்வதையும், சிலர் பிகுவாகத் தலை அசைப்பதையும் பார்த்துக்கொண்டேன். ஓரிருவர் அதிசயப் பொருளைப்போல என்னைக் கேலியாக நோக்கினர். மற்றையோர் ஒன்றிலும் சம்பந்த மில்லாதவர்கள் போல இருந்தனர்.

நான் அவர்களைப் பார்த்தேன். "இந்தக் குழந்தைகளுக்குத் தான் நான் கற்றுத்தர வேண்டும். முற்றிலும் புதிய குறும்புக்காரக் கூட்டம்." எனக்கு நானே சிந்தித்துக் கொண்டேன். எனக்குச் சிறிது நடுக்கம்தான். ஆனால் சமாளித்துக் கொண்டேன். "ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை. போகப் போகச் சரியாகிவிடும்" என்று எனக்கு நானே கூறிக் கொண்டேன்.

முந்கூங்ய இரவு நான் தயாரித்த குறிப்புகளைச் சட்டைப் பையிலிருந்து எடுத்தேன். இன்று மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளின் பட்டியலை ஒருமுறை பார்த்துக் கொண்டேன்.

முதலில் மௌன விளையாட்டு; அடுத்தது வகுப்பறையின் சுத்தம்; அதை அடுத்து கூட்டுப்பாடல். கடைசியாக மாணவர் களுடன் உரையாடல்.

“சரி. முதலில் மௌன விளையாட்டு விளையாடலாம். நான் ‘ஓம் சாந்தி’ என்று சொல்வேன். நீங்கள் அனைவரும் மௌனமாய் இருக்க வேண்டும். உடனே நான் கதவைச் சாத்திவிடுவேன். வகுப்பறை இருட்டாகிவிடும். நாம் அனைவரும் மௌனமாக இருப்பதால், வெளியே நம்மைச் சுற்றிக் கேட்கும் ஓசைகளைக் கேட்கலாம். பெரிய வேடிக்கையாக இருக்கும். ஈக்கள் நம்மைச் சுற்றி ரீங்காரம் செய்வதை நீங்கள் கேட்கலாம். ஏன் நீங்கள் சுவாசம் செய்யும் ஓசையைக்கூடக் கேட்கலாம். அதன்பிறகு நான் ஒரு பாட்டுப் பாடுவேன். நீங்கள் கேட்டுக் கொண்டிருப்பீர்கள்” என்றேன் நான்.

பேசி முடித்துவிட்டு விளையாட்டைத் தொடங்கினேன். “ஓம் சாந்தி” என்றேன். ஆனால் பையன்கள் தொடர்ந்து பேசிக் கொண்டே இருந்தார்கள்; ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளி னார்கள். மீண்டும் மீண்டும் நான் ‘ஓம் சாந்தி’ ‘ஓம் சாந்தி’ என்று உச்சரித்தேன். ஒரு பலனையும் காணோம். எனக்குச் சிறிது சங்கடம் உண்டாயிற்று. அவர்களைக் கோபித்து ஒழுங்காக இருக்குமாறு கூச்சல் இடவும் முடியவில்லை.



இந்தக் குழந்தைகளுக்குத்தான் நான் கற்றுத்தரவேண்டும். முற்றிலும் புதிய குறும்புக்காரக் கூட்டம். எனக்குத் சிறிது நடுக்கம்தான்.

அவர்களை அடித்து அடங்க வைக்கவும் முடியவில்லை. ஆகவே நான் விளையாட்டைத் தொடர்ந்தேன். ஜன்னல்களின் கதவுகளையும், அறைக் கதவையும் மூடினேன். வகுப்பறை இப் பொழுது இருட்டாக இருந்தது. மாணவர்கள் தங்கள் சொந்த விளையாட்டைத் தொடங்கி விட்டார்கள். சிலர் தாழ்ந்த குரலில் ஒரு ஹூம்காரம் செய்தார்கள்; சிலர் பூனைகளைப்போல் ஒலி யெழுப்பத் தொடங்கினார்கள்; சிலர் பாதங்களைத் தரையில் தட்டி ஓசையெழுப்பினார்கள். ஒரு பையன் கை தட்டினான். உடனே மற்றவர்களும் சேர்ந்து கொண்டார்கள். மற்றொருவன் சிரித்தான்; வகுப்பு முழுவதும் அவனைத் தொடர்ந்து சிரித்தது.

எனக்கு ஏற்பட்ட வெட்கத்தில் என் முகம் வெளுத்தது. எல்லாக் கதவுகளையும் திறந்துவிட்டு, சிறிது நேரம் வகுப்பறையை விட்டு வெளியே வந்தேன். மறுபடியும் நான் வகுப்பறைக்குள் நுழைந்தபொழுது, வகுப்பறை முழுவதிலும் ஒரே களேபரம். குழந்தைகள் ஒருவரைஒருவர் பார்த்து “ஓம் சாந்தி” என்று என்னைப் போன்ற குரலில் சொல்லிக் கொண்டார்கள். சிலர் ஜன்னல்களின் கதவுகளைத் தாழிட்டுக் கொண்டிருந்தார்கள்.

‘என்னுடைய பாடக் குறிப்புகள் நடைமுறைக்கு ஒத்து வருவதாக ஆகிவிட்டன என்று நான் நினைத்தேன். வீட்டில் பாடக் குறிப்புகளைத் தயாரிப்பதும், பாடம் நடத்துவதாகக் கற்பனை செய்து கொள்வதும் மிகவும் எளிய காரியங்கள். நடைமுறையில் அது ஒரு கடினமான காரியம். இந்த நிலைமையில், சப்தம் அலங் கோலம் ஆகிய சூழ்நிலைகளிலேயே ஆரம்பத்திலிருந்தே வளர்க்கப் பட்ட குழந்தைகளின் இந்தக் கூட்டத்தில் மௌன விளை யாட்டைப் பற்றிப் பேசுவது அபத்தம். நான் எங்கே தவறு செய்தேனோ அங்கிருந்து நான் மறுபடியும் புதிதாக இப்பொழுது ஆரம்பிக்க வேண்டும். முதல் அடி எடுத்து வைத்தவுடனேயே நான் சறுக்கிவிட்டது ஒருவகையில் நல்லதாயிற்று. நாளை நான் வேறு ஒரு அணுகுமுறையைப் பின்பற்றிப் பார்ப்பேன்.

“மாணவர்களே! இனிமேல் இன்றைக்கு வகுப்புகள் இல்லை. நாம் நாளை சந்திப்போம். இன்று உங்களுக்கு ஓய்வு” என்று நான் அறிவித்தேன். ‘ஓய்வு’ என்ற வார்த்தையைக் கேட்டதுமே, பையன்கள் “விடுமுறை” என்று கூச்சல் இட்டுக்கொண்டே வகுப்பை விட்டு வெளியே ஓடினார்கள். அவர்கள் குதியாட்டம் போட்டுக் கொண்டு ஓடியதும் பெருங்கூச்சலிட்டதும், மற்ற வகுப்பு மாணவர்களையும் ஆசிரியர்களையும் என்ன நடந்தது என்று திகைக்க வைத்தது. தலைமை ஆசிரியர் தம் அறைவிட்டு வெளியே வந்து என்னைப் பார்த்தார். “என்ன தைரியம்? எப்படி நீங்கள் மாணவர்களுக்கு விடுமுறை தரலாம்? பள்ளி விடுவதற்கு இன்னும்

இரண்டு மணிநேரம் உள்ளதே" என்று அவர் சிடுசிடுப்பாகக் கூறினார். அவருக்கு ஒரே கோபம்.

"மாணவர்கள் இன்று எதையும் கிரகிக்கும் மனநிலையில் இல்லை. அவர்கள் துறுதுறுவென்று இருந்தார்கள். மௌனவிளையாட்டின்பொழுது நான் இதைக் கவனித்தேன்" என்றேன் நான்.

"அனுமதியின்றி மாணவர்களை விட்டுவிடக்கூடாது" என்று தலைமை ஆசிரியர் கண்டிப்பான குரலில் கூறினார். "ஒரு வகுப்பில் மாணவர்களை விட்டுவிட்டால், அடுத்த வகுப்பு மாணவர்கள் எல்லாம் பாதிக்கப்படுவார்கள். படிக்கவும் மாட்டார்கள். இப்படிப் பட்ட பரிசோதனைகளை எல்லாம் அனுமதிக்க முடியாது" என்று கூறிவிட்டு, "மாணவர்களின் கிரகிக்கும் மனோநிலைபற்றிய உங்கள் நவீன தத்துவங்களையெல்லாம் மூட்டைகட்டி வையுங்கள். மௌன விளையாட்டெல்லாம் மான்டிசோரி பள்ளிகளுக்குப் பொருத்தமாக இருக்கலாம். இம்மாதிரி ஆரம்பப் பள்ளிகளில் பளார் என்று ஒரு அறை. மாணவர்களின் பேச்சு மூச்சு இருக்காது. மற்ற ஆசிரியர்கள் எப்படிப் பாடம் நடத்துகிறார்களோ அப்படியே நீங்களும் நடத்துங்கள். அப்பொழுதுதான் ஆண்டிறுதித் தேர்வில் நல்ல முடிவுகளை எதிர்பார்க்கலாம். ஏற்கெனவே ஒருநாள் பாடத்தை இழந்துவிட்டு முட்டாள் பட்டம் கட்டிக் கொண்டீர்கள்" என்று ஏளனத்தோடு கூறினார்.

தலைமை ஆசிரியரைக் கண்டு நான் வருத்தம் அடைந்தேன். "ஐயா! பாடம் சொல்லிக் கொடுக்கும்பொழுது மாணவர்களை அடிப்பதே ஒவ்வொரு ஆசிரியருக்கும் வழக்கம். இதன் விளைவாக மாணவர்கள் 'ஆபாசமாக'வும் அடங்காப்பிடாரிகளாகவும், அமைதியற்றவர்களாகவும், சலசலப்புடனும் இருக்கிறார்கள். இங்கே நான்கு வருடம் படித்த பிறகு பையன்கள், ஆசிரியர்களைப் பார்த்துக் கூச்சலிடவும், உஸ் என்ற ஒலி எழுப்பவும் கைதட்டவும், கால்களை உதைக்கவும்தான் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குப் பள்ளிக்கூடத்தின் மேலேயே வெறுப்பு. ஒருநாள் வகுப்பு இல்லை என்றவுடன் மாணவர்கள் எவ்வளவு சந்தோஷமாக ஓடினார்கள் பார்த்தீர்களா?" இவ்வுண்மையைத் தலைமையாசிரியரால் மறுக்க இயலவில்லை "அப்படியா? நல்லது நீங்கள் இதற்கு என்னதான் செய்கிறீர்கள் என்று பார்ப்போம்" என்று கூறினார்.

## 3

நான் சிறிது கவலையோடு வீடு திரும்பினேன்.

"நாம் மேற்கொண்ட பணி மிகவும் கடினமானது" என்று

எனக்கு நானே கூறிக்கொண்டு அமர்ந்தேன். "உண்மையில் இது ஒரு கடுமையான பரிசோதனையாக இருக்கும். இருக்கட்டும் இருக்கட்டும். நான் தளர்ந்துவிட மாட்டேன். மௌன விளை யாட்டை இப்படி விளையாடக் கூடாது என்று எனக்குத் தெரிந் திருக்க வேண்டும். மான்டிசோரி பள்ளிகளில் விளையாட்டைத் தொடங்குவதற்கு முன்னர் நிறைய ஆயத்தப்பணிகள் செய்யப்படு கின்றன. நான் ஒரு முட்டாள். முதல் நாளே இதை ஆரம்பித்து விட்டேனே! என் மாணவர்களைப் பற்றி முதலில் அறிந்து கொண்டிருக்க வேண்டும்; எங்களுக்கிடையில் பரஸ்பரத் தொடர்பு ஏற்படுத்தியிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் நான் சொல்வதைக் கேட்பார்கள். என் சொற்படியும் நடப்பார்கள். இந்தப் பையன்களுக்கோ, பள்ளிக்கூடத்தைப் பிடிக்கவில்லை; அவர் களுக்குத் தேவை விடுமுறை. இவர்களுக்கிடையே பணிபுரிவது எளிதான காரியம் அல்ல."

மறுநாளைக்குரிய பணித்திட்டத்தைத் தயாரித்த பின்னரே நான் படுக்கைக்குச் சென்றேன். அன்று நடந்தவற்றையும் மறு நாளைய பணியையும் பற்றிக் கனவு கண்டுகொண்டே அன்றைய இரவைக் கழித்தேன்.

மறுநாள் பள்ளிக் கதவுகள் திறக்கும்பொழுது நான் பள்ளியில் இருந்தேன். பையன்கள் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். "ஐயா! இன்றைக்கும் விடுமுறை விட்டு விடுங்கள். இன்றும் நேற்றைப் போல் விடுமுறை வழங்குங்கள் ஐயா" என்று மாணவர்கள் கோஷம் போட்டனர்.

"நல்லது. இன்றும் நான் உங்களை விட்டுவிடுகிறேன். ஆனால் முழுநாளும் இல்லை. இரண்டு மணிநேரம் மட்டும்தான். அதற்கு முன் நான் சொல்லும் கதையைக் கேட்க வேண்டும். அதன்பிறகு மற்ற விஷயங்களைக் கவனிப்போம்."

நான் கதையை ஆரம்பித்தேன். "முன்னொரு காலத்தில் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு ஏழு மனைவிமார்கள். ராஜாவின் ஒவ்வொரு மனைவிக்கும் ஒரு இளவரசனும் இளவரசியும்...!"

கதையைக் கேட்பதற்காகப் பையன்கள் என்னைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள். கொஞ்சம் சலசலப்பும், நெருக்கித் தள்ளுவதும் இருந்தன. ஆகவே "மாணவர்களே! இது சரியல்ல. என்னைச் சுற்றி ஒழுங்காக உட்காருங்கள்" என்று கூறினேன். இதனால் கொஞ்சம் ஒழுங்கு ஏற்பட்டது. "ஐயா, கதையைத் தொடருங்கள். அடுத்த என்ன நிகழ்ந்தது?" என்று கேட்டார்கள்.

புன்னகையுடன் நான் கதையைத் தொடர்ந்தேன். ஒவ்வொரு இளவரசிக்கும் சொந்தமாக ஒரு அரண்மனை. "ஒவ்வொரு அரண் மனையின் தோட்டத்திலும் ஏழு முத்துக் காய்க்கும் மரங்கள்..."

மாணவர்கள் ஆடாமல் அசையாமல் கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். வகுப்பு முழுவதும் ஒரே அமைதி. எங்கும் சத்தமோ அசைவோ இல்லை. வகுப்பின் நிசப்தத்தைப் பார்த்த தலைமைஆசிரியர் அங்கு என்ன நடக்கிறது என்று பார்க்க வந்து விட்டார். அவருக்கு ஒரே ஆச்சரியம். "நீங்கள் கதை சொல் கிறீர்களா?" என்று அவர் என்னைப் பார்த்துக் கேட்டார்.

"ஆம். ஒரு கதையும், ஒரு புதுவிதமான மௌன விளை யாட்டும்" என்றேன் நான்.

தலைமைஆசிரியர் திரும்பிச் சென்றார். நான் கதையைத் தொடர்ந்தேன். அடுத்த வகுப்பறையில் ஏதோ ஒரு சத்தம். என் பையன்களை அதைக் கவனிக்கச் சொன்னேன். "பார்த்தீர்களா? இந்தச் சப்தம் நமக்கு எவ்வளவு இடையூறு செய்கிறது?" என்றேன். எல்லா மாணவர்களும் அதை ஆமோதித்தார்கள்.

பாதிக்கதையில் நான் நிறுத்திக் கொண்டேன். "மாணவர்களே! இப்பொழுது சொல்லுங்கள் உங்களுக்கு விடுமுறை வேண்டு மானால் இங்கே நிறுத்திக் கொள்வோம். இல்லையென்றால் கதையைத் தொடர்வோம்" என்றேன் நான்.

"ஐயா! ஐயா! தயவு செய்து கதையைத் தொடருங்கள். விடு முறை வேண்டாம்" தனித்தனியே ஒவ்வொருவரும் கூறினார்கள்.

"நல்லது. அப்படியானால் கதையைத் தொடருவோம். ஆனால்



மாணவர்கள் ஆடாமல் அசையாமல் கூர்ந்து கேட்டார்கள். வகுப்பு முழுவதும் ஒரே அமைதி. எங்கும் சத்தமோ அசைவோ இல்லை.

முதலில் நாம் சிறிது கலந்து பேசுவோம். அப்புறம் இன்று முழுவதும் கதையைக் கேட்போம்."

ஒரு பையன் இடைமறித்தான், "கலந்து பேசுவதை நாளைக்கு வைத்துக் கொள்வோம். இன்றைக்குக் கதையை மட்டும் கேட்போம். கதையைக் கடைசிவரை கேட்டு முடித்து விடுவோம்."

"கதை மிகவும் நீளமானது; நான்கு நாட்களுக்குத் தொடரும்" என்றேன் நான்.

"ஓ! அப்படியா? அவ்வளவு நீளமா. மிகவும் சுவாரஸ்யமாக இருக்கும்!" என்று அனைவரும் ஆச்சரியத்தோடு கூறினார்கள்.

நான் வகுப்பின் வருகைப் பட்டியலை எடுத்து மாணவர்களின் பெயர்களை எழுதினேன். எல்லாருடைய பெயர்களையும் எழுதியபின் அவர்களின் வருகையைக் குறித்தேன். எல்லாம் விரைவாகவும் ஒழுங்காகவும் நடைபெற்றது.

"மாணவர்களே! நாள்தோறும் முதலில் வருகையைக் குறிப்போம். அப்புறம் கதை" என்றேன்.

கதையைத் தொடர்ந்தேன். கடைசி மணி அடிக்கும்வரை கதை தொடர்ந்தது. அன்றையதினம் பள்ளி முடிவடைந்தது.

பள்ளி நேரம் முடிந்தாலும் கதை முடியும் வரை மாணவர்கள் காத்திருந்து கேட்க விரும்பினார்கள். "இன்றைக்குப் போதும். கதையை மீண்டும் நாளை தொடர்வோம். அதற்கு முன்னர் மற்றொரு விஷயத்தை முடிவு செய்ய வேண்டும். நாளைக்கு உங்களுக்கு விடுமுறை வேண்டுமா? அல்லது கதை வேண்டுமா?" என்று கேட்டேன்.

"கதை. கதை." வகுப்பு முழுவதும் ஒரே குரலில் கூவியது. வகுப்பறையை விட்டு மாணவர்கள் வெளியே செல்லும்பொழுது, வராந்தாக்களில் 'கதை' என்ற சொல் எதிரொலித்தது.

'ஆண்டவனுக்கு நன்றி! இன்றைய தினத்தைக் காப்பாற்றி விட்டேன். கதை என்பது ஒரு அற்புதத்தைச் செய்கிறது. இது முற்றிலும் உண்மை.'

## 4

மறுநாள், நான் வகுப்பில் நுழைந்ததும் பையன்கள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். எல்லார் முகங்களிலும் புன்முறுவல். கதையை ஆரம்பிக்கும்படி கெஞ்சினார்கள்.

"முதலில் வருகைப் பதிவு" என்று நான் ஞாபகப்படுத்தினேன். "அதன்பிறகு சிறிது உரையாடல். அடுத்து கதை." என் சட்டைப் பையிலிருந்து ஒரு சாக்பீசை எடுத்துத் தரையில் ஒரு பெரிய வட்டம்

போட்டேன். "ஒவ்வொரு நாளும் இந்த வட்டத்தைச் சுற்றி உட்காருங்கள்" என்று சொல்லிக் கொண்டே நானும் உட்கார்ந்தேன்.

"இந்தப் பக்கம். உங்களுக்குக் கதைசொல்ல நான் இந்தப் பக்கம் உட்கார்ந்து கொள்வேன்" என்றேன்.

பையன்கள் உட்கார்ந்தார்கள். நான் வருகையைப் பதிந்து விட்டுக் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். அவர்கள் நன்றாகக் கதை கேட்கும் மனோபாவத்துடன் இருந்தார்கள். மந்திரத்தால் மயங்கியவர்கள் போல கதையைக் கேட்டார்கள். ஒரு கட்டத்தில் நான் கதையை நிறுத்திவிட்டு, "கதை உங்களுக்குப் பிடித்திருக் கிறதா?" என்று கேட்டேன்.

"பிடித்திருக்கிறது. மிகவும் பிடித்திருக்கிறது" என்று எல்லாரும் ஒரே குரலில் கூறினார்கள்.

"கதை கேட்க உங்களுக்குப் பிடிக்கிறது. ஒரு கதையைப் படிக்க விருப்பமா?" என்று கேட்டேன்.

"படிக்கவும் விருப்பம்தான். ஆனால் கதைப்புத்தகங்கள் எங்கே?" என்று அவர்கள் கேட்டார்கள்.

"சரி. நான் கதைப்புத்தகங்கள் கொண்டுவந்தால், நீங்கள் படிப்பீர்களா?" என்று கேட்டேன்.

"ஓ! நிச்சயமாக!"

"ஆனால் நீங்கள் கதை சொல்லவும் வேண்டும். நாங்கள் கதை படித்தால் மட்டும் போதாது" என்று கெட்டிக்காரன் ஒருவன் இடைமறித்தான்.

"ரொம்ப சரி" என்று சொல்லிவிட்டு மேலே கதையைத் தொடர்ந்தேன்.

மணி அடித்தது. பையன்கள் எல்லாரும் என்னையே சூழ்ந்து கொண்டிருந்தார்கள். சிலர் என்னை அன்போடு பார்த்தார்கள். சிலர் என் கையைத் தொட முயன்றார்கள். வேறு சிலர் மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போல் நின்றார்கள்.

"வெளியே போகலாம். பள்ளி முடிந்துவிட்டது. எல்லாரும் வெளியில் செல்லுங்கள்" என்றேன் நான்.

"போக மாட்டோம். நீங்கள் மட்டும் கதையைத் தொடர்வ தானால் மாலை எவ்வளவு நேரமானாலும் நாங்கள் இருப்போம்" என்று ஒரு சிலர் கூவினார்கள்.

நான் அவர்களை அனுப்பி வைத்தேன். மற்ற ஆசிரியர்கள் என்னிடம் வந்தார்கள். ஒருவர் கூறினார். "நீங்கள் ஓர் அதிசயத்தை நிகழ்த்தி விட்டீர்கள்! எங்கள் பையன்களும் கதைகள் கேட்கி றார்கள். பாட போதனைகளை அவர்கள் கவனித்துக் கேட்ப தில்லை; உங்கள் கதையைக் கேட்க உங்கள் வகுப்புக்கு வர அனுமதி கேட்கிறார்கள்; இல்லாவிட்டால் எங்களைக் கதை சொல்லச்

சொல்கிறார்கள்."

"அப்படியானால் நீங்களும் ஒரு கதையைச் சொல்லுங்கள்" என்றேன் நான்.

"ஆனால் யாருக்குக் கதை சொல்லத் தெரியும்? அவர்களுக்கு பிடித்த மாதிரி ஒரு கதைகூட எங்களுக்குத் தெரியாது."

நான் புன்னகை புரிந்தேன்.

## 5

அடுத்த நாள் ஞாயிற்றுக் கிழமை. நான் கல்வி அதிகாரியைச் சந்தித்தேன். "லட்சுமிராம் நீ வகுப்பு முழுவதும் கதை சொல்லிக் கொண்டே இருக்கிறாயாமே? தலைமை ஆசிரியர் சொல்கிறார்."

"உண்மைதான். கதை சொல்வது தற்போதைய திட்டம்."

"ஆனால், எப்பொழுது உன் பரிசோதனையை ஆரம்பிக்கப் போகிறாய்? விதிக்கப்பட்ட பாடங்களை உன்னால் எப்படி முடிக்க முடியும்?"

"ஐயா! பரிசோதனை ஏற்கெனவே தொடங்கிவிட்டது. மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் இடையில் நெருக்கம் உண்டாக, கதை என்பது ஒரு மந்திர மாத்திரை என்பதை நான் என் சொந்த அனுபவத்தில் கண்டேன். நான் கதை சொல்ல ஆரம் பித்தது முதல், நான் சொல்வதைக் கேட்க விரும்பாத மாணவர்கள், சத்தம் போட்டும், பூனைகள்போல் கத்தியும் முதல்நாள் என்னை நிதானம் இழக்கச் செய்த அதே மாணவர்கள் முற்றிலும் அடங்கிப் போனார்கள். இப்பொழுதெல்லாம் அவர்களுக்கு என்மேல் தனிப்பிரியம். நான் சொல்வதைக் கேட்கிறார்கள். நான் குறிக்கும் இடத்தில் உட்காருகிறார்கள். அவர்களை அமைதிப்படுத்த நான் சத்தம் போடவேண்டியதில்லை. பள்ளி முடிந்த பிறகும்கூட அவர்கள் வீட்டுக்குச் செல்ல விரும்புவதில்லை."

"சரி. சரி. நீ சொல்வது எனக்குப் புரிகிறது. உன்னுடைய புதிய போதனை முறையை எப்பொழுது ஆரம்பிக்கப் போகிறாய்?"

"நல்லது ஐயா. இதுவேதான் புதிய போதனைமுறை. கதை கூறுவதன்மூலம் நான் அவர்கள் ஒழுங்காக நடந்து கொள்ளக் கற்பிக்கிறேன். அவர்கள் நன்னடத்தையை இதன்மூலம் கற்றுக் கொள்ளப் பழக்கப்படுத்துகிறேன். அவர்களுக்கு இலக்கிய அறிவும் மொழித்திறனும் இதன்மூலம் புகட்டப்படுகின்றன. இனி அவர் களுக்கு மற்றப்பாடங்களும் இப்படியே போதிக்கப்படும்"

"ஆண்டு முழுவதும் கதை சொல்லியே கழித்துவிடாமல் பார்த்துக் கொள்ளும்" என்றார் கல்வி அதிகாரி.

## 6

மாணவர்கள் வழக்கம்போல் கதை கேட்பதற்காக வட்டமாக உட்கார்ந்திருந்தார்கள். நான் கரும்பலகையில் கீழ்க்கண்டவாறு எழுதினேன்: அ. வருகைப் பதிவு, ஆ. உரையாடல், இ. கதை.

வருகைப் பதிவுக்குப் பின் நான் அவர்களிடம் "மாணவர்களே! எங்கே உங்கள் நகங்களைப் பார்க்கலாம். ஒவ்வொருவராக எழுந்து நின்று கைகளை நீட்டுங்கள். நான் பார்க்கிறேன்" என்றேன்.

நகங்கள் நீண்டு வளர்ந்து அழுக்கடைந்திருந்தன. "இப்போது உங்கள் குல்லாய்களை எடுங்கள்" என்றேன். குல்லாய்கள் அழுக்கடைந்தும் கிழிந்தும் காணப்பட்டன.

பையன்கள் தங்கள் குல்லாய்களைப் பார்த்தார்கள்.

"உங்கள் பொத்தான்களைப் பாருங்கள்'' என்று நான் தொடர்ந்தேன். "அவை சரியாக இருக்கின்றனவா?"

அவர்கள் தங்கள் உடைகளைப் பார்த்தார்கள். சிலரிடம் மட்டுமே எல்லாப் பொத்தான்களும் இருந்தன.

"இப்போதைக்கு இது போதும். கதைக்கு நேரமாகிறது" என்றேன்.

நான் கதையை ஆரம்பத்தேன். ஒரு பையன் எழுந்து நின்றான்.

"ஐயா, நீங்கள் எங்களுக்குக் கொடுக்கப் போவதாகச் சொன்ன கதைப் புத்தகங்கள் என்ன ஆயின?" என்றான்.

"இன்னும் ஓரிரண்டு நாட்களில் புத்தகங்களைத் தருவேன். இந்தப் புத்தகங்களைப் படிக்க விருப்பம் உள்ளவர்கள் கைகளை உயர்த்துங்கள்" என்றேன்.

எல்லாருடைய கைகளும் உயர்ந்தன.

"இப்பொழுது, இதுவரை நீங்கள் படித்துள்ள கதைப் புத்தகங்களின் பெயர்களைச் சொல்லுங்கள்" என்றேன்.

ஓரிரு பையன்கள் மட்டும் ஒன்றோ இரண்டோ கதைப் புத்தகங்கள் படித்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் நான்காம் வகுப்பு மாணவர்கள். ஆனால் ஒருவர்கூடப் பாடப்புத்தகங்களைத் தவிர வேறு புத்தகங்களைப் படித்ததே இல்லை.

"நீங்கள் வார, மாத இதழ்கள் ஏதாவது படிக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

"நாங்கள் பாலமித்ரா படிக்கிறோம்" என்று இரண்டே மாணவர்கள் கூறினர்.

"நல்லது. நாம் கதைப்புத்தகங்கள் வரவழைப்போம். நீங்கள் அவற்றைப் படிக்கலாம். உங்களுக்கு திருப்தி ஏற்படும் வரை படிப்பதற்கான புத்தகங்கள் நமக்குக் கிடைக்கும்" என்றேன் நான்.

அவர்களுக்கு மிகுந்த சந்தோஷம் ஏற்பட்டதைப்போல் தோன்றியது.

நான் கதையைத் தொடர்ந்தேன். மாலையில் மணி அடித்தது. பள்ளி முடிந்தது. "நீங்கள் வீட்டிற்குப் போகும் முன் ஒரு விஷயம் சொல்லப்போகிறேன். உட்கார்ந்து கேளுங்கள்" என்றேன் நான். அவர்களிடம் நகங்களை வெட்டச் சொன்னேன். "முடியுமானால் நீங்களே வெட்டிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் உங்கள் பெற் றோர்களின் உதவியை நாடுங்கள். இல்லாவிட்டால் நாவிதரிடம் வெட்டிக் கொள்ளுங்கள்."

ஒரு பையன் "நான் இப்பொழுதே நகங்களை வெட்டிக் கொள்கிறேன். என் பல்லாலேயே கடித்து எடுத்து விடுவேன்" என்றான்.

"இல்லை. இல்லை. நகம்வெட்டி அல்லது கத்திரிக்கோலைத் தான் நீ உபயோகப்படுத்த வேண்டும்" என்று கூறிவிட்டு வகுப்பு முழுவதையும் பார்த்து, "சிறிது வேடிக்கை பார்ப்போமா?" என்றேன்.

அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. "நீங்கள் குல்லாய் அணியாமல் பள்ளிக்கு வரலாம் என்று நான் கருதுகிறேன். அழுக்குக் குல்லாய்களை ஏன் அணிய வேண்டும்? மேலும் குல்லாய் அணிவதால் என்ன பயன்?" என்று கேட்டேன்.

அவர்கள் சிரிக்க ஆரம்பித்தார்கள். "தலையில் ஒன்றும் அணி யாமல் பள்ளிக்கு வர முடியாது. தலைமைஆசிரியர் கோபிப்பார்" என்றார்கள்.

"சரி. நான் நாளைக்குத் தலையில் ஒன்றும் அணியாமல் வருவேன், நீங்களும் அப்படியே செய்வீர்களா?" என்றேன்.

அவர்களுக்குச் சந்தேகம்.

"எங்கள் பெற்றோர்கள் அனுமதிக்காவிட்டால் என்ன செய்வது?"

"குல்லாய் என்பது ஒரு தேவையற்ற சுமை என்று அவர் களுக்குச் சொல்லுங்கள். மேலும், இந்தக் குல்லாய்கள் கிழிந்தும் அழுக்காகவும் இருக்கின்றன. அழுக்கான குல்லாய்களை அணிவதைவிட ஒன்றும் அணியாமல் இருப்பதே மேல். இல்லையா? அப்புறம், இல்லாத பொத்தான்களைத் தைக்கச் சொல்லுங்கள். பொத்தான்கள் இல்லாத உடைகள் ஆபாசமாக இருக்கின்றன அல்லவா?"

இவ்வாறு கூறியது வீடு செல்லும்பொழுதே அவர்களைச் சிந்திக்க வைத்தது.

தலைமைஆசிரியர் என்னைக் கூப்பிட்டனுப்பினார். "திரு. லட்சுமிராம், நீங்கள் பிரச்சினைகளை உண்டாக்குகிறீர்கள். இம்மாதிரி வேண்டாத விஷயங்களில் எல்லாம் நீங்கள் ஏன்

ஈடுபடுகிறீர்கள். நகங்களை வெட்டுவதும், பொத்தான்களைத் தைப்பதும்... உங்கள் புதிய போதனை முறையைப் பின்பற்ற வேண்டியதுதானே. அதற்காகத்தானே நீங்கள் இங்கு வந்தீர்கள். நகங்களை வெட்டுவதும், பொத்தான்களைத் தைப்பதும் பெற்றோர் களின் வேலை. பள்ளிக் கூடத்தின் வேலை அல்ல. நாம் ஏன் அதைப்பற்றிக் கவலைப்படவேண்டும். மேலும், பையன்கள் குல்லாய் அணியாமல் வெறும் தலையோடு பள்ளிக்கு வர முடியாது. அது தரக்குறைவானது. அதற்குக் கல்வித்துறையின் அனுமதி வேண்டும்."

"ஐயா! இதுதான் புதிய அணுகுமுறை. இவைதான் கல்வியில் பின்பற்றப்பட வேண்டிய புதிய முறைகள். அழுக்கு உடை அணிந்த, ஒழுங்கீனமான பையன்களுக்குக் கற்பிக்கப்படவேண்டிய முதல் பாடம் என்னவாக இருக்க முடியும். அவர்களுக்குச் சுத்தமும், ஒழுங்கும்தானே முதலில் கற்பிக்கப்படவேண்டும். மாணவர்களின் ஆபாசமான தோற்றத்தை நான் சுட்டிக் காட்டியபொழுது அவர்களே வெட்கம் அடைந்தார்கள். இவ்வளவு அழுக்கோடு ஒருவர் இருக்கக் கூடாது என்பது அவர்களுக்குத் தெரியும். எப்படி என்று சொல்லிக் கொடுத்தால் பலர் தூய்மையாகவும் ஒழுங் காகவும் இருக்க முயற்சி செய்வார்கள் என நான் உறுதியாக நம்புகிறேன். குல்லாய்களைப் பொறுத்தமட்டில், நான் அந்த விஷயத்தைக் கல்வி அதிகாரியின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். அவர் அனுமதிக்காவிட்டால், உத்தேசிக்கப்பட்ட இந்த மாற்றம் கைவிடப்படும்."

அன்று இரவு உணவு அருந்தியபின் நான் கல்வி அதிகாரியைச் சந்திக்கச் சென்றேன்.

"இந்த நேரத்தில் என்ன காரியமயாக இங்கு வந்தாய்?" என்று கேட்டார் அவர்.

"ஐயா, ஒரு சிறிய வேண்டுகோள்."

"சரி?

"நானும் பையன்களும் பள்ளிக்குக் குல்லாய் அணியாமல் வர முடியுமா?"

"ஏன்?"

"அவர்கள் குல்லாய்கள் மிகவும் அழுக்காய் இருக்கின்றன. குல்லாய்களும பல தரத்தில் இருக்கின்றன. அவர்கள் பள்ளிக்குக் குல்லாய் அணிந்து வராவிட்டால் என்ன? இந்தச் சிறிய வயதில் அவர்களின் தலையில் இந்தச் சுமை இல்லாமல் இருந்தால் நல்லது அல்லவா?"

"மக்கள் இது வினோதமாகவும் கேலிக்கூத்தாகவும் இருப்பதாக நினைப்பார்கள். நமது தற்போதைய பரிசோதனையில் அவர்களின்

சமூகப் பழக்க வழக்கங்களில் தலையிட வேண்டியதில்லை என்று நான் கருதுகின்றேன். பள்ளியின் நான்கு சுவர்களுக்கிடையே பாடங்களைக் கற்றுக் கொடுப்பதில் என்ன முன்னேற்றங்களைக் கொண்டு வரலாம் என்பதோடு நிறுத்திக் கொள்ளலாம். இந்தக் குல்லாய் விவகாரத்தை விட்டுவிடு" என்றார் அவர்.

இது ஒரு தொலைநோக்கு இல்லாத கண்ணோட்டம் என்று நான் கருதினேன். இருந்தபோதிலும், என்னுடைய கருத்தை வலியுறுத்த வேண்டியதில்லை என்று நான் எண்ணினேன். இந்தக் கட்டத்தில் கல்வி அதிகாரியையும் பெற்றோர்களையும் விரோதித்துக் கொள்வது உகந்தது அல்ல என்று நான் கருதினேன். நான் என் வேண்டுகோளைத் திருத்திக் கொண்டேன்.

"வகுப்பறைகளில் மாணவர்கள் குல்லாய் அணியாமல், பாடம் படிப்பது ஆட்சேபகரமானதா?" என்று கேட்டேன்.

"இல்லவே இல்லை. வகுப்பு அறையில் நீ எந்த மாறுதலையும் செய்து கொள்ளலாம். காலப்போக்கில் மக்கள் அதற்குப் பழக்கப் பட்டுவிட்டால், அவர்கள் குல்லாய் அணியவேண்டும் என்று நான் வற்புறுத்த மாட்டேன்."

"ஐயா, மற்றொரு விஷயம். என்னுடைய வகுப்பில் நான் ஒரு நூல் நிலையம் தொடங்க விரும்புகின்றேன். அதற்கு எனக்கு நிதி உதவி கிடைக்குமா? என்று நான் கேட்டேன்.

"அதற்காக விசேஷ நிதி உனக்கு எப்படிக் கிடைக்கும்? உன்னுடைய பரிசோதனை ஒரு வகையில் உனக்கும் எனக்கும் இடையே உள்ள விவகாரம். நிதி ஒதுக்கீட்டு வரம்புகளுக்கு உட்பட்டுத்தான் பள்ளியை நடத்த முடியும். நிதி ஒதுக்கீட்டில் உன்னுடைய வகுப்புக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட சிறு தொகையைக் கொண்டுதான் உன்னுடைய தேவைகளைச் சரிக்கட்டிக்கொள்ள வேண்டும்."

"அப்படியானால் நான் என்ன செய்வது?"

"தற்காலிகமாக அந்த யோசனையை நிறுத்தி வை."

"நான் ஒரு திட்டம் வைத்திருக்கிறேன். நீங்கள் அனுமதித்தால் நான் அதை நடைமுறைப்படுத்த முடியும். ஒவ்வொரு மாணவனும் பாடப்புத்தகம் வாங்க வேண்டும் அல்லவா? மொழிப் பாடத் துக்கான பாடப் புத்தகங்கள், அவற்றுக்கான பாடக் குறிப்புகள், வரலாற்றுக்கு ஒரு பாடப்புத்தகம் இப்படியாக..."

"ஆமாம்"

"பையன்களிடம் பாடப்புத்தகங்கள் வாங்க வேண்டிய தில்லை என்று யோசனை கூறலாம். அதற்கு மாறாக அந்தப் பாடப்புத்தகங்கள் வாங்குவதற்கான விலையை நாமே வசூல் செய்து நல்ல சுவையான புத்தகங்களை வாங்கிவிடலாம். இது ஒரு நூல்

நிலையத்தை உருவாக்க உதவும்."

"சரி, பாடப்புத்தகங்களே இல்லாமல் நீ எப்படிப் பாடம் புகட்டுவாய்?"

"நான் அதைக் குறித்தும் சிந்தித்திருக்கிறேன். இது சம்பந்தமாக என் போதனை முறையைப் பின்பற்றுவேன். இதை நடைமுறைப் படுத்தும் பொழுது நான் உங்களுக்கு மனத்திருப்தியை ஏற்படுத்தி விடுவேன்."

"அப்படியே ஆகட்டும். இது உன்னுடைய பரிசோதனை. தேர்வு முடிவுகளுக்கு நீயே பொறுப்பாளி. ஆனால் ஒரு எச்சரிக்கை. கடைசியில் மாணவர்கள் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும். நான் உனக்கு ஆதரவாக இருக்கிறேன். அதில் சந்தேகம் இல்லை. ஆனால் விளைவைக் குறித்துத்தான் கொஞ்சம் அச்சப் படுகின்றேன்."

"ஐயா! தயவு செய்து என் முயற்சியை அனுமதியுங்கள். கடவுள் கிருபையால் நம் பரிசோதனைக்கு நல்ல பலன் கிடைக்கும்."

"ஆமாம். ஒருவகையில் புத்தகங்கள் வகுப்பு முழுவதற்கும் சொந்தமாகி விடும். வகுப்புக்கு அவை திரும்பக் கிடைக்க வேண்டும். பெற்றோர்களைச் சமாதானம் செய்து, புத்தகங்களை வகுப்பை விட்டு எடுத்துச் செல்ல வற்புறுத்தாமல், வகுப்பு நூல் நிலையத்துக்கே விட்டுவிடும்படி ஒப்புக் கொள்ளச் செய்யலாம். இது வகுப்பின் நிரந்தர நூல் நிலையத்துக்கு ஓர் ஆரம்பக் கருவாக இருக்கும். வருடாவருடம் நூல்நிலையத்துக்கும் புதிய புதிய புத்தகங்கள் வந்து கொண்டே இருக்கும். பெற்றோர்கள் இந்த ஏற்பாட்டை ஒப்புக் கொள்வார்களா என்பது யாருக்குத் தெரியும்? இருந்தாலும் இது ஒரு நல்ல அணுகுமுறைதான். முயற்சி செய்து பார். எல்லாவற்றுக்கும் முடிவில், பாடப்புத்தகங்கள் இல்லாமல் நீ எப்படிப் பாடங்களை நடத்தப் போகிறாய் என்பது எனக்கு இன்னும் சந்தேகமாகத்தான் இருக்கிறது."

"ஐயா! நான் அதற்கான திட்டம் வைத்திருக்கிறேன்." அவரிடம் விடைபெற்று வீடு வந்து சேர்ந்தேன்.

## 7

அடுத்தநாள் வழக்கம்போல் பள்ளி ஆரம்பம் ஆகியது. ஒருவேளை மாணவர்கள் குல்லாய் அணியாமல் வருவார்கள் என்று நான் நினைத்திருந்தேன். என் எண்ணம் தவறியது. மாணவர்கள் வெறும் தலையோடு பள்ளிக்குச் செல்வதைப் பெற்றோர்கள் மறுத்து விட்டார்கள் என எனக்குத் தெரியவந்தது. "வெறும் தலையோடு

எப்படி நீங்கள் பள்ளிக்குப் போக முடியும்? உங்கள் ஆசிரியருக்கும் பைத்தியம் போலும்" என்றார்களாம் பெற்றோர்கள்.

நான் அவர்களின் நகங்களைப் பார்த்தேன். யாரும் அவற்றை வெட்டவே இல்லை. வெட்டாததற்கு அவர்கள் பல வீட்டுப் பிரச்சினைகளைக் காரணங்களாகச் சொன்னார்கள். பொத்தான்களைத் தைப்பதற்கு யாருக்குத்தான் நேரம் இருக்கிறது? ஒரு தாயார் சொல்லி அனுப்பினார்கள். "ஐயா, ஆசிரியரே! பாடம் சொல்லித் தர வந்தால் தயவு செய்து பாடம் மட்டும் சொல்லிக் கொடுப்பதுடன் நிறுத்திக் கொள்ளுங்கள். அவ்வளவுதான். உங்களுக்கு இந்த வேண்டாத வேலையெல்லாம் எதற்காக? நகம் வெட்டுவதும் பொத்தான்கள் தைப்பதும்? அதைச் செய்வதும், இதைச்செய்வதும் தவிர எங்களுக்கு வேறு வேலை எதுவும் இல்லை என்று நினைத்தீர்களா? எங்கள் குழந்தைகள் இருக்கிறபடிதான் இருப்பார்கள். எங்களுக்கு மற்ற வேலைகளுக்காக நேரம் இல்லை. நீங்கள் சொல்வதை நாங்கள் செய்வோம் என்று எப்படி எதிர்பார்க்கிறீர்கள்?" இது ஒரு தாயாரின் ஏச்சு.

நான் வாயடைத்துப் போனேன். பையன்கள் சுத்தமாகவும், ஒழுங்காகவும் இருப்பார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். அதற்கு மாறாக இந்தச் செய்திதான் எனக்குக் கிடைத்தது. "சரி, நல்லது. இந்த முறையில் நாம் எதையும் சாதிக்க முடியாது. ஒருபுறம் பெற்றோரின் ஒத்துழைப்பைப் பெற வேண்டும். மறுபுறம் மாணவர்களிடம் சுத்தம், ஒழுங்கு வேண்டும் என்ற எண்ணத்தைப் புகட்ட வேண்டும்" என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

உரையாடலைக் கைவிட்டுவிட்டேன். கதையைச் சொல்ல ஆரம்பித்து முடித்து வைத்தேன்.

"இப்போது மற்றொரு கதை" மாணவர்கள் கோரினார்கள்.

"நாளைக்கு அடுத்த கதையை ஆரம்பிப்போம். இன்று நாம் சிறிது நேரம் விளையாடுவோம்" என்றேன் நான்.

"விளையாடுவதா?" பையன்களுக்கு ஒரே ஆச்சரியம்.

"ஆம். நாம் விளையாடுவோம். உங்களுக்கு என்னென்ன விளையாட்டுத் தெரியும்?"

"பல விளையாட்டுக்கள். ஆனால் நாம் இங்கே எப்படி விளையாட முடியும்?"

"ஏன் முடியாது?"

"இது பள்ளிக்கூடம். இங்கு யாரும் விளையாடுவதில்லை. இங்கு யாரும் விளையாடுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?"

"இருக்கலாம். ஆனாலும் நாம் விளையாடலாம். நானும் உங்களோடு சேர்ந்து விளையாடுவேன். வாருங்கள்."

சில பையன்கள் ஸ்தம்பித்துப் போய் நின்றார்கள். சிலர்



சில பையன்கள் ஸ்தம்பித்துப்போய்நின்றார்கள். சிலர் சந்தோஷக் கூக்குரலிட்டுக் கொண்டு விளையாட ஓடினார்கள்.

சந்தோஷக் கூக்குரலிட்டுக்கொண்டு விளையாட வெளியே ஓடினார்கள். விரைவில் எங்கும் ஒரே சப்தமாக இருந்தது. மற்ற மாணவர்கள் வெளியே எட்டிப்பார்த்தார்கள். மற்ற ஆசிரியர்கள் திருதிருவென்று விழித்தார்கள். தலைமைஆசிரியர் ஓடோடி வந்தார்.

"இங்கே பாரும். மற்ற வகுப்புக்களுக்கு இவ்வளவு அருகில் நீங்கள் விளையாட முடியாது. நீங்கள் விளையாட வேண்டு மானால் அதோ இருக்கின்ற மைதானத்துக்குப் போங்கள். இங்கே நீங்கள் மற்ற வகுப்புகளுக்கு இடைஞ்சல் செய்கிறீர்கள்!" என்று என்னைக் கடிந்துகொண்டார்.

நான் மாணவர்களை அழைத்துக்கொண்டு மைதானத்துக்குப் போனேன். பையன்கள் கட்டவிழ்ந்த காட்டுக்குதிரைகள் போல் கூவிக்கொண்டே அங்குமிங்கும் ஓடினார்கள். "விளையாட்டு... நாம் விளையாடப் போகிறாம்" என்று இரைந்தார்கள்.

"நாம் என்ன விளையாட்டு விளையாடலாம்?" என்று நான் அவர்களைக் கேட்டேன்.

"ஒருவன் கோ-கோ" என்று சொன்னான்.

"இல்லை. கபடி விளையாடுவோம்" என்றான் மற்றொருவன்.

"இல்லை நாம் ஓடிப்பிடித்து விளையாடுவோம்" என்றான் மூன்றாமவன்.

"அந்த விளையாட்டு விளையாடுவதானால் நாங்கள் வர வில்லை" என்றான் நான்காமவன்.

"அப்படியானால் உங்களை விட்டு விட்டு நாங்கள் மட்டும் விளையாடுவோம்"

"இதோ பாருங்கள். நாம் இங்கே விளையாட வந்தோம். நீங்கள் சண்டை போடுவதானால் நாம் வகுப்புக்கே சென்று விடுவோம்."

"இல்லை. நாங்கள் விளையாட விரும்புகிறோம்" பையன்கள் கொஞ்சம் நிதானம் அடைந்தார்கள்.

"அப்படியானால் சரி. இன்று நாம் கோ-கோ விளையாடு வோம். இருவர் முன்னே வாருங்கள்; அணித்தலைவர்களாக இருந்து உங்கள் அணிகளைத் தேர்வு செய்யுங்கள்."

அணிகளைத் தேர்வு செய்யக் கொஞ்ச நேரம் பிடித்தது. பலரும் அணித்தலைவர்கள் ஆக விரும்பினார்கள். கடைசியில் நானே இரண்டு பையன்களை அணித்தலைவர்களாகத் தேர்வு செய்ய வேண்டி இருந்தது. தலைவர்கள் அவர்களின் அணிகளைத் தேர்ந்தெடுத்தார்கள். நாங்கள் விளையாட்டை ஆரம்பித்தோம்.

எப்பேர்ப்பட்ட விளையாட்டு! இவர்கள் எல்லாம் ஒழுங்கற்ற கூச்சலிடும் தெருப்பையன்கள். விளையாடும் பொழுது இவர்களில் ஒருவரால்கூட அமைதியாக இருக்க முடியவில்லை.

எல்லாரும் தேவையில்லாமல் கூச்சல் போட்டார்கள்.

"டேய், ஜவ்வுமிட்டாய்! வா. என்னைப் பிடி" "என்னம்மா குழந்தை என்னைப் பிடிக்க முடியுமா?" "ஏய்! அந்தப் பக்கம் பாரு."

"அவன் தப்பித்துவிடுவான் என்று நான்தான் சொன்னேனே." "டேய் முட்டாள்! உன்னால்தான் நாம் தோற்றுப் போனோம்."

இப்படியே விளையாட்டுத் தொடர்ந்தது.

"இது என்ன விளையாட்டு மைதானமா? மீன்கடையா? இது கோ-கோ விளையாட்டா? இல்லை. கூச்சல் ஆரவார விளை யாட்டா?" என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன்.

விளையாட்டு முடிந்ததும் வெற்றி பெற்ற அணியைச் சேர்ந்த பையன் ஒருவன் தோல்வி அடைந்த அணியைச் சேர்ந்த பையனைக் கேலி செய்தான். "நாங்கள்தான் வெற்றி பெற்றோம். நீங்கள் எவ்வளவு முயற்சி செய்தும் உங்கள் பாச்சா பலிக்கவில்லை. உங்களுக்கு நல்ல அணித்தலைவன் இருந்தும் நீங்கள் மண்ணைக் கவ்வினீர்கள்."

தோற்ற அணிப் பையன் ஆத்திரம் அடைந்தான். "ஆமாம். நாங்கள் தோற்றுத்தான் போனோம். அதற்காக என்ன செய்ய

வேண்டும் என்கிறாய்?"

வென்றவன் தொடர்ந்து கேலி செய்துகொண்டே இருந்தான். "தோத்தாங்குள்ளிகளா! உதவாக்கரைகளா! நாங்கள் உங்களை ஜெயிச்சுட்டோமே! உர்ர்..."

தோற்றவன் கோபத்தால் கொதித்தான். "மேலே ஒரு வார்த்தை பேசினால் இந்தக் கல்லால் உன் மண்டையைச் சிதறடித்து விடுவேன்."

ஜெயித்தவன் மேலும் தொடர்ந்தான். "எங்கே செய் பார்க்கலாம். செய் பாப்பா! நாங்கள் உங்களைத் தோற்கடித்தோம் என்று நூறு தடவை சொல்வேன். நீங்கள்தான் மண்ணைக் கவ்வினீர்கள்."

தோற்றவன் நிதானம் இழந்தான். ஒரு கல்லை எடுத்து மற்றவன் மேல் வீசினான். கல் அவன் தலையைப் பதம் பார்த்தது. தலையிலிருந்து ரத்தம் கொட்ட ஆரம்பித்தது. நான் ஸ்தம்பித்துப் போனேன்! நிலைமை கட்டுக்கடங்காமல் மீறியது. நான் என் கைக்குட்டையை எடுத்து அவன் தலையில் கட்டுப்போட்டேன்.

பையன்களைக் கூப்பிட்டேன். "நாளை முதல் நமக்கு விளையாட்டுக் கிடையாது."

"அந்த இரண்டு பையன்கள் சண்டை போட்டுக் கொண்டதற்காக எல்லாரையும் ஏன் ஐயா தண்டிக்கிறீர்கள்?"

"நான் சொல்லும் இரண்டு நிபந்தனைகளுக்குக் கட்டுப் பட்டால்தான் நாம் விளையாட முடியும்."

"சம்மதம்" எல்லாரும் ஒரே குரலில் கூறினார்கள்.

"முதலாவதாக, விளையாடும்பொழுது யாரும் பேசக்கூடாது. பேசுபவன் அவுட் ஆகிவிடுவான்."

"சம்மதம்."

"இரண்டாவதாக, தோற்றாலும் ஜெயித்தாலும் சண்டை போடக்கூடாது. இன்றைக்கு ஒரு அணி தோற்கும். நாளைக்கு அடுத்த அணி தோற்கலாம். அதைக் குறித்துச் சர்ச்சை எழக் கூடாது. விளையாட்டுக்காகத்தான் நாம் விளையாடுகிறோம்; விளையாடினால் ஓடி ஆடலாம். மகிழ்ச்சியாகப் பொழுது போக்கலாம். ஆட்டத்தில் வென்றாலும் தோற்றாலும் சண்டை போட்டுக்கொண்டு மண்டையை உடைத்துக் கொள்ளக்கூடாது."

"சம்மதம்." எல்லாரும் மறுபடியும் மொத்தமாகக் கூறினார்கள். நாங்கள் பள்ளிக்குத் திரும்பினோம். காயம் அடைந்த பையன் எங்களுடன் இருந்தான். அடுத்த வகுப்புக்களிலிருந்து பையன்கள் எங்களைப் பார்க்க வந்தார்கள். ஒரு பையன் கேலியாக, "ஹே! எப்படி இருந்தது விளையாட்டு" என்று கேட்டான்.

"அவர்கள் ஹோலிப் பண்டிகை விளையாட்டு விளையாடி

இருப்பார்கள் போல் தெரிகிறது" என்றான் மற்றொருவன்.

அன்று பள்ளி முடிந்தவுடன் மற்ற ஆசிரியர்களும் தலைமை ஆசிரியரும் சந்தித்தனர். ஒரு ஆசிரியர் என்னைப் பார்த்துக் கிண்டலாக, "அப்படியானால் நீங்கள் போராட்ட விளையாட்டு விளையாடினீர்களா?" என்று கேட்டார்.

மற்றொரு ஆசிரியர் "திருவாளர் லட்சுமிராம் அவர்களே! நீங்கள் ஏன் இப்படி விளையாட்டுக்களில் ஈடுபடுகிறீர்கள். இவர்கள் எல்லாம் பலவிதமான குடும்பங்களைச் சேர்ந்த பையன்கள். இவர்களையெல்லாம் பள்ளியின் நான்கு சுவர்களுக்கிடையில் அடைத்து வைத்துதான் கவனிக்க வேண்டும். பாடங்களை மனப்பாடம் செய்யவும் அடக்கி வைக்கவும்தான் இவர்களைப் பழக்க வேண்டும். இவர்களைக் கட்டவிழ்த்துவிட்டு விட்டால் இப்படித்தான் ஒருவன் மற்றொருவனின் மண்டையை உடைத்து விடுவான். நாள்தோறும் தெருக்களில் என்ன நடைபெறுகிறது என்பது உங்களுக்குத் தெரியாதா?"

"எனக்குத் தெரியும். ஏதோ எதிர்பாராத ஆபத்து நிகழ இருக்கிறது என்று. இந்த மனிதனுக்கு இப்படி ஒரு பாடம் படித்துத்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் இந்த மனிதனால் சும்மா இருக்க முடியாது."

"விளையாட்டாம்... அதுவும் பள்ளிக்கூடத்திலாம்.... முட்டாள்தனம்."

"ஐயா, விளையாட்டுதான் உண்மையான கல்வி, விளை யாட்டு மைதானத்தில்தான் பெரிய வீரர்கள் உருவாகிறார்கள். விளையாட்டுத்தான் மனிதனின் குணாதிசயத்தை மேம் படுத்துகிறது."

"அதனால்தான் சண்டை நடைபெற்றதாக்கும்? ஒரு பையனுக்கு மண்டை உடைந்துபோனது இல்லையா?" என்று தலைமை ஆசிரியர் எனக்குப் பதிலடி கொடுத்தார்.

நாங்கள் பேசிக் கொண்டிருந்தபொழுதே காயம் அடைந்த பையனின் தகப்பனார் அங்கு வந்து சேர்ந்தார். அவருக்கு ஒரே கோபம். "இந்த மாதிரியான கல்வியெல்லாம் எனக்கு வேண்டாம். இதோ என் பையனுக்கு மண்டை உடைந்துவிட்டது. தலைமை ஆசிரியர் எங்கே? யார் என் பையனை அடித்தது?" என்று உறுமினார்.

"வாங்க ஐயா! பையன்கள் விளையாடுவதற்காக மைதானத் துக்குப் போனார்கள். அங்கே ஏதோ பையன்களுக்குள் சிறு மோதல். அதில் அவன் காயம் அடைந்துவிட்டான்" என்றேன்.

"அப்படியா? யார் அவர்களை வெளியே போய் விளை யாடச் சொன்னது?" என்று தகப்பனார் கேட்டார். "பள்ளிக்

கூடங்கள் படிப்பதற்காகவா அல்லது விளையாடுவதற்காகவா. அவர்கள்தான் நாள் முழுவதும் தெருக்களில் விளையாடு கிறார்களே. என் பையனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுப்ப தானால்தான் நான் என் பையனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவேன்" என்று கண்டிப்பாகச் பேசினார்.

என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அதற்குமுன் தலைமை ஆசிரியர் குறுக்கிட்டார்.

"ஐயா, இவர் ஒரு புதிய ஆசிரியர். இவர் போதனை முறையில் சில பரிசோதனைகள் செய்கிறார். இன்றைக்கு அவர் விளையாடச் சொல்லிப் பார்த்தார். பையன்களுக்குள் சிறிய கைகலப்பு நடந்து விட்டது."

"இந்தப் பரிசோதனையெல்லாம் எனக்கு வேண்டாம். உங்களால் முடிந்தால் பையனுக்கு வழக்கம்போலச் சொல்லிக் கொடுங்கள். இல்லாவிட்டால் நான் பையனை பள்ளியைவிட்டு நிறுத்திக் கொள்கிறேன்."

மற்ற ஆசிரியர்கள் எல்லாரும் ஜாடைமாடையாகச் சிரித்துக் கொண்டார்கள்.

நான் என்ன சொல்ல முடியும்?

நான் வீடு திரும்பினேன். நான் வாயடைத்துப் போனேன். என் அறைக்குச் சென்று சிந்தித்துக் கொண்டே படுத்தேன். "ஒரே அவமானம்!" என்று நினைத்தேன். இருந்துவிட்டுப் போகட்டும். நான்தான் விளையாடுவதற்கென்று சில விதிகளை வகுத்து விட்டேனே? இன்னும் சில விதிகளைச் சேர்த்து விடுகிறேன். ஆனால் விளையாட்டுகள் விளையாடியே ஆகவேண்டும். அதுதான் உண்மையான கல்வி என்பது என் அபிப்ராயம்.

என் மனதில் ஒரு எண்ணம் உதயமாகியது. நான் ஒரு பெற்றோர் கூட்டத்தைக் கூட்ட வேண்டும்; அவர்களிடம் விளையாட்டின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்க வேண்டும். தூய்மை, ஒழுங்கு ஆகியவற்றைக் கொண்டுவரும் பெற்றோர்களின் ஒத்துழைப்பை நாட வேண்டும். அவர்களின் ஒத்துழைப்பு இல்லாமல் என்னால் ஒன்றும் சாதிக்க முடியாது. அவரவரின் குழந்தைக்காகப் பெற்றோர்கள் கட்டாயம் இவ்வளவு முயற்சி செய்வார்கள் என்று நான் கருதுகிறேன். இங்கேதான் ஆசிரியர்கள் தவறி விடுகிறோம். நாம் பெற்றோரின் ஒத்துழைப்பையே நாடுவ தில்லை. நாளை நான் ஒரு பெற்றோர் கூட்டத்தைக் கூட்ட வேண்டும்.

# 8

பெற்றோர் கூட்டம் கூட்டப்பட்டது. அதைக் கூட்டம் என்று கூறுவது சரிதானா என்று எனக்குப் புரியவில்லை. நான் சுமார் நாற்பது பெற்றோர்களை அழைத்திருந்தேன். ஏழு பெற்றோர் கள்தான் வந்தனர். எனக்கு ஒரே ஏமாற்றம். நான் என் பேச்சை நன்றாகத் தயாரித்திருந்தேன். முயற்சி செய்வது நமது கடமை. பேச்சும் இந்த விஷயத்திற்கான ஒரு பரிசோதனையாகவே அமைந்தது.

மிகவும் தீவிரமான முறையில் கேட்போரின் சிந்தனையைக் கிளறும் முறையில் நான் பேசினேன். பேச்சு சுமார் ஒரு மணி நேரம் நீடித்தது. வந்திருந்த ஏழுபேரில் ஒருவருக்கு வீட்டிலிருந்து அவசரமாக அழைப்பு வந்து போக வேண்டியதாகிவிட்டது. மற்றவர்கள் அசிரத்தையோடுதான் என் பேச்சைக் கேட்டார்கள். என்னைப் பொறுத்தவரையில் நான் தயாரித்திருந்த குறிப்புகள் எல்லாம் முக்கியமானவை. அவற்றை நான் விளக்கிக் கூற வேண்டியதாகவும் இருந்தது.

மிக விபரமாக, கல்வித்துறையில் சரியானது எது, தவறானது எது என்பதை நான் எடுத்துரைத்தேன். “சுத்தம் இறைவனை அடையச் செய்யும் மார்க்கம்” என்பதை நான் எடுத்துரைத்தேன். விளையாட்டுகள் எவ்வாறு நற்குணங்களைக் கட்டி வளர்க்கின்றன என்பதையும் விளக்கினேன். அகக்கட்டுப்பாடு என்பது என்ன என்பதன் முக்கியத்துவத்தையும் நான் எடுத்து விளக்கினேன். தற்பொழுது நடைமுறையில் இருந்துவரும் கல்வி முறை அதன் விதிமுறைகள் ஆகியவற்றை நான் விமர்சனம் செய்தேன்.

ஆனால் இவை எல்லாம் காலவிரயமாகவும் வீண் முயற்சி யாகவும்தான் அமைந்தன. ஒரு மரியாதைக்காகக் கூட்டத்துக்கு வந்தவர்கள், எப்பொழுது வீட்டுக்குப் போகலாம் என்று இருந்தனர். கூட்டம் முடிந்ததும் அவசர அவசரமாக வீட்டுக்குப் போய் விட்டனர். ஆசிரியர்களாகிய நாங்களும், கல்வி அதிகாரியும் மட்டும் தங்கி இருந்தோம். கல்வி அதிகாரி புன்னகையோடு கூறினார்: “திருவாளர் லட்சுமிராம்! உங்கள் முயற்சி வீணானது. உங்கள் தத்துவங்களை யார் புரிந்து கொள்வார்கள்?”

என் முதுகின் பின்னாலிருந்து ஓர் ஆசிரியர் “நடைமுறைக்கு ஒவ்வாத முட்டாள்” என்று முணுமுணுத்தார்.

எனக்கு ஒரே ஏமாற்றம். ஆனாலும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. பார்க்கப்போனால் நான் நடைமுறைக்கு ஒவ்வா தவன்தான் என்று நான் உணர்ந்தேன். இந்த சாதாரணமான

மக்களிடையே எப்படிப் பேசவேண்டும் என்பதுகூட எனக்குத் தெரியவில்லை.

ஆசிரியர்கள் எல்லாரும் சிரித்துக் கொண்டே வீடு திரும்பினார்கள்.

## 9

சுமார் எட்டு அல்லது பத்து நாட்களுக்குப் பின் நான் நூல் நிலையத்திட்டத்தை ஆரம்பித்தேன். பையன்களுக்கு நான் பல கதைகளைச் சொல்லிவிட்டேன். அவர்கள் நான்காம் வகுப்பில் படிப்பவர்கள். அவர்களுக்குத் தேவை படிப்பதற்கான புத்தகங்கள்.

"மொழிப்பாடத்திற்கும் வரலாற்றுப் பாடத்திற்குமான தொகையைக் கொண்டு வாருங்கள். அவற்றைக் கொண்டு நாம் தேவையான ஏற்பாடுகளைச் செய்வோம்" என்று நான் கூறினேன்.

ஆனால் அடுத்த நாள், ஒரு பையன் மொழிக்கும், வரலாற்றுக்கும் உரிய பாடப்புத்தகங்களைக் கொண்டு வந்தான். "பரீட்சை முடிவுகள் வெளியான அன்றே என் அப்பா இந்தப் புத்தகங்களை வாங்கி விட்டார்" என்றான் அவன்.

இன்னொரு பையன், "நானும் என் புத்தகங்களைக் கொண்டு வந்துவிட்டேன். அவை என் அண்ணன் படித்த புத்தகங்கள்" என்றான்.

மூன்றாவது ஒரு பையன், "நான் இங்கே புத்தகங்கள் வாங்கப் போவதில்லை. என் சித்தப்பா பம்பாயிலிருந்து எனக்குப் புத்தகங்கள் வாங்கி அனுப்பிவிடுவார்" என்றான்.

மற்றொரு பையன் "எங்க அப்பா என்னிடம் பணம் கொடுக்க மாட்டேன் என்கிறார். அவரே எனக்குரிய பாடப் புத்தகங்களை வாங்கி விடுவாராம்" என்றான்.

முதல் பந்து வீச்சிலேயே 'அவுட்' ஆகிப்போன நான் எனக்கு நானே கூறிக்கொண்டேன். "ஒரு நூல் நிலையத்தை அமைக்கப் போவதாகக் கற்பனை செய்து கொள்வது மிகவும் எளிது. ஆனால் அதை நிறைவேற்றுவது முற்றிலும் வேறான விஷயம்."

சில பையன்கள் பணம் கொண்டு வந்திருந்தார்கள். நான் அவர்களிடம் பணத்தைப் பெற்றுக்கொண்டு ரசீது வழங்கினேன். அடுத்தநாள், பையன்கள் பாடப்புத்தகங்கள் கேட்டு வந்து விட்டார்கள்.

"உங்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட தொகையிலிருந்து இந்தப் புத்தகங்களை வாங்கியிருக்கிறேன். நீங்கள் கதைகள் படிக்க விரும்புவதாகத் தெரிவித்திருந்தீர்கள். ஆகவே நான் கதைப்

புத்தகங்கள் வாங்கியிருக்கிறேன்." படங்கள் நிரம்பியவையும், வண்ண மேலட்டை போட்டவையுமாகிய புத்தகங்களைப் பார்க்க மாணவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி. புத்தகங்களை வாங்குவதற்குள் ஒரே களேபரமாகி ஆகிவிட்டது.

"மாணவர்களே, நம்மிடம் இப்பொழுது பதினைந்து புத்தகங்கள் மட்டுமே இருக்கின்றன. இவற்றைப் பதினைந்து மாணவர்கள் படிக்கலாம். மீதியுள்ள இருபது பேர் என்னிடம் வாருங்கள். நான் சத்தம் போட்டுப் படிக்கிறேன். கேட்கலாம்" என்றேன்.

குழப்பம் வராமல் தவிர்க்க, "முதல் பதினைந்து பேர் புத்தகங் களை எடுத்துக் கொள்ளலாம். மற்றவர்கள் என்னிடம் வரலாம்" என்றேன் நான்.

முதல் பதினைந்து பையன்கள் புத்தகங்களை எடுத்துக் கொண்டுபோய் முழு உற்சாகத்தோடு படிக்க ஆரம்பித்தார்கள். "ஒரு பையன் படித்து முடித்ததும் புத்தகத்தை என் மேஜைக்குக் கொண்டு வரவேண்டும். அதேபோல் முடிக்கப்பட்டு வந்திருக்கும் மற்றொரு புத்தகத்தை என் மேஜையிலிருந்து எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு உங்களில் ஒவ்வொருவரும் எல்லாப் புத்தகங்களையும் படித்துவிட முடியும்" என்றேன் நான்.

மற்றவர்களை நான் என் மேஜைக்கருகில் அழைத்து, ஒரு



முதல் பதினைந்து பையன்கள் புத்தகங்களை எடுத்துக் கொண்டுபோய் முழு உற்சாகத்தோடு படிக்க ஆரம்பித்தார்கள்.

கதைப் புத்தகத்தை எடுத்து 'மாதிரி வாசிப்பு' செய்து காண்பித்தேன். குரலை ஏற்றி இறக்கியும் சரியான உச்சரிப்புடனும் வாசித்தேன். மற்ற பதினைந்து பையன்களும் ஒன்றாகக் கூக்குரலிட்டுப் புத்தகங்களை வாசித்து என்ன கூச்சலைக் கிளப்பினார்கள்! நான் நிறுத்திவிட்டு, "பையன்களே, மௌனமாக வாசியுங்கள். நீங்கள் இப்படிச் சத்தம் போட்டு வாசிப்பதால் எங்கள் படிப்புக் கெடுகிறது" என்றேன்.

பையன்க்ள் தங்கள் குரலைக் கொஞ்சம் தாழ்த்திக் கொண்டார்கள். ஆனால் அவர்களுக்கு மௌன வாசிப்பு என்றால் என்னவென்றே தெரியவில்லை. அவர்களுக்கு உரக்கப் படித்துத் தான் பழக்கம். சிறிது நேரம் அவர்கள் குரலைத் தாழ்த்தி வாசித்தனர். பின்னர் உரக்க வாசிக்கும் முறையைதான் மேற்கொண்டார்கள். நான் அவர்களை வராந்தாவில் உட்காரச் சொன்னேன். மேலும் சிறிது இடைவெளிவிட்டுவிட்டு அமரச் செய்தேன். நான் மட்டும் வகுப்பறைக்குள் இருந்து கொண்டேன்.

மாதிரி வாசிப்புத் தொடர்ந்தது. கதை சிறப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. குழந்தைகள் அனைவரும் மிகவும் ஆர்வத்தோடு கதையைக் கேட்டார்கள். மாலையில் வகுப்பு மணி அடிக்கும் வரை 'மாதிரி வாசிப்பும்' மாணவர்களின் வாசிப்பும் தொடர்ந்தன. நாங்கள் அனைவரும் வீடு திரும்பினோம்.

## 10

கதைகள், விளையாட்டுகள், நூல்நிலையம், 'மாதிரி வாசிப்பு', தனிப்பட்டவரின் சுத்தத்தைக் கவனித்தல், மாணவர்களின் ஒழுங்கான நடைமுறைகள்—இத்தகைய செய்திகளில் முதல் இரண்டு மாதங்கள் கழிந்துவிட்டன. நான் என் பணியைக் குறித்த லாபநஷ்டக் கணக்கை எடுத்தேன். செய்யப்பட்ட வேலைகளை மீண்டும் ஒருமுறை நினைவில்கொண்டு பார்த்தேன். இதுவரை அடிப்படையான முதல் படிக்கட்டு வேலைகளைத்தான் செய்திருக்கிறேன் என்பதை உணர்ந்தேன். மொழிப்பாடம், கணக்கு, வரலாறு, அறிவியல் முதலிய பாடங்களில் விதிக்கப்பட்ட பாடத்திட்டத்தில் நான் இதுவரை ஒன்றுமே செய்யவில்லை. மற்ற வகுப்புகளிலோ இப்பாடங்களில் சில பகுதிகள் நடத்தி முடிக்கப்பட்டு விட்டன. ஆண்டு முடிவிற்குள் நான் எல்லாவற்றையும் நடத்தி முடிக்க வேண்டும். அதுதான் நான் மேற்கொண்ட பரிசோதனைக்கு விதிக்கப்பட்ட முன்நிபந்தனை. 'சரி இதுவரை என்னதான் சாதித்தோம்' என்று எனக்குள் நினைத்துப் பார்த்தேன். கதை

கூறுவது நன்றாக நடைபெற்று வருகிறது. அதன்மூலம் மாணவர்களுக்கு படிக்கும் நோக்கம் ஏற்பட்டுவிட்டது. மேலும், ஒருவகை வகுப்புக் கட்டுப்பாடும் வந்துவிட்டது. இருந்த போதிலும் சம்பக்லாலும், ரமன்லாலும் கதைகளை விரும்புவதில்லை. ராம்ஜியும், சங்கரும் கதைகள் மிகவும் சுலபமாக இருப்பதாக உணர்கிறார்கள். ரகுவும், மதுவும் எந்த நேரமும் ஒருவரைப் பார்த்து ஒருவர் கண் சிமிட்டுவதும் ஜாடைகாட்டுவதுமாக இருக்கிறார்கள். அவர்கள் கவனக் குறைவாகவும், குறும்புத்தனத்தோடும் இருக்கிறார்கள். இது குறித்து ஏதாவது செய்ய வேண்டும். விளையாட்டுகளின் காரணமாக மாணவர்கள் என்னிடம் நெருக்கமாக வந்துவிட்டார்கள். என்னை அவர்களுள் ஒருவனாகவே கருதுகிறார்கள். முன்புபோல் என்னைக் கண்டு பயப்படுவதில்லை. விளையாட்டு வேளை முடிந்தபின் ‘மாதிரி வாசிப்பை’ மிகக் கவனத்தோடு கேட்கிறார்கள். ஆனால் விளையாடும்பொழுது கூச்சல் இடுவதும், ஒழுங்கின்மையும் கொஞ்சம்தான் குறைந்துள்ளன. நான் மிகவும் சிரமப்பட்டுப் பார்க்கிறேன். இருந்தாலும் இன்னும் நெடுந்தூரம் பயணம் செய்ய வேண்டும்.

நூல் நிலையத்தில் சில புத்தகங்கள்தான் இருக்கின்றன. பாடப்புத்தகங்கள் வாங்குவதைவிட நூல் நிலையத்துக்குப் புத்தகங்கள் வாங்குவது நல்லது என்று இன்னும் பெற்றோரை நான் இணங்க வைக்க முடியவில்லை. பெற்றோரிடம் சொற்பொழிவு செய்வதும், சிறு விளக்கம் தருவதும் மட்டுமே போதுமானது என்று நான் நம்பியிருந்தேன். ஆனால் இந்தப் பெற்றோர்களுக்கு ஒன்றே ஒன்றுமட்டும்தான் தெரியும். “பையன்களுக்குக் கற்றுக் கொடுங்கள்”. வேறு எதையும் கேட்பதற்கு அவர்களுக்கு நேரமே இல்லை. அவர்கள் எதையும் புரிந்து கொள்வதும் இல்லை. கவலைப்பட வேண்டாம், நான் விடாப்பிடியாக இருந்தால், இன்று இல்லா விட்டால் நாளையாவது அது வந்து விடும். இன்னும் பல மாதங்கள் இருக்கின்றன. இந்தப் பரிசோதனை சுலபமாக இருக்கப் போவதில்லை. நம்முடைய கற்பனை வட்டம் விரிவுபடுமானால், நம்முடைய புரிந்து கொள்ளும் திறன் வளருமானால், அந்த அளவுக்கு நம்முடைய லட்சியங்களும் உயர்கின்றன. எடுத்துக் கொண்ட காரியத்தின் முக்கியத்துவமும் சிக்கலான தன்மையும் அதிகரிக்கின்றன. பல கேள்விகள் என் மனத்தை அரித்துக் கொண்டிருந்தன. மாணவர்களின் தனிப்பட்ட சுகாதாரத்தைப் பொறுத்தவரையில் நான் எட்டியிருந்தவை குறிப்பிடத்தக்க அளவில் இல்லை என்று எனக்குத் தோன்றியது. குல்லாய்களையும், உடைகளையும் பொறுத்த வரையும் முதலில் ஓரிரண்டு நாட்களுக்குக் கொஞ்சம் சுத்தமாக இருந்ததோடு சரி; அடுத்து ஆரம்ப நிலைக்கே

வந்து விட்டன. அவர்களின் நகங்களோ எப்பொழுதும்போல் அழுக்கடைந்துதான் இருந்தன. இவற்றை இன்னும் நான் தொடரவேண்டும். வேறு வழியில்லை. சமூகத்தில் புதிய பழக்க வழக்கங்களை ஏற்படுத்த வேண்டுமானால் தொடர்ந்து முயற்சி செய்தல் தேவை.

பையன்களைப் பற்றி மட்டும் நான் கவலைப்பட்டால் போதாது. இப்போது கல்வி அதிகாரியும் சற்றுப் பொறுமை இழந்து காணப்பட்டார். அவருக்கும் பல பிரச்சினைகள். அவர் தம்முடைய மேலதிகாரிகளுக்கும், எதிர்ப்பாளர்களுக்கும் ஈடுகொடுக்க வேண்டும். புகழ் பெறுவதில் அவர் தனக்கும் பங்கு எதிர் பார்க்கிறார். ஆகவே அவருக்குப் பலனில்தான் அக்கறை. அத்துடன் பயன் விரைவாகவும் கிடைக்க வேண்டும். எனக்கு உதவி செய் வதில் அவருக்கும் சில இடர்ப்பாடுகள் இருந்தன.

என் சகபாடிகள், உடன் ஆசிரியர்களுக்கு என்மேல் நம்பிக்கை இல்லை. அவர்களைப் பொறுத்தமட்டில் நான் ஒரு 'நடைமுறைக்கு ஒத்துவராத பேர்வழி' என்றே என்னை மதித்தார்கள். ஒருவேளை நானும் அப்படியே இருக்கலாம். மேலும் எனக்கு அனுபவ அறிவு கிடையாது. ஆனால் எனக்கு அவர்களின் நம்பிக்கைகளிலும், போதனை முறையிலும் உடன்பாடு இல்லை. இவை எனக்கு எரிச்சல் தருகின்றன. நான் மேற்கொள்வதுதான் சரியான முறை என்று நான் உறுதியாகக் கருதினேன். என்னுடைய பையன்கள் என்னை விட்டு ஓடுவதில்லை. அவர்கள் என்னை நேசிக்கிறார்கள். மதிக்கிறார்கள்; எனக்குக் கீழ்ப்படிகிறார்கள். ஆனால் மற்ற வகுப்புகளிலோ பையன்கள் ஆசிரியர்களைக் கண்டு காதவழி ஓடுகிறார்கள். அவர்கள் ஆசிரியர்களை முன்னே விட்டுப் பின்னாலிருந்து அவர்களைப்போல் அபிநயம் செய்து எள்ளுவதை நான் அறிவேன். ஒரு பையன்கூடத் தன் ஆசிரியரிடம் புன்முறுவ லுடனோ, அன்புடனோ அணுகுவதில்லை. அவர்கள் தங்கள் வகுப்புகளில் பேசாமலும், வெறுப்போடும் எவ்விதச் சலனமும் இன்றியே அமர்ந்திருக்கிறார்கள்; வகுப்புகளை விட்டு வெளியே வந்ததும் குறும்புகளிலும், சண்டை சச்சரவுகளிலும்தான் ஈடுபடு கிறார்கள். அதைப் பொறுத்தவரையில் நான் என் மாணவர் களுக்குத் தேவையான உரிமைகளை அளித்திருக்கிறேன். வகுப்பு களிலேயே தங்கள் அமைதி இன்மையைத் தணித்துக் கொள்வதற்கு இடம் வைத்திருக்கிறேன். ஆகவே அவர்கள் வெளியிலே சென்று தொல்லை கொடுப்பதில்லை. நான் பையன்களுக்கு மிகவும் இடம் கொடுத்து அவர்களைக் கெடுத்து விடுவதாக மற்ற ஆசிரியர்கள் என்னைக் குறை கூறுகிறார்கள்; நான் பையன்களுக்குக் கதைகள் மட்டுமே சொல்வதாகவும், பாடம் போதிப்பதே இல்லை என்றும்

கூறுகிறார்கள். பையன்களை விளையாட வெளியே அழைத்துச் செல்வதால் வகுப்புகள் கெடுகின்றன என்கிறார்கள். இருக்கட்டும் போகப் போகத் தெரியும். விளையாட்டுகளும், கதைகளும் அவர்களின் கல்வியில் சரிபாதி என்பது என் அபிப்பிராயம்.

நான் மேற்கொண்டுள்ள காரியம் மிகவும் கடினமானது என்பதை நான் அறிந்திருக்க வேண்டும்; மறந்துவிடலாகாது; நள்ளிரவு பன்னிரண்டு மணி ஒலித்ததும், என் பகல் கனவு கலைந்தது. கடைசியில் எல்லாம் இறைவனின் கைகளில்தான் உள்ளது. ஆகவே முடிவை அவனது கைகளிலே விட்டுவிட வேண்டும். நாளை தன்னைத்தானே கவனித்துக் கொள்ளும். நான் தூங்கிவிட்டேன்.

# பரிசோதனையின் முன்னேற்றம்

## 1

அது மூன்றாம் மாத ஆரம்பம். இனிமேல் ஒவ்வொரு நாளும் செய்யப்பட்ட வேலையைப் பற்றிய குறிப்பு எழுதி வைக்க வேண்டும் என்று நான் கருதினேன். இதன்மூலம் ஒவ்வொரு வாரமும் நாம் சாதித்தது என்ன என்பதை அறிய முடியும். ஒரு மாதத்திற்குத் தேவையான பணித்திட்டம் ஒன்றை நான் தயாரித்தேன். வேலைக் குறிப்பு செய்யப்பட்ட பணியின் பதிவாக இல்லாமல், ஒருவகை நினைவூட்டுக் குறிப்பாக, எவ்வளவு முன்னேற்றம் எய்தப்பட்டுள்ளது என்பதைக் குறிக்கும் வகையில் அமைந்திருந்தது.

## 2

விதிக்கப்பட்ட பாடத்திட்டத்திலிருந்து சிலவற்றை எடுத்துக் கொள்ள நான் தீர்மானித்தேன். ஒருநாள் காலை நான் சொல்வதைக் கேட்டு எழுதும்படி மாணவர்களைக் கேட்டுக் கொண்டேன். பையன்கள் என்னை விழித்துப் பார்த்தார்கள். இவ்வாறு நான் கேட்டு எழுதும்படியாகவோ பாடப்புத்தகத்திலிருந்து பாடம் நடத்தவோ, தேசப்படப் புத்தகத்தைப் படிக்கச் சொல்லவோ செய்வேன் என்று அவர்கள் நினைக்கவே இல்லை. நான் அப்படிப் பட்ட ஆசிரியர் என்று அவர்கள் கருதியிருக்கவில்லை. ஒரு வகையில் அவர்கள் கருதியதும் சரிதான். ஏனெனில் நான் அந்த வகையைச் சேர்ந்த ஆசிரியர் அல்ல.

"எழுதுங்கள்" என்றேன் நான்.

பலரிடம் சிலேட்டோ, பென்சிலோ இல்லை. இதுவரை என் வகுப்பில் அவர்களுக்கு அந்தத் தேவை இல்லாதபடியால், அவர்கள் அவற்றைக் கொண்டு வரவில்லை. அடுத்த வகுப்பிலிருந்து அவர்களுக்காக நான் சிலேட்டுகளையும் பென்சில்களையும் வாங்கிக் கொடுத்து எழுதச் செய்தேன்.

சில மாணவர்கள் தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்தார்கள். ஒரு பையன், "இன்றைக்குக் கதை இல்லையா ஐயா?" என்று கேட்டான்.

மற்றொருவன், "நாம்தான் வகுப்பில் பாடப்புத்தகங்களை உபயோகிப்பதில்லை; நீங்கள் எதிலிருந்து கேட்டு எழுதச் சொல்வீர்கள்?" என்று கேட்டான்.

மற்றும் இருவர், "நீங்கள் எழுதச் சொல்லப்போகும் பகுதியைக் காட்டுங்கள். ஒருமுறை பார்த்துவிட்டுப் பிறகு எழுதுகிறோம். அப்பொழுதுதான் நாங்கள் தவறு இல்லாமல் எழுதுவோம்" என்றார்கள்.

அவர்கள் எல்லாம் காலாவதியாகிவிட்ட பழைய முறையில் தான் பழகியவர்கள். அவர்கள் கேட்டு எழுதுதல் என்றவுடன் பழைய முறையையே நினைக்கிறார்கள். அதனால் அதை வெறுக் கிறார்கள். அதைக்கண்டு பயப்படுகிறார்கள். ஆகவே முன்கூட்டியே அதற்காகத் தயாரித்துக்கொள்ள விரும்புகிறார்கள். நான் ஒரு நூல்நிலையப் புத்தகத்தை எடுத்து அதிலிருந்து கேட்டு எழுதச் சொன்னேன். நான் ஒரு வாக்கியத்தைப் படித்தேன். ஆனால் நான் சில சொற்களை உச்சரிப்பதற்கு முன்னாலேயே பையன்கள் எழுத ஆரம்பித்து விட்டார்கள். முழு வாக்கியத்தையும் அவர்கள் கேட்கவே இல்லை. என்னை வாக்கியத்தை மறுபடியும் கூறும்படி யாகக் கேட்டார்கள். வாக்கியத்தை மீண்டும் மீண்டும் சொல்லும் படியாக அவர்கள் கேட்டுக்கொண்டேதான் இருந்தார்கள்.

"கவனியுங்கள். சொல்வதைக் கேட்டு எப்படி எழுதுவது என்பதை அறிந்து கொள்ளுங்கள்" என்றேன். "நான் பேசும்பொழுது என்னையே பார்க்க வேண்டும். நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டு, நான் என்ன சொல்கிறேன் என்பதைச் சரியாகப் புரிந்து கொண்டு எழுதுங்கள். அதன்பிறகு அடுத்த வாக்கியத்திற்காக என்னைப் பாருங்கள்" என்றேன் நான்.

இவ்வாறு ஒரு பகுதி முழுவதையும் நான் எழுதச் செய்தேன். முதலில் அவர்களால் பழைய பழக்கத்தைக் கைவிடவே முடிய வில்லை. ஆனால் சிறிது நேரம் கழித்து நான் கூறிய முறையைப் பின்பற்றி சரியாக எழுதப்பழகிவிட்டார்கள். அதன்பிறகு நான் என்ன சொல்கிறேன் என்பதை மறுபடியும் சொல்லும்படி கேட்கவும் இல்லை. நான் ஒரே ஒரு முறைதான் சொன்னேன்; ஒரு வார்த்தையைக்கூட இரண்டாம் முறை சொல்ல வேண்டி யிருக்கவில்லை.

கேட்டெழுதல் முடிந்தவுடன் அவர்கள் சிலேட்டைக் கீழே வைத்தார்கள். நான் அவர்கள் எழுதியதைச் சரிபார்த்தேன். பல வார்த்தைகளில் எழுத்துப்பிழை இருப்பதை நான் கண்டேன். பலர்

கூட்டெழுத்துக்களைச் சரிவர எழுத முடியவில்லை அவர்களின் கையெழுத்தும் மிக மோசமாக இருந்தது.

அவர்களின் சிலேட்டுகளில் நான் ஒரு திருத்தமும் செய்ய வில்லை. நான் பார்த்தபின் அவற்றை அவர்களிடமே திரும்பக் கொடுத்துவிட்டேன். "நான் எத்தனை தவறுகள் செய்தேன்" என்று அவர்கள் கேட்க ஆரம்பித்தார்கள். மற்றும் சிலர் மதிப்பெண்களும் வரிசைகளும் கொடுக்க வேண்டும் என்று கேட்டார்கள்.

ஒரு பையன் "இனிமேல் நம் ஆசிரியரும் மற்ற ஆசிரியர் களைப்போலவே கற்பித்து 'ரேங்கு'கள் எல்லாம் வழங்குவார்கள்" என்றான்.

"அப்படியெல்லாம் நான் செய்யப்போவதில்லை" என்றேன். "நீங்கள் எல்லாருமே நன்றாக எழுதுகிறீர்கள். நாளை மறுபடியும் முயற்சி செய்யுங்கள். படிப்படியாக நீங்கள் நன்றாக எழுதக் கற்றுக் கொள்வீர்கள். பயிற்சி உங்களுக்கு நன்றாக எழுதக் கற்றுக் கொடுக்கும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். எவ்வாறானாலும் உங்களின் தவறுகளைக் குறித்து வைப்பதால் என்ன பயன்?" என்று நான் கேட்டேன்.

ஒரு பையன் "ஐயா 'ரேங்க்' என்ன ஆகும்?" என்று கேட்டான்.

"நான் உங்களுக்குக் கதைகள் சொல்லும்போது 'ரேங்க்' கொடுக்கிறேனா?"

"இல்லை."

"விளையாடும்பொழுது 'ரேங்க்' கொடுக்கிறேனா?"

"இல்லை."

"உங்களில் சிலர் உயரமாகவும் சிலர் குட்டையாகவும் இருக்கிறீர்கள். ஆதனால் உங்கள் 'ரேங்க்' தெரிகிறதா?"

"இல்லை."

"உங்களில் சிலர் பணக்காரர்களாகவும், சிலர் ஏழைகளாகவும் இருக்கிறீர்களே. பள்ளிக்கூடம் பணக்காரர்கள், ஏழைகள் என்று பிரித்து தகுதி வழங்குகிறதா?"

"இல்லை."

"அப்படியானால் நமக்கு 'ரேங்க்' வழங்கும் முறையே வேண்டாம். பாடத் தெரிந்தவன் கவிதைகளைப் பாடலாம். தான் மறந்துவிட்டால் சொற்களை நினைவுக்குக் கொண்டுவந்து பாடலாம். விளையாடத் தெரியாதவர்கள் மற்றவர்கள் விளை யாடுவதைப் பார்த்துத் தாமும் கற்றுக் கொள்ளலாம். கையெழுத்து நன்றாக எழுதும் மாணவனை முன் மாதிரியாகக் கொண்டு தம் கையெழுத்தைச் சீர்திருத்த விரும்பும் மற்றவர்களும் பழகிக் கொள்ளலாம். ஒரு செயலை நன்றாகச் செய்யத் தெரிந்தவர்கள் மற்றவர்களுக்கு அத்திறமையைக் கற்பிக்கலாம் அவ்வளவுதான்."

அவர்கள் என்னை ஆச்சரியத்தோடு பார்த்தார்கள்.

கடைசியில் நான், "நம்முடைய வகுப்பு முற்றிலும் வித்தியாச மானது. முற்றிலும் புதியது. நாம் முன்னோடிகள். இது நம்முடைய வகுப்பு."

'நம்முடைய வகுப்பு' என்ற வார்த்தைகளை நான் சற்று அழுத்தமாக இரண்டு முறை கூறினேன். பையன்களும் அதைக் கேட்டு, "நம்முடைய வகுப்பு" என்று கோஷம் போட்டனர். "அது வேறு விதமானது. புதுமையானது."

கேட்டு எழுதுவதில் ஒரு வாரத்திற்குள் நான் முன்னேற்றம் காணச் செய்தேன். ஒவ்வொரு நாளும் புத்தகத்தைப் பார்த்து எழுதுவதை வீட்டுப்பாடமாகக் கொடுத்தேன். ஒரு புத்தகத்தில் இருந்து நான்கு வரிகளை அவர்கள் பார்த்து எழுத வேண்டும். ஒவ்வொரு நாளும் பத்து நிமிடத்திற்குக் கேட்டு எழுதும் பயிற்சி கொடுத்தேன். ஒருவர் மற்றொருவருக்குச் சொல்ல அதைக் கேட்டு எழுதுவதே. ஒருவர் எழுதியதை மற்றவர் சரிபார்க்கவும் செய்தேன்.

நான்காம் வகுப்புப் பாடப்புத்தகத்தில் வரும் கூட்டு எழுத்துக் களுக்கெல்லாம் ஒரு பட்டியல் தயாரித்து அதை ஒவ்வொரு வருக்கும் கொடுத்து, ஒவ்வொருவராக அதைப் பார்த்து சரியாக எழுதச் செய்தேன். பாடப்புத்தகத்தில் வரும் கடினமான சொற்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைக் கொண்டு பயிற்சி அளித்தேன்.

எங்கள் வேலை நல்ல முறையில் முன்னேறியது.

## 3

ஒருநாள் பையன்கள் கதை கேட்டுக்கொண்டிருந்தபொழுது அடுத்த வகுப்பறையிலிருந்து ஒரு பரிதாபமான ஓலத்தைக் கேட்டேன். நான் கதை சொல்வதை நிறுத்திவிட்டு, ஒரு பையனிடம் அடுத்த வகுப்புக்குச் சென்று என்ன நடந்தது, யார் அழுகிறான், எதற்காக என்று அறிந்து வரச் சொன்னேன்.

மூத்த பையன் ஒருவன் சென்று ஒரே நிமிடத்தில் திரும்பி வந்தான். "ஆசிரியர் ஜீவாவை அடித்துவிட்டார்" என்றான்.

"ஏன்?" என்று நான் கேட்டேன்.

"அவனுக்கு பூகோளப் பாடம் தெரியவில்லை."

"ஆனால் அவனை ஏன் அடிக்க வேண்டும்?"

"பாடத்தைச் சரிவரத் தயாரிக்காவிட்டால் அதன் பலனை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்" என்றான் ஒரு பையன்.

"சரி, அவனுக்குத் தெரியாவிட்டால்?"

"ஒருவனுக்குத் தெரிய வேண்டும். அவனுக்குத் தெரியா விட்டால் ஆசிரியர் அவனை அடிப்பது இயற்கைதானே!"

"அதுசரி. அவன் கற்றுக் கொள்வதற்கு முயற்சி செய்தும் உரிய நேரத்தில் ஞாபகம் வராவிட்டால்?"

மூன்றாமவன், "அப்போதும் ஆசிரியர் அடிக்கத்தான் செய்வார். தெரியாவிட்டால் அடிவாங்கத்தான் வேண்டும்" என்று இடைமறித்தான்.

"உங்களில் யாரையாவது அடித்தால் அதை விரும்புவீர்களா?"

"இல்லை." "அடிபடுவதை யார்தான் விரும்புவார்கள்?"

"சரி. நான் உங்களை ஒரு பாடத்தைத் தயாரிக்கச் சொல்கிறேன். நீங்கள் செய்யவில்லை. உங்களை அடிக்கலாமா கூடாதா?"

"ஆனால் நாங்கள்தான் நீங்கள் கொடுக்கும் பாடங்களைத் தயார் செய்து விடுவோமே."

"நீங்கள் மனப்பாடம் செய்ய முயற்சி செய்தும், ஞாபகத்தில் நிற்கவில்லை என்றால்?"

"எப்படியானாலும் நீங்கள் எங்களை அடிக்கக் கூடாது. அடித்தால் வலிக்கிறது. எங்களுக்குத் தெரியாவிட்டால் மறுபடியும் சொல்லிக் கொடுங்கள். நாங்கள் இன்னும் முயற்சி எடுத்துப் படிக்கிறோம்."

"சரி. சரி. நாம் கதையைத் தொடர்வோம். செய்வோமா?" என்றேன் நான்.

நான் மறுபடியும் ஆரம்பித்தேன். ஆனால் அவர்களின் மனம் ஜீவாவையே சுற்றிச் சுழன்றது. "ஐயா, ஜீவா ஆசிரியரை முன்னே விட்டுப் பின்னே கேலி செய்பவன்; ஆசிரியரின் கேலிச் சித்திரத்தை சுவரில் வரைந்து அதன் கீழ் அவரைத் திட்டி வாக்கியங்கள் எழுதி வைப்பான்" என்றனர்.

"ஜீவா அப்படிச் செய்யக் கூடாது."

"ஆனால் ஆசிரியர் அவனைக் கண்டபடி அடிக்கிறாரே?" என்றனர்.

"அப்படியானால் என்னதான் செய்வது" என்று நான் கேட்டேன்.

"ஆசிரியர் அவனை அடிக்கக் கூடாது."

"அப்படியானால் பாடங்கள் என்ன ஆகும்?"

"பாடங்களைத் தயாரிக்காதவன் யாராயினும் பள்ளியை விட்டே நீக்கிவிடவேண்டும். ஏன் ஒருவனை அடிக்கவேண்டும்? அடிப்பதால் ஒருவன் படிப்பதானால் ஒவ்வொருவனையும் ஒவ்வொரு நாளும் அடிக்கத்தான் வேண்டும்" என்றனர்.

"ஜீவாவுக்குப் படிப்பில் அக்கறையில்லை. முயல் பிடிப்பதிலும், மாடு மேய்ப்பதிலும்தான் விருப்பம்" என்றான் மற்றொரு மாணவன்.

மற்றொருவன், "ஜீவா பள்ளியில் அடி வாங்குகிறான். வெளியில் வந்து மற்ற பையன்களை அடிக்கிறான். எங்களுக் கெல்லாம் அவனைக் கண்டால் பயம்" என்றான்.

"அவன் தகப்பனார் அரசு அலுவலர். அவனை வற்புறுத்திப் பள்ளிக்கு அனுப்புகிறார். வீட்டில் அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத் தனியே ஓர் ஆசிரியர் அமைக்கப்பட்டிருக்கிறார்" என்று மேலும் கூறினான்.

"அந்த விஷயத்தை விட்டுவிடுவோம். நாம் கதையைத் தொடர்வோம்" என்றேன் நான்.

நான் கதையை முடித்தேன். மணி அடிக்கும் பொழுது நாங்கள் எழுந்தோம். தண்டனைகளையும் அவற்றின் விளைவுகளையும் நினைத்துக் கொண்டே நான் வீட்டுக்குப் போனேன். என்னுடைய அணுகுமுறையைப் பற்றி நான் தெளிவாக இருந்தேன்; நான் யாரையும் தண்டிக்க விரும்பவில்லை.

## 4

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு நான் கல்வி அதிகாரியை மறுபடியும் சந்தித்தேன். அவரிடத்தில் "ஐயா, தயவுசெய்து, பள்ளிக்கு வரும் ஒவ்வொரு குழந்தையும் சுத்தமான ஆடைகளை உடுத்தி வரவேண்டும். குல்லாய் அணிவதானால் அவையும் சுத்தமாக இருக்க வேண்டும் என்று ஆணை பிறப்பியுங்கள். தலையை ஒழுங்காக வாரியிருக்க வேண்டும். வாரா வாரம் நகங்களை வெட்ட வேண்டும். ஒழுங்காக முடிவெட்டிக்கொள்ள வேண்டும். சட்டைகளில் பொத்தான்கள் சரிவரத் தைக்கப் பட்டிருக்க வேண்டும். பள்ளிக்கு வரும் முன் குளித்துவிட்டு வரவேண்டும், அல்லது கைகால் முகமாவது நன்றாக அலம்பி வரவேண்டும்" என்றேன்.

கல்வி அதிகாரி நான் கூறுவதைப் பொறுமையாகக் கேட்டு விட்டு, புன்னகையுடன், "ஏன், பெற்றோர்கள் புரிந்து கொள்ள வில்லையா?" என்று கேட்டார்.

"நான் பெற்றோர்களைப் புரிந்துகொள்ளச் செய்ய என்னால் இயன்றவரை முயற்சி செய்கிறேன். ஆனால் அவர்கள் புரிந்து கொள்வதாகத் தெரியவில்லை. நல்ல வசதியுள்ள பெற்றோர்கள் கூடப் புரிந்து கொள்ளவில்லை. 'ஒவ்வொரு நாளும் யார் இதைக் கவனித்துக் கொண்டிருப்பது. உங்கள் வேலை பாடம் கற்றுக் கொடுப்பது மட்டும்தான். மற்றவற்றையெல்லாம் நாங்கள் பார்த்துக் கொள்வோம்' என்று கூறுகிறார்கள். இத்தகைய சூழ்நிலையில்

நத்தைவேக முன்னேற்றமே காணப்பட்டது. ஐயா, உண்மையைச் சொல்ல வேண்டுமானால் இப்படிப்பட்ட மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்கவே எனக்கு விருப்பம் இல்லை."

"அது அப்படித்தான்" என்றார் கல்வி அதிகாரி.

"இதுதான் நம்முடைய சமூகம். இதன் பண்பாட்டு நிலையை உயர்த்துவதே இயலாத காரியம். இப்படியெல்லாம் இருந்தும் நான் இந்தத் துறையின் பொறுப்பை ஏற்றுக் கொண்டபிறகு பெற்றோர் களின்மீது ஏதோ சிறிது பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது."

"அப்படியானால் நீங்கள் ஏன் இத்தகைய ஆணையைப் பிறப்பிக்கக் கூடாது?"

"இப்படிப்பட்ட ஆணையை என்னால் பிறப்பிக்க முடியாது. அது என் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டது.

"வரம்புக்கு அப்பாற்பட்டதா? அது எப்படி? நீங்கள்தான் முதல்நிலை அதிகாரி ஆயிற்றே?"

"இது ஒரு சுதேச சமஸ்தானம். வேறு எங்கேயானாலும் அதிகாரிகளுக்கு அந்த உரிமை இல்லை" என்று அவர் ஒரு நிமிட மௌனத்திற்குப் பிறகு கூறினார். "இப்படிப்பட்ட ஆணைகள் எல்லாருக்கும் மேலான அதிகாரிகளை அணுகினால்தான் கிடைக்கும். அப்படிக் கிடைத்தாலும்கூட இந்த மக்கள் அதை நிறைவேற்றப் போகிறார்களா என்ன? எங்கள் ஆணைகளுக்கு மக்கள் பணியாவிட்டால் என்ன செய்ய முடியும்?"

"அவர்களுடைய பிள்ளைகளைப் பள்ளிகளிலிருந்து நீக்கி விடுங்கள்."

"அப்படிச் செய்ய முடியாது. அதனால் குளவிக்கூட்டைப் பிரித்த மாதிரி ஒரே களேபரம் ஆகிவிடும்."

"எல்லாம் செய்ய முடியும். பின்னாலிருந்து ஆதரிப்பது இல்லாமல் அறிவும் ஆலோசனையும் மட்டும் இருந்து என்ன செய்ய முடியும்? உண்மை என்னவென்றால் நாங்கள் வெறும் ஆசிரியர்கள் மட்டுமே. எங்களை யார் மதிக்கிறார்கள்?"

"அப்படித்தான் வைத்துக்கொள்."

"இருப்பவை அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும் என்கிறீர்களா?"

"இல்லை இல்லை. இருக்கிறபடி இருக்கட்டும் என்று விட்டு விட முடியாது" என்றார் அவர்.

"என்னைப் பொறுத்தவரை பள்ளியில் என்னென்ன முன்னேற் றங்களைக் கொண்டு வரமுடியுமோ அவற்றைக் கொண்டுவரக் கடுமையாக உழைப்பேன். குழந்தைகள் புதிய பழக்க வழக்கங்களை மேற்கொள்ளும்படி நான் அவர்களுக்குப் பயிற்சி அளிப்பேன். எனக்குக் கிடைக்கும் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி இது

சம்பந்தமாக ஒரு பொதுஜன இயக்கத்தை உண்டாக்குவேன். மக்கள் கவலைப்படுகிறார்களோ இல்லையோ, பள்ளிகளில் சுகாதாரக் குறைவுதான் நோய்களுக்குப் பிறப்பிடம் என்ற உண்மையை மறைக்க முடியாது."

கல்வி அதிகாரி, "நீ என்ன வேண்டுமானாலும் செய்துகொள். நீ ஒரு பரிசோதனையைச் செய்து பார்க்க வந்திருக்கிறாய். ஏற்கெனவே நான்கு மாதங்கள் கழிந்துவிட்டன. காலம் கடந்து கொண்டிருப்பதை மட்டும் கவனத்தில் வைத்துக் கொள்" என்றார்.

அவரிடம் விடைபெற்று வீடு சென்றேன்.

இரண்டு துடைப்பங்களை என் செலவிலேயே வாங்கினேன். (பள்ளிநிதியில் சில்லரைச் செலவினத்தில் இதை வாங்கப் பணம் இல்லை). ஒரு சிறிய கண்ணாடி, ஒரு சீப்பு, சிறிய கதர்த்துண்டு, ஒரு சிறிய கத்தரிக்கோல் ஆகியவற்றையும் வாங்கினேன். அதிர்ஷ்ட வசமாக பள்ளி வளாகத்துக்குள் ஒரு தண்ணீர்க்குழாய் இருந்தது. வகுப்பிலேயே நான் எல்லா ஆயத்தங்களையும் செய்தேன்.

பையன்களை ஒரு வரிசையில் நிற்கவைத்தேன். அவர்கள் மனமிசைந்து முன்வந்தார்கள், ஏனெனில் அவர்கள் என்னை நேசித்தார்கள். அவர்களுக்கு விருப்பமானவற்றையே நான் செய் கிறேன். அவர்களுக்கு நன்மை தருவனவற்றையே நான் செய்வேன் என்று அவர்கள் உணர்ந்தனர்.

அவரவர் முகத்தைக் கண்ணாடியில் பார்க்கச் சொன்னேன். "யார் யார் தங்கள் முகம், கண், மூக்கு ஆகியவை அழுக்காக இருப்பதாக நினைக்கிறீர்களோ, அவர்கள் குழாய்க்குப் போய்க் கழுவிக் கொள்ளலாம். அத்துடன் தங்கள் கைகால்களையும் கழுவிக்கொண்டு தலையில் சிறிது தண்ணீர் தெளித்துக் கொள்ள வேண்டும்" என்றேன்.

அவர்கள் அனைவரும் வெளியே ஓடி ஒருவரை ஒருவர் தள்ளி முட்டிமோதிக்கொண்டு கை கால், முகம் கழுவினார்கள்.

'இவர்களை ஒருவர்பின் ஒருவராக வரிசையில் போய் தங்கள் பணியைச் செய்யக் கற்பிக்க வேண்டும். மனம் போனபோக்கில் ஒருவரும் பணிசெய்யக் கூடாது. இந்தப் பையன்களை ஒழுங்கீனம், கட்டுப்பாடின்மை ஆகியவற்றின் பிடியிலிருந்து காப்பாற்ற வேண்டும்' என்று நான் நினைத்தேன்.

தரையில் ஒரு கோடு போட்டேன். "எல்லாரும் இந்தக் கோட்டின் மேல் வரிசையாக நில்லுங்கள்; ஒருவர்பின் ஒருவராக குழாய்க்குச் செல்லுங்கள்" என்று கூறினேன்.

நான் ஒரு பக்கத்தில் இரண்டு கதர்த்துண்டுகள் வைத்துக் கொண்டு நின்று கொண்டேன். நான் கூறியபடி மாணவர்கள் தத்தம் கைகால்களைக் கழுவிக் கொண்டனர்.



யார் தங்கள் முகம் அழுக்காக இருப்பதாக நினைக்கிறீர்களோ அவர்கள் குழாய்க்குப் போய்க் கழுவிக் கொள்ள வேண்டும்.

பள்ளியில் என்ன நடைபெறுகிறது என்பதை வழிப் போக்கர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தனர்.

எல்லாப் பையன்களும் அலம்பிக்கொண்ட பிறகு நாங்கள் வகுப்புக்குச் சென்றோம். அவர்களிடம் சீப்பைக் கொடுத்து எல்லா மாணவர்களையும் அவர்களால் முடிந்த அளவுக்கு தலைமுடியைச் சீவிக்கொள்ளச் செய்தேன்.

முதலில் ஒரு கடவுள்வணக்கப் பாடலை நான் பாடினேன். அது எனக்கு தன்னிச்சையாகவே தோன்றியது. அன்று நகங்களைப் பரிசோதிப்பதும், உடைகளையும் பொத்தான்களையும் பரிசோதிப் பதும் மேற்கொள்ளப்பட முடியவில்லை.

## 5

என்னுடைய கதைகளின் மூலம் வரலாறு போதிப்பதற்கான அடிப் படையை நான் அமைத்திருந்தேன். இப்பொழுது நாட்டுப்புறப் பாடல்களின்மூலம் செய்யுள் பாடங்களைப் போதிப்பதற்கான அடிப்படையை அமைக்க நான் முடிவு செய்தேன். நீண்ட

ஆலோசனைக்குப் பிறகு, முதல் ஆறுமாதங்களை ஆரம்ப ஆயத்தங் களுக்குச் செலவிடுவது என்று முடிவு செய்தேன். அடுத்த ஆறு மாதங்களுக்கு வரையறை செய்யப்பட்ட பாடங்களைக் கற்றுக் கொடுப்பதற்கு இது அடிப்படையாக அமையும் என்றும் முடிவு செய்தேன்.

புதியதாக ஏதாவது ஒன்றைத் தொடங்கினால், மாணவர் களின் முதல் பிரதிபலிப்பு அதைக் கேலி செய்வதும் சிரிப்பதுமாகத் தான் இருக்கும். நான் நாட்டுப்புறப் பாடல்களை ஆரம்பித்தேன்.

"மாணவர்களே! நாம் ஒரு பாடல் பாடுவோம். நான் ஆரம்பிக்கிறேன். நீங்கள் தொடர்ந்து பாடுங்கள்" என்றேன்.

நான் ஒரு நாட்டுப்புறப் பாடலைப் பாட ஆரம்பித்தேன்.

"கண்ணன் உள்ளம் நிறைந்தவன் தோழியரே!
கண்ணன் உள்ளத்தில் இருப்பவன்"

ஒருவராலும் பின்பற்றிப் பாடமுடியவில்லை. எனக்கு ஆச்சரியமாக இருந்தது. என்ன இது? நான்காம் வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கு இந்த எளிய சந்தத்தைக்கூடப் பாட முடிய வில்லையே. அவர்களுக்குப் பாடியே பழக்கமில்லை போலும்.

நான் வேறு ஒரு பாடலைத் தொடங்கினேன்:

"இந்த மயில் என் சொந்த மயில்
முத்துக் கொரிக்கும் மயில்
இதுவே எனது மயில்"

இதற்குக் கொஞ்சம் வரவேற்பு இருந்தது. ஆனால் பையன்கள் சுருதிவிட்டு உரக்கப் பாடினார்கள். பாட்டே பெரிய •கூச்சலாக மாறியது. அடுத்த வகுப்பு ஆசிரியர் வந்தார். "தயவு செய்யுங்கள் ஐயா! போதும் இந்தக் கூச்சல். எங்கள் வகுப்பில் ஒரு வார்த்தை கூடக் காதில் விழவில்லை."

மற்றொரு ஆசிரியரும் அவருடன் சேர்ந்து கொண்டார். "ஒவ்வொரு நாளும் நீங்கள் ஒரு புதிய பிரச்சினையை உண்டாக்க வேண்டுமா? நாங்கள் எங்கள் பையன்களுக்கு அமைதியாகப் பாடம் சொல்லிக்கொடுக்கவா, வேண்டாமா? உங்களுக்கு விளைவு களைப் பற்றிக் கவலையே இல்லை. உங்கள் பரிசோதனை வெற்றி பெற்றால் கல்வி அதிகாரி எங்களை 'இதைச் செய் அதைச் செய்' என்பார். உங்கள் பரிசோதனை தோல்வி அடைந்தால், உங்கள் மூட்டையைக் கட்டிக்கொண்டு போய்விடுவீர்கள்."

தலைமைஆசிரியர் வந்தார். "ஐயா லட்சுமிராம் அவர்களே! இது என்ன தனியார் ஆரம்பப் பாடசாலை என்று நினைத் தீர்களா? பெருக்கல் வாய்ப்பாடு ஒப்புவிப்பதுபோல் இப்படிக் கூட்டமாகப் பாட ஆரம்பித்து விட்டீர்களே? இதற்குப் பெயர்தான் புதிய பரிசோதனையா? ஏன் நம்முடைய முன்னோர்களுக்கு

எல்லாம் நாட்டுப்புறப்பாடல்கள் தெரியுமே?”

எல்லாரும் போய்விட்டார்கள்.

நான் அடியோடு கீழே தள்ளப்பட்டுவிட்டேன். ‘கொஞ்ச காலத்துக்கு இந்தக் கூட்டுப்பாடலை நான் தள்ளிப்போட வேண்டும். பாடல் பாடக் கேட்பதோடு நிறுத்திக்கொள்ள வேண்டும்’ என்று எனக்கு நானே கூறிக்கொண்டேன்.

“சற்றுப் பொறுங்கள். நான் பாடும்பொழுது கேளுங்கள்” என்று பையன்களுக்குச் சொன்னேன்.

நான் பாட ஆரம்பித்தேன்:

“சின்னதொரு மூக்குத்தி செய்வாய்
அன்பான ஆசாரியாரே
சின்னதொரு மூக்குத்தி எனக்குச் செய்வாய்
......”

எனக்கோ கழுதையைக் கவர்ந்திழுக்கும் குரல்வளம்! ஆனால் நான் சுருதிதப்பிப் பாடுவதில்லை. ஏதோ பாடினேன். எனக்கு மட்டும் நல்ல குரல்வளம் இருந்தால் எப்படி இருக்கும்! என்னால் இயன்ற வரை நன்றாகப் பாடினேன். பாடலுக்கு ஏற்றாற்போல் அபிநயமும் செய்தேன். நடிப்பில் எனக்குச் சிறிது பயிற்சி உண்டு. சில பையன்களுக்கு என் பாடல் பிடித்திருந்தது. சிலருக்குச் சலிப்பாக இருந்தது. அவர்கள் குறும்பு செய்ய ஆரம்பித்தார்கள். சம்பக்கும் அவனது நண்பர்களும் கண்ஜாடை செய்துகொண்டு என்னைக் கேலி செய்வது போல் இருந்தார்கள். அதுவும் என் கவனத்திற்குத் தவறவில்லை. அது குறித்து நான் பின்னால் கவனித்துக் கொள்வேன்.

பாட்டு சலிப்பூட்டுவதாகத் தோன்றுபவர்களிடம் “நீங்கள் தனியே உட்காருங்கள். உங்கள் சிலேட்டுகளில் உங்களுக்கு விருப்ப மானவற்றை எழுதுங்கள், அல்லது படம் வரையுங்கள்” என்றேன்.

மற்றும் ஒரு பாடலைப் பாடினேன். இப்பொழுது பாடலில் ஆர்வம் கூடியது. மூன்றாவதாக ஒரு பாடலையும் பாடினேன். இரண்டாவது பாடலை மாணவர்கள் மிகவும் ரசித்தார்கள். அதை நான் மீண்டும் மீண்டும் பாடினேன். ஒவ்வொரு முறை பாடியதும் மாணவர்களின் ஆர்வம் பெருகியது.

பையன்களிடம் நான், “நான் பாடும் பாடலைக் கேளுங்கள். ஆனால் நீங்கள் அதைப் பாடாதீர்கள். பள்ளிவளாகத்திற்குள் பாடவே பாடாதீர்கள்” என்றேன்.

இரண்டு நாட்களுக்குள் பையன்கள் “சின்னதொரு மூக்குத்தி செய்வாய்....” என்று பாடுவது கேட்டது. நான் அவர்களைப் பள்ளி வளாகத்துக்கு வெளியே போகச் சொன்னேன். நகர மக்களும் பேசத் தொடங்கினர்: “இது என்ன வகையான செய்யுள்?”



பாட்டுக்கேட்பதில் விருப்பம் இல்லாதவர்கள் தனியே உட்காருங்கள். சிலேட்டில் விருப்பமானவற்றை எழுதுங்கள், அல்லது படம் வரையுங்கள்.

தையற்காரன் பாணா சொன்னான், "இது நவராத்திரித் திருவிழாவில் பாவாயில் பாடும் பாடல்" என்பதாக.

ராகவ் சொன்னான், "இந்த ஆசிரியர் 'பாவாய்' நடிகர் போலும். இவர் இங்கே 'பாவாய்' சொல்லிக் கொடுக்க வந்திருக்கிறார்."

பையன்களின் தாய்மார்கள் கவலைப்பட்டார்கள். "ஏன் பெண்கள் பாடவேண்டிய பாடல்களைப் பையன்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள்?" என்று.

இவற்றையெல்லாம் நான் புறக்கணித்தேன். இதைக் கவனித்துக் கொண்டிருந்தால் நான் எப்படி பணிபுரிய முடியும்? என்னுடைய பரிசோதனையில் நான் தைரியமாக இறங்க வேண்டும். இதன்மூலம்தான் ஒரு புதிய பாதையை வகுக்க முடியும்.

ஒவ்வொரு நாளும் புதிய பாடல்களைப் பாடினேன். பையன்கள் எவற்றை விரும்பினார்கள் என்பதையும் அறிந்து கொண்டேன். இவ்வாறாக பல பையன்கள் ஐந்தாறு பாடல்களைப் பாடம் செய்துவிட்டார்கள். சங்கீதமே பிடிக்காத ஒரு சில பையன் களும் இருக்கத்தான் செய்தார்கள். அவர்கள் அந்த நேரத்தில் படிக்கவோ எழுதவோ செய்தார்கள். அவர்களைப் பற்றி நான் கவலைப்படவில்லை.

நான் 'தண்டியா ரஸ்'ஸை அறிமுகப்படுத்துவதைக் குறித்து ஆலோசிக்கலானேன்.

ஆகவே வகுப்பின் நடவடிக்கைகள் பின்வருமாறு அமைந்தன: கதை சொல்லுதல், நூல்நிலையம், 'மாதிரி வாசிப்பு', விளையாட்டு, சொல்ல எழுதுதல், பாடல்கள் பாடக் கேட்டல், சுத்தமும், கடவுள் வாழ்த்தும்.

## 6

ஒருமுறை ஒரு பரமஹம்ஸ சந்நியாசி எங்கள் வகுப்புக்கு வந்தார். அவருடன் தலைமைஆசிரியரும் வந்தார். தலைமைஆசிரியர் அவரை அறிமுகம் செய்துவைத்தார்: "இந்த மகான் சமயச் சொற்பொழிவுகள் செய்பவர். இந்த ராஜ்ஜியத்தில் ஒவ்வொரு பள்ளியிலும் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்த அவருக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. இன்று அவர் கல்வி அதிகாரியிடம் ஒரு பரிந்துரை பெற்றுக்கொண்டு நமது பள்ளியில் சொற்பொழிவு நிகழ்த்துவதற்காக வருகை புரிந்திருக்கிறார்."

நான் மரியாதையோடு அப்பெரியவருக்கு வணக்கம் செலுத்தி விட்டு அவர் அமர்வதற்கு நாற்காலி ஒன்றை அளித்தேன். அதன்பின் அவரைச் சொற்பொழிவு நிகழ்த்த வேண்டினேன்.

பையன்கள் சந்நியாசியைப் பரக்கப் பார்த்தனர். அவரது மழித்த தலை, பிரகாசமான முகம், ஒல்லியான தேகம், அவர் கையில் வைத்திருந்த கமண்டலம் ஆகியவற்றை விநோதமாகப் பார்த்தனர். நான் பையன்களிடம், "சுவாமிஜி நம்மிடம் இப்பொழுது சொற்பொழிவு செய்யப்போகிறார். தயவு செய்து கவனமாகக் கேளுங்கள்" என்று கூறினேன்.

பையன்கள் நான் சொன்னதற்கு இணங்க அமைதியாக அமர்ந்திருந்தனர்.

சுவாமி தமது உபதேசத்தைத் தொடங்கினார். "பையன்களே! உலகத்தில் காணப்படும் பொருள்களிலெல்லாம் மிகப் பெரியவர் கடவுள். அவர்தான் இந்த உலகைப் படைத்தார். உலகம் அவரால் தான் நடைபெறுகிறது. நமக்கெல்லாம் அவர்தான் ஆதி..."

இவ்வாறு கடவுளின் புகழைக் குறித்துச் சொற்பொழிவு நிகழ்ந்தது.

நான் ஒன்றும் பேசாமல் அமைதியாக இருந்தேன். பையன் களும் அமைதியாகவே இருந்தார்கள். படிப்படியாக அவர்கள் பொறுமை இழக்கத் தொடங்கினர். சிலர் அசைந்தார்கள்; சிலர் பேனாவைத் திருகவும் சிலேட்டை ஆட்டவும் செய்தார்கள். சிலர்

புத்தகத்தைப் புரட்டினார்கள்; சிலர் வெளிப்படையாகவே எரிச்சல் அடைந்ததை வெளிப்படுத்தினார்கள். ஒரு பையன் கழிப்பிடத் திற்குச் செல்ல அனுமதி கேட்டு வெளியே சென்றான். அடுத் தடுத்து மற்ற பையன்களும் இவ்வாறே செய்யத் தொடங்கினார்கள். இரண்டு பையன்கள் பேச முயன்றார்கள். நான் அவர்களை அமைதியாக இருக்கும்படி சைகையால் தெரிவித்தேன்.

நான் சந்நியாசியிடம், "சுவாமி, பையன்கள் புரிந்துகொள்ளும் படியாகச் சில செய்திகளைக் கூறுங்கள்" என்று வேண்டிக் கொண்டேன்.

சுவாமி சுற்றி வளைத்துப் பேசுபவரல்ல. அவர் இந்து சமயத் தையும், அதன் புனித நூல்களையும் கொள்கைகளையும் குறித்துப் பேசினார். ஆனால் பையன்களுக்கு இதுவும் ருசிக்கவில்லை.

எனக்கு விந்தையாக இருந்தது, 'இதுவா சமயப்பிரச்சாரம் செய்யும் முறை? மிக ஆழ்ந்ததும், புரிந்துகொள்வதற்கு வாழ்நாள் முழுவதும் முயற்சி செய்ய வேண்டியதுமான சமயத்தின் அடிப் படைத் தத்துவங்களை இந்த முறையில் விளக்க முடியுமா? இது நீதிபோதனை அல்லது சமயத்தைக் குறித்த விஷயங்களைப் பரப்பும் வகுப்பா? இப்படிப்பட்ட சமயக்குறிப்புகள் உயிரற்ற சடலம் போன்றவை.'

சுவாமி புனித நூல்களிலிருந்து சுலோகங்களை உரைக்கத் தொடங்கிய பொழுது நான் இத்தகைய சிந்தனைகளில் ஆழ்ந்திருந் தேன். பையன்கள் தங்களால் இயன்றவரை அவரைப் பின்பற்றிச் சுலோகங்களை ஒலித்தனர். ஆனால் அவற்றில் ஒரு வார்த்தையைக் கூட அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. பையன்கள் ஏதோ ஒரு ஒலியை எழுப்பினார்கள், அதுவும் வேடிக்கையாகத்தான்.

சுவாமி மிகுந்த சிரத்தையோடு அவற்றையெல்லாம் கூறினார். அவரைப் பொறுத்தவரையில், இது மிகவும் தேவையான புனிதக் கடமையாகும். அவர் தனது கடமையைச் சரிவரச் செய்தார். ஆனால் பையன்களைப் பொறுத்தமட்டிலும் இது விழலுக்கு இறைத்த நீராக இருந்தது.

சுவாமிஜி சுலோகங்களின் பொருளை விளக்கினார். பையன்கள் கேட்டுத்தான் ஆக வேண்டியிருந்தது.

அவர் அவற்றைக் கரும்பலகையில் எழுதிப் பையன்களையும் தம் குறிப்பேடுகளில் எழுதிக் கொள்ளச் சொன்னார். அதன்பிறகு அவர், "நாள்தோறும் காலையில் எழுந்ததும், இரவில் படுக்கப் போகும் முன்பும் இந்தச் சுலோகங்களைச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். "இது உங்கள் அறிவை வளர்க்கும். தேக வலிமையைப் பெருக்கும். உங்களிடம் ஒளியைச் சேர்க்கும்."

என்னுடைய வகுப்பு மாணவர்கள் சராசரி பத்து முதல்



பரமஹம்ச சந்நியாசியைப் பையன்கள் பரக்கப் பார்த்தனர். அவருடைய மழித்ததலை, ஒளிபொருந்திய முகம், ஒல்லியான தேகம், கமண்டலம் ஆகியவற்றையே விநோதமாகப் பார்த்தனர்.

பன்னிரண்டு வயதுக்குட்பட்டவர்கள். அவர்களுக்குச் சமயத்தைக் குறித்தும் புனித சுலோகங்களைக் குறித்தும் என்ன அக்கறை இருக்கப் போகிறது? இருந்தாலும் அவர்கள் சுலோகங்களையும் அவற்றின் பொருளையும் குறித்துக் கொண்டார்கள்.

நான் சிந்தித்தேன்: 'சந்நியாசிக்கும் பிரசங்கம் செய்ய வேறு எந்த இடமும் இல்லாததால் அவர்கள் பள்ளிகளுக்கு வந்து விட்டார்கள். கடந்த காலத்தில் கோவில்களில் செய்யப்பட்ட போதனைகள் இல்லங்களில் பெற்றோர்களால் நடைமுறைப் படுத்தப்பட்டன. அது குழந்தைகளுக்கு சமயக் கல்வியாக அமைந்தது. ஆனால் இக்காலத்தில் பெற்றோர்களுக்குச் சமயச் சொற்பொழிவுகளைக் கேட்க நேரம் இல்லையா? அல்லது எந்தக் காரணத்தை முன்னிட்டோ பெற்றோர்களின் காலம் மாறி விட்டதா? அதனால் அவற்றைப் பள்ளிக் கூடங்களுக்குக் கொண்டு வந்து விட்டார்களா?'

மணி அடித்தபொழுது நான் 'இதைத்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். களைப்படைந்து போன பையன்கள் சுவாமிஜிக்கு வணக்கம் செலுத்திவிட்டு வெளியே சென்றனர். சுவாமிஜியும் நானும் மட்டும் வகுப்பில் இருந்தோம். "புனிதமான சுவாமியே!

இன்று ஒருநாள் என் விருந்தாளியாக இருங்கள்" என்று வேண்டிக் கொண்டேன்.

சாப்பிட்டுக் கொண்டிருந்தபொழுது, எங்கள் பேச்சுக்கு இடையே சமயக்கல்வி இடம் பெற்றது. சுவாமிஜி, "ஒரு காலத்தில் சமயத்துக்கு இருந்த மதிப்பு இப்பொழுது இல்லை. அதனால்தான் சமய போதனையை இளம் பருவத்திலேயே கொடுக்க வேண்டி இருக்கிறது" என்றார்.

நான், "சுவாமிஜி! கடவுள், ஆன்மா, சமயம் ஆகியவற்றைக் குறித்த நுட்பமான கருத்துக்களை இளம்பருவத்தில் எப்படிக் கிரகிக்க முடியும்?" என்று கேட்டேன். "நீங்களே பார்த்தீர்களே, பையன் களுக்கு இவற்றில் சிரத்தை இல்லை. மரியாதைக்காகத்தான் அவர்கள் அமர்ந்திருந்தார்கள்."

சுவாமிஜி, "ஆம். அது உண்மைதான். பையன்களுக்கு விளை யாட்டில்தான் விருப்பம். கதைகளையும் அவர்கள் சுவைத்துக் கேட்பார்கள். ஆனால் அவர்களுக்கு விருப்பமோ இல்லையோ, நம்முடைய புனித நூல்களை அவர்களுக்குப் போதிக்கத்தான் வேண்டும். மாணவர்கள் அவற்றை மனப்பாடம் செய்து கொள்ளக் கற்பிக்கப்பட வேண்டும்."

நான் அவரை மறுத்து "ஆனால் சுவாமிஜி, சமயம் என்பது வெறும் நாக்கின் நுனியில் தங்கியிருப்பதற்காக மட்டும் அல்ல. சமயம் என்பது ஒரு விழிப்பு. அது உள்ளிருந்து உண்டாக வேண்டும். அதற்கான ஏக்கம் இருக்கும் பொழுதுதான் அது வரும். சரியான நேரத்தில்தான் அது வரும். இது தவறான நேரத்தில் அவர்களின் மீது சுமத்தப்படுவதாகாதா?"

சுவாமிஜி என் வாதத்தைக் குறித்துச் சிந்தித்தார். நான் தொடர்ந்தேன். "சமயம் என்பது சத்தியம். அது விடுதலைக்கு இட்டுச் செல்கிறது. மனிதனின் இறுதிக் குறிக்கோள் விடுதலையே. ஆனால் இது கடினமானது என்று நீங்கள் கருதவில்லையா? சாதாரணப் பகுத்தறிவுக்கு இது எட்டுமா? இதை அறிவதற்கு அளவு கடந்த ஆயத்தம் வேண்டாமா?

"அது சரிதான். ஆனால்..."

நான் தொடர்ந்தேன்: "சமயம் என்பது சந்தைக் கடையில் வாங்கப்படுவதல்ல. புத்தகங்களால் அச்சிடப்பட்டுள்ளது சமயம் அல்ல. சமயத்தின் நுட்பமான ரகசியங்கள் எல்லாம், ஒவ்வொரு தனிமனிதனும் தன்னுடைய சொந்த முயற்சியால் கண்டுபிடிக்க வேண்டியவை அல்லவா?

சுவாமிஜி ஒப்புக் கொண்டார். "அதனால்தான் நம் முன் னோர்கள் தங்கள் குருக்களின் ஆசிரமத்தில் தங்கியிருந்து சமயத்தை உள்ளவாறு அறிய கடும் முயற்சி மேற்கொள்ள வேண்டியிருந்தது."

"ஆனால் இந்நாளில் நாம் வீடுகளிலும், பள்ளிகளிலும் மக்களுக்கிடையே சமயத்தைப் பிரச்சாரம் செய்ய முயன்று வருகிறோம்!"

"இது கலியுகம் அல்லவா? இன்று யார் குருவின் ஆசிர மத்துக்குப் போவார்கள்?" என்றார் சுவாமிஜி.

"அப்படியானால் விட்டு விடுங்கள். சமயத்தை விற்பதாலோ அல்லது நன்கொடையாக அளிப்பதாலோ அது பரவி விடாது."

"அப்படியான்னால் என்ன செய்வது?"

"சிறு குழந்தைகளுக்குச் சமய போதனை செய்யக் கூடாது என்று நான் கருதுகிறேன். இந்த வயதில் அவர்களுக்கு ஆரோக் கியமான உடலும் மனமும், கறைபடாத அறிவும், வேலை செய்வதற்குக் களைப்பு உண்டாகாத ஆற்றலும்தான் தேவை. அவர்களை எல்லா வகையிலும் வலிமை பெறச் செய்வதுதான் முறை."

"ஆம். வலிமையுடையவர்கள்தான் ஆன்மாவை அறிய முடியும்" என்றார் சுவாமிஜி.

நான், "இளமை தனக்கென விதிக்கப்பட்ட காலத்தில் மலருவது போல, சமய வேட்கையும் அதற்குரிய காலத்தில் அரும்பும் என்பது என் கருத்து. இவ்வாறு காலமற்ற காலத்தில் சமயத்தைப் புகுத்துவது காலமற்ற காலத்தில் செய்யும் திருமணம் போன்றது. சமயம் என்றால் சுலோகங்களை ஒப்பிப்பதும், நாள் தோறும் இயற்றும் சடங்குகளும் மட்டும்தான் என்பது சமய வேட்கையின் கூர்மையை மழுங்கச் செய்துவிடும். ஒருவன் வாழ்நாள் முழுவதும் சுலோகங்களை ஒப்பிக்கலாம். சடங்குகளைப் பின்பற்றலாம். சமயத்தின் புற வெளியீடுகளைப் பின்பற்றலாம். இருந்தாலும் உண்மையான சமயவாதியாக இருக்க முடியாது!" என்றேன்.

"நான் ஒப்புக் கொள்கிறேன். இதுகாறும் நான் அடைந்த தனிப்பட்ட ஆன்மீக அனுபவத்தின் வாயிலாக, இப்படிச் சிறுவர்களுக்குச் செய்யப்படும் சமய போதனை அவர்களுக்குச் சலிப்பையே தரும். ஆகவே சமயக் கல்வியைப் போதிப்பதற்கு வேறு ஒரு வழியை மேற்கொள்ள வேண்டும் என நானும் கருதுகிறேன்" என்றார் சுவாமிஜி.

"புனிதரே மன்னிக்க வேண்டும்" நான் இடைமறித்தேன். "சமயம் வாழ்ந்து காட்டப்படவேண்டியது என்பதைத்தான் நான் சொல்ல வருகிறேன். பெற்றோர்கள் முயற்சி செய்ய வேண்டும். ஆசிரியர்களும் முயற்சி செய்ய வேண்டும். மாணவர்களின் பாடப் புத்தகங்களில் குறிப்புகள் வரும் இடங்களில் எல்லாம் புராணங்கள், இதிகாசங்களிலிருந்து கதைகளைச் சொல்லலாம். வரலாற்றில்

இடம் பெறும் நாயகர்களின் கவிதைகளைக் கூறுவது போல புராண இதிகாச புருஷர்களின் கதைகளைக் கூறலாம். இந்த அளவுக்குக் குழந்தைகளைச் சமய அறிவு பெறச் செய்வதும் ஆயத்தம் செய்வதும் போதுமானது. சடங்குகளைப் போதிப்பதை விட்டு விடலாம். புனிதச் சுலோகங்களை மனப்பாடம் செய்வதும், ஒப்பிப்பதும் தேவையில்லை. நீதி போதனையின் பெயரால் மாணவர்களுக்குச் சமயத்தின் உதவாத பகுதிகளையும் நூல் களையும், இவற்றைப் போன்றவற்றையும் போதிக்க வேண்டாம்" என்றேன்.

"அப்படியானால் நான் என்ன செய்ய வேண்டும்?" என்று சுவாமிஜி கேட்டார்.

"நான் செய்வதைப்போல அவர்களுக்குக் கற்பியுங்கள்" என்றேன் நான்.

"எப்படி ஒரு சந்நியாசி ஆசிரியராகப் பணியாற்ற முடியும்?" என்று சுவாமிஜி கேட்டார்.

"மக்களுக்கு அறிவு போதிப்பது உங்கள் பணி. நீங்கள் ஆசான்களாக மாறினால், நல்ல ஆசிரியர்கள் இல்லாத குறையைப் போக்கி, உண்மையான நல்ல பணியைச் செய்ய முடியுமே?" என்றேன் நான்.

சுவாமிஜி புன்னகையுடன் கைகழுவச் சென்றார்.

அதன் பிறகு அவரும் நானும் மிகவும் நெருங்கிப் பழகினோம். அவர் கல்வியில் புதிய கருத்துக்களைப் பற்றிப் படிக்கிறார்; நான் அவரிடம் சமயத் தத்துவ நூல்களைக் கற்றுக் கொள்கிறேன்.

# 7

காலம் கடந்து கொண்டிருந்தது. ஆண்டு முடிவிற்குள் நான் பாடத் திட்டத்தை முடித்தாக வேண்டும்; என்னுடைய முறைகளையும் முன்னேற்றியாக வேண்டும். இந்தப் பரிசோதனைக்கு ஏதாவது பொருள் இருக்க வேண்டுமானால், நான் கட்டாயமாக முன்னேற் றத்தைக் காட்டியாக வேண்டும்.

நான் வரலாற்றைப் போதிக்க வேண்டும் என நினைத்தேன். வரலாற்றுப் பாடப்புத்தகங்களை நான் படித்துப் பார்த்தேன். எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. ஒரு புத்தகத்தில் தவறுகள்கூட இருந்தன. மற்றொரு புத்தகம் பழமையான கண்ணோட்டத்தில் எழுதப்பட்டிருந்தது. மூன்றாவது புத்தகம் பணம் சம்பாதிப்பதற் காகவே எழுதப்பட்டிருந்தது. நான்காவது புத்தகத்தின் நடையும், மொழியும் மிகவும் மோசமாக இருந்தன. ஜனரஞ்சகமாக ஒரு

புத்தகம் வயதுவந்தோருக்கு ஏற்றபடியும், மாணவர்களுக்குக் கடினமாகத் தோன்றும்படியும் இருந்தது.

'இந்தப் புத்தகங்கள் உதவாது' என்று நான் கருதினேன்.

அப்படியானால் நான் என்ன செய்வது? வரலாற்றைக் கதைகளின் வாயிலாகவே கற்பிப்பது என நான் முடிவு செய்தேன்.

எல்லாக் குழந்தைகளும் கதைகளை விரும்பினார்கள். இது வரை நான் அவர்களுக்குப் பலவிதமான கதைகளைச் சொல்லி வந்தேன். பாதி உண்மை கலந்தவை, கற்பனைக்கதைகள், தேவதைக் கதைகள். ஆனால் வரலாற்றுக் கதைகள் இம்மாதிரி இல்லை. வறண்ட வரலாற்று உண்மைகளைக் கொண்டு கதைகளை நான் உருவாக்கினேன். மாணவர்கள் அமைதியிழந்து காணப்பட்டனர்.

"ஐயா, இது கதை இல்லை" என்று அவர்கள் குறை கூறினார்கள்.

"ஐயா, இம்மாதிரிக் கதைகள் எங்களுக்கு வேண்டாம்."

"நாம் பாட்டுப் பாடுவோம்."

நான் தோல்வியடைந்து விட்டதை உணர்ந்தேன். குழந்தைகள் என்னைச் சூழ்ந்து கொண்டனர். வெளியே சென்று விளையாட வேண்டும் என்று என் கைகளைச் செல்லமாகப் பிடித்து இழுத்தனர்.

அன்று இரவு நான் இவ்விஷயத்தைப் பற்றிச் சிந்தித்தேன். வரலாற்று உண்மைகளை உள்ளவாறே பின்பற்றுதல் சரிப்படாது. உண்மைகள் என்று வரலாற்றாசிரியர்கள் கருதி எழுதியவற்றை அருகிலிருந்து கண்ட சாட்சிகள் யார்? கதைகளின் மூலம் வரலாற்றைச் சுவை உடையதாக ஆக்க முடியும். எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் வரலாற்றிலிருந்து கதைகளை கற்பனை யையும் சேர்த்துக் கூற முடியும்.

மறுநாள் நான் கதையை ஆரம்பித்தேன், "அது ஒரு பெரிய காடு. அங்கு வில்லவர்கள் வாழ்ந்தார்கள். வில்லவர்கள் வலிமை வாய்ந்த ஆரோக்கியமான மக்கள். அவர்கள் வில் வித்தையில் வல்லவர்கள்; பறக்கும் பறவையை அம்பு எய்து வீழ்த்தி விடுவார்கள். அந்தக் காட்டில் ஒரு சிறு குடிசை இருந்தது-

குழந்தைகள் ஆர்வத்தோடு கேட்டனர். நான் அவர்களுக்கு வனராஜனின் கதையைக் கூறினேன். உண்மைகளுக்கு நான் மெருகு ஏற்றினேன். (வனராஜன் குஜராத்திய அரசன்).

அன்று கதை முடியவில்லை.

மறுநாள் பையன்கள் என்னை வேறு வேலை எதுவும் செய்ய விடவில்லை. "வனராஜனின் கதையைச் சொல்லுங்கள்" என்றனர்.

நான் அவர்களுக்குக் கதையைச் சொன்னேன். கதை முடிந்ததும் சற்றுத் தயக்கத்துடன், "இந்தக் கதையை மறுபடியும்

கேட்க விரும்புபவர்கள் எழுந்து நில்லுங்கள்" என்றேன்.

வகுப்பு முழுவதும் எழுந்து நின்றது.

அடுத்தநாள் அதே கதை மீண்டும் சொல்லப்பட்டது. நான் நாள்தோறும் வரலாற்றிலிருந்து கதைகளைச் சொல்லிக் கொண்டே போனேன். இப்பொழுது யாரும் விளையாட்டோ பாட்டோ வேண்டுமென்று கேட்கவில்லை.

அவர்களின் சிரத்தை எவ்வளவு தாங்குமோ என்று நான் சிந்தித்தேன். யாரோ ஒருவர் கல்வி அதிகாரியிடம் புகார் கூறி விட்டார்: "பரிசோதனை எப்படி ஆயிற்று என்பதற்குக் காலம்தான் பதில் சொல்ல வேண்டும். உடனே நீங்கள் ஆசிரியரைக் குற்றம் சொல்லிவிட்டுப் பரிசோதனை தோற்றுப்போனது என்று சொல் வீர்கள். ஆனால் ஒரு வருடத்தை இழந்து விட்ட குழந்தைகளின் கதி என்ன?"

ஆசிரியர்களில் ஒருவரே போய்க் கல்வி அதிகாரியிடம் குறை கூறியிருந்தாலும் நான் ஆச்சரியப்படமாட்டேன். என்னுடைய பையன்கள் சந்தோஷமாக இருந்தார்கள்; முன்னேற்றமும் அடைந் தார்கள். மற்ற வகுப்புப் பையன்கள் அதிருப்தியோடும், வகுப்பில் கவனக் குறைவோடும், குறும்புத்தனத்தோடும் இருந்தனர். அவர்கள் தங்கள் ஆசிரியர்களைக் கதைகள் சொல்லும்படி கேட்டனர்; இதனால் ஆசிரியர்களுக்குக் கோபம்.

"நண்பர்களே! நீங்கள் உங்கள் வழியைப் பின்பற்றுங்கள்; நான் என் வழியில் போகிறேன். என்னுடையது பரிசோதனை. ஆனால் நான் நம்பிக்கையோடு இருக்கிறேன். உங்களைப் போலவே மாணவர்கள் ஒரு வருஷத்தை இழக்கக் கூடாது என்பதைக் குறித்து நானும் அக்கறையோடுதான் இருக்கிறேன். ஆகவே நான் கடுமை யாக உழைக்கிறேன். ஆனால் நான் எனக்கென்று பணிசெய்வதற் கான ஒரு முறையைப் பின்பற்றுகிறேன். நீங்களும் உங்களுக்குரிய முறையைப் பின்பற்றுகிறீர்கள். நீங்கள் விரும்பினால் நான் வேண்டு மானால் என் வகுப்பை வேறு இடத்திற்கு மாற்றிக் கொள்கிறேன்."

ஒருநாள் கல்வி அதிகாரி என் வகுப்பைப் பார்வையிட வந்தார். அவர் ஒரு நல்ல மனிதர் என்பதில் சந்தேகமில்லை. ஆனாலும் முழு நேரத்தையும் கதை சொல்வதற்காகவே நான் செலவிடுவதைக் கண்டு அவர் கொஞ்சம் அதிருப்தி அடைந்தார். அவர் என்னிடம் கூறினார்: "லட்சுமிராம், இந்த முறையில் மாணவர்கள் வரலாற்றைக் கற்றுக் கொள்ள முடியாது. அது கதையாக இருக்கும்வரை அதனை அவர்கள் அனுபவிப்பார்கள். அவ்வளவுதான். பாடப்பொருள் அவர்கள் மனத்தில் தங்காது. நீங்கள் பாடம் போதிப்பதிலும் அவர்கள் கற்றுக்கொள்வதிலும் என்ன இலக்கை அடைய முடியும்?"

ஒருவேளை அவர் கூறுவதும் சரியாக இருக்கலாம் என நான் உணர்ந்தேன். இறுதியில் பையன்கள் வரலாற்றில் முக்கியமான கருத்துக்களை நினைவில் வைத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் வரலாற்றுப் பாடத் தேர்வில் வெற்றிபெற மாட்டார்கள். தேர்வு என்னும் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுத்தான் நான் பணிபுரிய வேண்டும்.

நான் ஒரு பரிசோதனை செய்தேன். வனராஜனின் கதையை நான் அவர்களுக்கு மூன்றாவது முறையாகச் சொல்லிவிட்டேன். அதன் உள் விபரங்களை நான் சிறிது மாற்றினேன். பையன்கள் அதைக் கவனித்தார்கள். "இல்லை. அது அப்படி இல்லையே. கடந்த முறை ஆயிரம் குதிரைகள் இருந்ததாகக் கூறினீர்கள்; இப்பொழுது ஐம்பது குதிரைகள் என்கிறீர்களே. அது எப்படி? கடந்த முறை குடிசை நதியின் கரையில் இருந்தது. இப்பொழுது நீங்கள்..." இப்படியே சென்றது.

நான் ஆச்சரியம் அடைந்தேன். இவர்கள் பல நுணுக்கமான விபரங்களை அறிந்திருக்கிறார்கள். அவர்கள் எதையும் மறக்க மாட்டார்கள் என்று எனக்கு உறுதிப்பட்டது.

ஆனால் கற்பனை விபரங்கள் அடங்கிய கதை வரலாற்றுத் தேர்வுக்கு பயன்பட முடியாது. இந்தக் கதைகளைத் தேர்வாளரின் தொலைநோக்கியின் வரம்புக்குள் கொண்டுவர வேண்டும்.

நான் அவர்களுக்குச் சொன்ன கதைகளை நான் எழுதினேன். அவற்றைப் பையன்களுக்குப் படிக்கக் கொடுத்தேன். எங்கெல்லாம் முயுமோ அங்கெல்லாம் கதையைச் சுருக்கி அமைத்தேன். எங்கெல்லாம் தேவையோ அங்கெல்லாம் நிகழ்ச்சிகளின் ஆண்டு, இடம் முதலிய வரலாற்று விபரங்களைக் குறித்திருந்தேன். கதை சொல்வதற்கும் கதை எழுதுவதற்கும் மேற்கொள்ளப்பட வேண்டியவை முற்றிலும் மாறுபட்டவை. இந்த மாறுபாட்டை நான் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டேன். மாணவர்களும் இவற்றை விருப்பத்தோடு படித்தார்கள்.

அப்போதும்கூட இந்தப் பாடத்தில் கேட்கப்படும் கேள்வி களுக்கு அவர்கள் சரியாக விடை தருவார்களா என்பதில் எனக்குச் சந்தேகம்தான்.

கதையின் முக்கியமான விபரங்களைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொரு செய்தியையும் ஒரு வாக்கியமாக அமைத்தேன். இது தான் கதையின் வெளிப்புற அமைப்பு—செய்திகள் மட்டும். இவற்றைப் பையன்களிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னேன்.

மாணவர்கள் அவற்றைப் படித்தார்கள். இந்த வெளிக் கட்டமைப்பைக் கொண்டே முழுக்கதையையும் நினைவுக்குக் கொண்டுவந்துவிட முடியும் என்று அவர்கள் கருதினார்கள்.

கதையின் நுணுக்கங்களை அறிவதற்காக ஒருநாள் அவர்களிடம் கேள்விகள் கேட்க முற்பட்டேன். நான் ஆச்சரியப்படும் வகையில் கேட்ட கேள்விகளுக்கு விரைவாகவும் சரியாகவும் விடை அளித்தார்கள். இவர்கள் தேர்வில் வெற்றியடைவது மட்டுமல்லாமல் தேவையான விவரங்களை மறக்கவே மாட்டார்கள் என்பதும் எனக்கு உறுதி ஆயிற்று.

நான் ஒரு மாதிரிக்காக கல்வி அதிகாரியை வகுப்பிற்கு வந்து மாணவர்களிடம் வரலாற்றுப் பாடத்தில் கேள்விகள் கேட்கும்படி வேண்டிக் கொண்டேன். கேள்வி கேட்டு முடிந்தபின் அவரே, “இது நன்றாக இருக்கிறது. இதுபோல் வரலாற்றைக் கற்பிக்கும் முறையை மற்ற வகுப்புகளிலும் மேற்கொள்ளவேண்டும்” என்றார்.

என் மனத்திலிருந்து ஒரு சுமை இறங்கியது.

நான்கு மாதங்கள் கழிந்துவிட்டன. நான் பெற்ற வெற்றி எனக்கு உற்சாகத்தை அளித்தது. ஆனால் செய்ய வேண்டியது இன்னும் நிறைய இருந்தது.

# பருவத்தின் முடிவில்

## 1

ஒவ்வொரு ஆண்டும் வழக்கம்போல் நடக்கும் எங்கள் பள்ளியின் ஆண்டு விழா நிகழ்ச்சிக்கான தயாரிப்புகளில் அனைவரும் ஈடுபட்டனர். கமிஷனர் பள்ளிக்கு வருகை புரியவிருந்தார். பள்ளியில் ஒரு நாடகம், சில செய்யுள்களை ஒப்புவித்தல், உடற் பயிற்சித் திறன்களைச் செய்துகாட்டுதல் முதலிய நிகழ்ச்சிகள் இந்த விழாவில் நடைபெறுவது வழக்கம். அதன்பிறகு ஆணையர் பரிசுகளை வழங்குவார். பள்ளியில் ஒவ்வொருவருக்கும் ஒரு இனிப்புப் பொட்டலம் வழங்கப்படும்.

தலைமைஆசிரியர் எல்லாப் பையன்களையும் வரவழைத்து யார் யார் நன்றாகப் பாடுவார்கள், அல்லது வசனங்களைச் சரிவரச் சொல்லுவார்கள் என்று தாம் கருதுகிறாரோ அவர்களைத் தேர்ந் தெடுத்துக் கொண்டிருந்தார். எனக்கும் இது பற்றி அறிவிக்கப் பட்டது. ஆனால் என்னுடைய மாணவர்கள் தலைமைஆசிரியரின் தேர்ந்தெடுப்புக்குச் செல்லவில்லை. தலைமைஆசிரியர் என்னிடம் இதற்கு விளக்கம் கேட்டார். “என்னுடைய வகுப்பு மாணவர்கள் இந்த நிகழ்ச்சியில் பங்கேற்க மாட்டார்கள்” என்று நான் கூறினேன்.

“ஏன் அப்படி,”

நான் அழுத்தமாக, “இந்த ஏற்பாடே கமிஷனரை மகிழ்விப்ப தற்காக, அவரது நல்ல அபிப்ராயத்துக்காக நடத்தப்படுகிறது” என்றேன்.

“ஆனால் இதுதான் இங்கு வழக்கம். கல்வி அதிகாரியும் இந்த நடைமுறையைத்தான் நாம் பின்பற்ற வேண்டும் என்று கருதுகிறார்” என்று சற்றுக் கோபத்தோடு கூறினார்.

“அது அப்படியே இருக்கலாம். நான் அதில் பங்கு ஏற்க மாட்டேன். என் மாணவர்களும்தான்” என்றேன் நான்.

“அப்படியானால் நான் கல்வி அதிகாரியிடம் புகார் செய்ய வேண்டியிருக்கும். நீங்கள் ஒத்துழைப்புத் தரவில்லை என்றும் பிரச்சினை விளைவிப்பதாகவும் தெரிவிப்பேன்” என்றார் தலைமை ஆசிரியர்.

"கட்டாயம் அப்படியே எழுதிவிடுங்கள். அவருக்கு நான் சரியான விளக்கம் கொடுத்துக் கொள்கிறேன்" என்றேன் நான். படபடத்துப்போன தலைமைஆசிரியர் அந்த நிமிடமே கல்வி அதிகாரிக்குப் புகார்க் கடிதம் எழுதி அனுப்பினார்.

இதற்கிடையில் விழாவில் பங்கேற்கும் மாணவர்களின் தேர்வு நடைபெற்றது. ராம்ஜியும் பீம்ஜியும் சமஸ்கிருதச் செய்யுட்களை ஒப்பிப்பதற்கும் தேவாஜியும் கிம்ஜியும் கவிதை படிப்பதற்கும் ராம்னிக் நேம்சந்தும் மகன்லாலும் நாடகத்திற்கும் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். கட்டுமஸ்தான உடல்வாகு வாய்ந்தவர்கள், நல்ல தோற்றம் உடையவர்கள் உடற்பயிற்சிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

தலைமைஆசிரியருடன் நடந்த விவாதத்தால் நான் கோபம் அடைந்தேன். உள்ளுக்குள்ளே கடும் சினம் பொங்கியது. "நல்லது! தலைமைஆசிரியர் அவர்களே பள்ளிக்கும், அதன் நடைமுறைக்கும் ஒரு கும்பிடு. எந்த நிகழ்ச்சிக்காகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்களோ அவற்றுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட பையன்களின் திறமைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையே. ராம்ஜிக்கும் பீம்ஜிக்கும் நல்ல குரல் வளம் உண்டு என்பதில் ஐயம் இல்லை. அவர்கள் பிராமணப் பையன்கள். ஆகவே அவர்களின் வீட்டில் சமஸ்கிருதச் செய்யுட் களைக் கேட்டிருப்பார்கள். ஆகவே அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு ஞாபகசக்தி குறை வாயிற்றே! சமஸ்கிருதச் செய்யுள்களை மனப்பாடம் செய்வது அவர்களுக்குக் கடுமையான காரியம் ஆயிற்றே. ஆனால் இங்குள்ள சூழ்நிலையில் எப்பொழுதும் இப்படித்தான் நடக்கும்." இவ்வா றெல்லாம் கருதிக் கொண்டே மகிழ்ச்சியில்லாமல் வீடு திரும்பினேன் நான். உணவருந்தி முடித்தவுடனேயே தன்னை வந்து பார்க்கும்படியாகக் கல்வி அதிகாரியிடமிருந்து எனக்குக் கட்டளை வந்தது. எதற்காக என்பது எனக்குத் தெரியும். எல்லாம் வல்ல இறைவனிடம் மௌனமாகப் பிரார்த்தனை செய்துகொண்டே நான் அவரது அலுவலகத்திற்குள் நுழைந்தேன். கல்வி அதிகாரி மிகுந்த கோபத்துடன் காணப்பட்டார். அவருடைய முகம் சிவந் திருந்தது. கண்கள் கொடூரமாக இருந்தன. மீசையில்லாத அவரது உதடுகளில் ஒரு வலிய வரவழைக்கப்பட்ட புன்னகை காணப் பட்டது. இருந்தாலும் அவர் மிகவும் கோபத்துடன் காணப் பட்டார். உள்ளே நுழைந்த என்னை உட்காரச் சொல்லிவிட்டுப் பேசத் தொடங்கினார்: "பள்ளியின் ஆண்டுவிழாவில் ஏன் உங்கள் வகுப்புப் பையன்கள் கலந்து கொள்ள மாட்டார்கள். அவர்களில் சிலர் மணியான பையன்கள், எடுப்பான தோற்றமும் உள்ளவர்கள் ஆயிற்றே" என்று கேட்டார்.

வெளித்தோற்றத்தில் நான் அமைதியாக இருந்தபோதிலும் உள்ளே படபடப்பாக இருந்தேன். "அதனால் என்ன ஐயா, எடுப்பான தோற்றம் உடைய பையன்கள் பிறரை மகிழ்விப்ப தற்காகவா இருக்கிறார்கள்? பள்ளிக்கு நல்ல பெயர் வரவேண்டும் என்பதற்காக இவர்கள் குதியாட்டம் போடவேண்டுமா?" என்று நான் கேட்டேன்.

இவ்வாறு நான் கடுமையாகக் கேட்டது அவரைப் பாதித்தது- அவர், "என்ன விஷயம்? இது புதிய விஷயம் அல்லவே? பல ஆண்டுகளாக இதுதானே நடைபெற்று வருகிறது. கமிஷனர் பள்ளிக்கு வரும்பொழுதெல்லாம் இப்படித்தான் நடைபெற்று வருகின்றது" என்றார்.

"என்னை மன்னிக்க வேண்டும் ஐயா!" இதற்குள் நானும் சிறிது தணிந்து விட்டேன். "இது வழக்கமாக இருக்கலாம். ஆனால் நாம் இதை நிறுத்தியாக வேண்டும். இது போலித்தனமானது. மேலும் நாம் ஆணையரை ஏமாற்றுகின்றோம்" என்றேன் நான்.

"எப்படி?"

"வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டவற்றைத்தான் நாம் அவரிடம் காண்பிக்கப் போகிறோம். பையன்களை ஆசிரியர்கள் அடி அடி என்று அடித்து அவர்களை மனப்பாடம் செய்யச் சொல்லி வதைத்து இவற்றைத் தயாரிக்கிறோம். வகுப்பில் நடத்தப் படுபவற்றின் இயற்கையான வெளியீடு அல்ல இது. தங்கள் மூளைக்குள் திணிக்கப்பட்டவற்றை மாணவர்கள் இயந்திர கதியில் ஒப்பிக்கப் போகிறார்கள். இதற்குத் திரைக்குப் பின்னாலிருந்து வேறு ஞாபகப்படுத்த வேண்டும். இதனால் பையன்களுக்கு ஒரே கலவரமும் மனப்பளுவும்தான் மிஞ்சும். இதனால் உண்மையான கல்வி தடைப்படுகிறது. மனப்பளு மாணவர்களுக்குத் தீமை விளை விக்கும். இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சிக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களுக்கு மிகுந்த தயாரிப்புத் தேவைப்படுகிறது."

கல்வி அதிகாரி சில வினாடிகள் யோசித்தார். பிறகு, "ஏமாற்றுகிறோம் என்று சொன்னாயே, இதில் ஏமாற்றுதல் எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்.

"அதுவா? ஆணையரிடம், நம் பையன்கள் மிகவும் கெட்டிக் காரர்கள் என்றும், நம் பள்ளி நன்றாக இயங்குகிறது என்றும், நம் பள்ளி ஒரு முன்மாதிரியாகத் திகழ்கிறது என்றும் காண்பிக்க நாம் முயற்சி செய்கிறோம். ஆனால் உண்மை நிலை என்ன என்பது நமக்குத் தெரியவில்லையா?" என்று நான் கேட்டேன்.

அவர் மௌனமாக இருந்தார். சற்றுச் சிந்தனையில் ஆழ்ந்தார். நான் மேலும் தொடர்ந்தேன். "நாம் மட்டும் போலித்தனத்தில் இறங்குவதில்லை; பையன்களையும் அதற்கு உட்படுத்துகிறோம்.

ஆணையரும் சந்தோஷம் அடைந்ததாகப் பாவனை செய்வார். பரிசு வழங்கும்போது ஒரு வழக்கமான சொற்பொழிவு நிகழ்த்துவார். ‘பையன்கள் திறமையைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். அவர்கள் மிகுந்த புத்திசாலித்தனத்துடனும் திறமையுடனும் நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டினார்கள். சில பையன்கள் எதிர் காலத்தில் மிகவும் சிறந்து விளங்கப் போகிறார்கள்; பெரிய அறிஞர்களாகவும், சிறந்த குடிமக்களாகவும், நல்ல மனிதர்களாகவும் விளங்குவார்கள்’ என்றெல்லாம் கூறுவார். ஆனால் அவை உளப்பூர்வமாக உரைக்கப்படுபவை அல்ல, அவரை மகிழ்விப்பதற் காகவே இவற்றையெல்லாம் தயாரித்திருக்கிறோம் என்பது அவருக்குத் தெரியாதா? இந்தப் பையன்கள் எதிர்காலத்தில் எப்படிப்பட்ட குடிமக்களாக, அறிஞர்களாக விளங்கப் போகிறார்கள் என்பது பெற்றோர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் நன்றாகவே தெரியும். அவர்களின் பாடம் செய்து ஒப்புவிக்கும் மேல்பூச்சும் கடும் உழைப்பாகிய தயாரிப்பும் இல்லாமல் அவர்கள் உண்மையில் எப்படி இருப்பார்கள்..?”

“நீ ஒரு நடைமுறைக்கு ஒவ்வாத கிறுக்கன். உனக்கு உலகப் போக்கே தெரியவில்லை. உன் கொள்கைதான் உனக்கு எல்லாமே. நாம் இவற்றையெல்லாம் இங்கே கவனித்துத் தீரவேண்டி இருக்கிறது” என்று கல்வி அதிகாரி படபடப்புடன் கூறினார்.

“சரி சரி. நீங்கள் எல்லா அம்சத்தையும் பார்க்கிறீர்கள். நான் இதற்கு உடந்தையாக இருக்க மாட்டேன். இந்த வெளிவேஷ மெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை.”

“அப்படியானால்?”

“இந்த வேலையிலிருந்து என்னுடைய வகுப்புக்கு விலக்கு அளியுங்கள்.”

“அது சற்றுக் கடினமான விஷயம். மற்ற ஆசிரியர்களும், அலுவலர்களும்... மேலும்... மேலும்... வந்து, இது என்னுடைய பிரச்சினைகளைக் கூட்டுகிறது. உண்மையைச் சொல்லப்போனால் உன்னுடைய வகுப்பின் நன்றாகத் தயாராக்கப்பட்ட மாணவர் களைப் பார்த்தால் ஆணையர் மிகவும் மகிழ்ச்சி அடைவார். ஆனால் நீயோ...”

நான் இடைமறித்து “மொத்தமாக நிகழ்ச்சியிலிருந்து எனக்கு விலக்கு அளித்து விடுங்கள். நான் வேறு ஒரு நிகழ்ச்சியைத் தயாரிக் கிறேன். அதை ஆணையருக்குக் காண்பிக்கலாம். பையன்கள் தங்கள் நேரத்தை வீணாக்காத வகையில் நான் அதைத் தயாரிக்கிறேன். அவர்களுக்கு எந்தச் சிரமமும் இருக்காது; நீங்கள் இருவரும் அதைக் கட்டாயம் பாராட்டுவீர்கள்.”

கல்வி அதிகாரி சற்றுச் சிந்தித்தார். இந்த வாதப்பிரதி



'நீங்கள் எல்லா அம்சத்தையும் பார்க்கிறீர்கள். எனக்கு இந்த வெளிவேஷமெல்லாம் பிடிக்கவில்லை' என்றேன் நான்.

வாதத்திற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்காக, "சரி சரி. நான் உங்கள் வகுப்புக்குப் பொதுத்திட்டத்திலிருந்து விலக்கு அளிக்கும்படி தலைமைஆசிரியருக்கு எழுதிவிடுகிறேன். ஆனால் அவருக்கு இனியும் எந்தவிதச் சங்கடமும் தரக்கூடாது. அவர் கொஞ்சம் பழைய காலம்; நீயோ உற்சாகம் மிகுந்த இளைஞன். எனக்கு இருவரும் வேண்டும். இது ஒரு கடுமையான வேலை."

எனக்கே உரிய முறையில் நான் அவரது போக்கைப் புரிந்து கொண்டேன். ஒரு வார்த்தை பேசாமல் அங்கிருந்து புறப்பட்டேன்.

பள்ளியில் ஆயத்தங்கள் முழு அளவில் நடைபெற்றன. ஆணையர் வருகிறார் என்பதால் எல்லாரும் பரபரப்பாக இருந்தனர். குறிப்பிட்ட நாளில் ஊரே குழுமி இருந்தது. பெரிய, சிறிய அலுவலர்கள், நகரின் முக்கியப் பிரமுகர்கள், மாணவர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். ஆசிரியர்களுக்கு நிலை கொள்ள வில்லை. ஒரு பக்கம் கலவரம், மறு பக்கம் நம்பிக்கை. எல்லாம் சரிவர நடக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. குறும்புக்காரப் பையன்களைத் தலைமைஆசிரியர் தனியே அழைத்து, "இங்கே கவனியுங்கள், இன்று நீங்கள் ஏதாவது குறும்பு செய்தால், நாளைக்கு உங்களுக்குச் சரியான உதை கிடைக்கும்" என்று எச்சரித்தார்.

ஆணையர் வந்தார். பலத்த கைதட்டல். அடுத்து இசை. தலைமைஆசிரியர் மகவும் எடுப்பாக உடை உடுத்தி முக்கியஸ்தர் போல விளங்கினார்; பள்ளியின் ஆண்டறிக்கையை உரக்க வாசித்தார். இடையிடையே இறுக்கமாகத் தோன்றினார். அவருடைய நடுக்கத்தைப் பிறரும் தாமும் அறியாதவாறு மூடி மறைப்பதுபோல் தோன்றியது. அறிக்கையின் கடைசிப் பகுதியை வாசிக்கும்பொழுது அவருக்கு வியர்த்துவிட்டது. அவரது குரலும் கரகரப்பாயிற்று.

அறிக்கையை அடுத்துக் கவிதை ஒப்புவித்தலும் ஒரு சிறு நாடகமும் நடந்தேறின. மேடையில் பையன்கள் இயந்திரகதியில் பேசினர். அவர்களது முகத்தில் சிறிதும் பாவனை இல்லை. சத்தம் போட்டும் கைகால்களை அசைத்துக் கொண்டும் பேசினார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால் அவர்கள் தேர்ந்தெடுத்திருந்த கவிதைகள் மிகவும் அழகானவை, சுவை மிகுந்தவை, சிறந்த கவிஞர்களால் இயற்றப்பட்டவை. ஆனால் பையன்களுக்கு அவற்றைக் கற்றுக் கொள்வது சிறிது சிரமம்தான். ஆகவே பையன்கள் அவற்றின் பொருளை அறியாமலேயே ஒப்புவிப்பதும் நடித்துக் காட்டுவதுமாக இருந்தனர். அவற்றில் ஈடுபாடு இருப்பது போல் பாவனை மட்டுமே செய்தனர். நாடகமும் அப்படித்தான் அமைந்தது. நாடக வசனங்கள் நீதி போதனைகளாக அமைந் திருந்தன. பெரியவர்களுக்கு மட்டுமே பொருந்தக்கூடிய வசனங் களைக் குழந்தைகள் பேசியது பொருத்தமாகத் தோன்றவில்லை. பையன்கள் பிறருக்கு உபதேசம் செய்தது கேலிக்குரியதாகத் தோன்றியது. ஆணையரும் அப்படியே கருதியதுபோலவும் தனக்குள் அவர் ரகசியமாகச் சிரித்துக் கொண்டது பேலவும் எனக்குத் தோன்றியது. ஆசிரியர்களும் நான் நினைத்தது போலவேதான் நினைத்தார்கள் என்றும் தோன்றியது.

நிகழ்ச்சி முடியும் நிலையை அடைந்தது. ஆணையர் தம் திருப்தியை வெளியிட்டார்; அனைவருக்கும் நன்றி தெரிவித்தார். பரிசுகள் வழங்கப்பட்டன. அன்றைய நிகழ்ச்சிகளைக் குறித்து கல்வி அதிகாரியும், தலைமை ஆசிரியரும், மற்றவர்களும் மிகவும் திருப்தி அடைந்தனர். ஆணையர் பள்ளியின் சாதனைகளைக் குறித்துத் தாம் திருப்தி அடைவதாக ஏதோ ஓர் சடங்குக்காகக் கூறியதுபோல் கூறினார்.

கடைசியில் கல்வி அதிகாரி ஆணையரிடம் "ஐயா, இந்த ஆசிரியர் லட்சுமிராம் உங்களுக்கு ஒரு நிகழ்ச்சியைக் காட்ட விரும்புகிறார். அதோ அந்தத் திரைக்குப் பின்னால் அவர் ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்" என்று கூறினார்.

ஆணையர் ஒப்புதல் தெரிவித்ததும் நான் திரைக்குப் பின்னால்

சென்றேன். மூன்றாவது மணி அடித்ததும் திரை விலகியது. என் வகுப்பு மாணவர்கள் எனக்கு இரு பக்கமும் நின்றனர். நாங்கள் வகுப்பில் நாள்தோறும் நிகழ்த்தும் பிரார்த்தனைப் பாடல் பாடப்பட்டது. அறை முழுவதும் அமைதி நிலவியது. இந்த எதிர்பாராத நிகழ்ச்சியைப் பார்த்ததும் அனைவரும் ஆச்சரியம் அடைந்தார்கள்.

பிரார்த்தனைக்குப் பிறகு "நான் ராஜசபைக்கு ஓடுவேன்" என்னும் சிறு நாடகம் நடிக்கப்பட்டது. ஒரு பையன் சுண்டெலியாக நடித்தான். அவனுடைய இடுப்பில் கட்டிய ஒரு கயிறு வாலாகத் தோன்றியது. அவன் தலையில் ஒரு கறுப்புத் துணியை அணிந் திருந்தான். அவன் கை கால்களாகிய நான்கு உறுப்புகளால் நடந்து கொண்டு சுண்டெலியைப் போல் 'கீச் கீச்' என்று ஒலியெழுப் பினான். ஒரு பையன் தையற்காரனாக நடித்தான். மற்றொருவன் சித்திரத்தையல் செய்பவனாக நடித்தான். மூன்றாமவன் நகை செய்பவனாக நடித்தான். நான்காமவன் மேளக்காரனாக நடித்தான். ஐந்தாமவன் அரசன். நான் அரசனின் போர்வீரன்.

எல்லாப் பாத்திரங்களும் அவர்கள் அன்றாடம் அணியும் ஆடைகளுடனேயே இருந்தனர். ராஜா ஒரு மேஜையின் மேல் கம்பீரமாக அமர்ந்திருந்தான். அவனது தொப்பியை மட்டும் சற்றுச் சரிவாக அணிந்திருந்தான். நான் போர்வீரனாக மீசையைத் திருகி விட்டிருந்தேன்; தலையில் ஒரு தலைப்பாகை தரித்திருந்தேன்; என் கையில் ஒரு வாள் வைத்திருந்தேன். மேளக்காரன் ஒரு சிறிய மத்தளத்தை வைத்திருந்தான். மற்ற ஒப்பனைகள் எதுவும் இல்லை.

அரங்கம் எளிமையாக இருந்தது. திரைக்குச் சற்றுப் பின்புறமாக ஒரு கரும்பலகையில் நாடகத்தின் திட்டம் எழுதப் பட்டிருந்தது. அறையின் ஒரு பகுதியை ஒதுங்கவைத்து ஒரு பையனிடம் இரவலாகப் பெற்ற தரை விரிப்பு ஒன்றை விரித் திருந்தோம். அரங்கத்தை அலங்கரிக்கப் பள்ளிக்கூடத்தில் வேறு எந்தப் பொருளும் இல்லை. வேப்ப மரத்திலிருந்தும் அரச மரத் திலிருந்தும் வெட்டப்பட்ட சில சிறிய கொப்புகளால் சுவரில் தோரணங்கள் இடப்பட்டிருந்தன. தரையில் சாக்பீஸ்கள் கொண்டு மாணவர்கள் கொஞ்சம் கோலங்களை வரைந்திருந்தனர்.

பெரியவர்களும், சிறியவர்களும் நாடகத்தை அமைதியாகக் கண்டு களித்தனர். சிறியவர்கள்—குறிப்பாக மாணவர்கள் மிகவும் ஆர்வத்தோடு பார்த்தார்கள். பெரியவர்களுக்கு ஒரே ஆச்சரியம். "இது என்ன?" "இந்தப் புதிய விஷயம் என்ன?" "இது என்ன மாதிரியான நாடகம்?" என்று அவர்கள் கேட்டார்கள்.

பையன்கள் மிக நன்றாக நடித்தார்கள் என்றுதான் நான் கூறுவேன். அவர்கள் தவறு ஏதும் செய்யவில்லை. மறந்தால்

நினைவுபடுத்துவோர் எவரும் இல்லை. ஏதாவது தவறு அல்லது மறதி இருந்தால் நானே வெளிப்படையாக அவர்களைத் திருத்தினேன். இரண்டாவது சிறு நாடகம். 'என்னைப் போகவிடுங்கள் ஐயா' என்பதாகும். மூன்றாவது 'முயலும், கம்பீரமான எசமானும்' என்பதாகும்.

ஒரே திரை மட்டும்தான் இருந்தது. பின் திரை இல்லை. பக்கத் திரைகளும் காட்சி ஜோடனைகளும் இல்லை. தலையில் ஒரு துணியைக் கட்டுதல் அல்லது கையில் ஒரு தடி ஆகியவற்றைத் தவிர வேறு ஆடை அலங்காரங்களும் இல்லை. மற்ற எல்லாம் நடிப்பைப் பொறுத்தே அமைந்தன.

காட்சிகளின் இறுதியில் மீண்டும் பிரார்த்தனை கீதம். நான் நடிகர் குழுவின் மேற்பார்வையாளராகி முன்னே வந்து சிறிது நேரம் பேசினேன்.

"அன்பான பெரியோர்களே! எங்கள் எளிய நாடகங்களைப் பொறுமையாகக் கண்டு ரசித்த உங்களுக்கு எங்கள் நன்றி. இந்த சந்தர்ப்பத்தில் நான் உங்களிடம் சில செய்திகளைச் சொல்ல விரும்புகிறேன். பொறுமையாக செவிசாய்த்துக் கேட்க உங்களை வேண்டுகிறேன்.

"இவர்கள் நான்காம் வகுப்பு மாணவர்கள். பள்ளியின் ஆண்டுவிழாவில் ஓரிரு நாடகங்களை நடிக்க வேண்டும் என்று சொன்னவுடனே அவர்கள் உற்சாகத்தோடு ஒப்புக் கொண்டார்கள். உடனே நாடகங்கள் தேர்வு செய்யப்பட்டன. அவர்கள் படித்த அல்லது கேள்விப்பட்ட கதைகளையே நாடகங்களாக மாற்றியிருக்கிறோம். நாடகத்துக்கென பிரத்யேகமான தயாரிப்பு எதுவும் இல்லை. நாங்கள் வகுப்பில் வாரம்தோறும் எப்படி அவற்றை நடித்தோமோ அதுபோலவே இப்பொழுதும் நடிக்கப் பட்டது. பையன்கள் தங்கள் பாகத்துக்குரிய வசனத்தை மனப் பாடம் செய்ய வேண்டியிருக்கவில்லை. கதை அவர்களுக்கே தெரியும். ஒவ்வொருவருக்கும் தன் பாத்திரம் இன்னது என்று தெரியும். சந்தர்ப்பத்தை மனத்தில் வைத்துக் கொண்டு ஏற்றபடி அவர்களே பேசினார்கள். மனப்பாடம் செய்ய வேலை இல்லை. ஆடை அலங்காரங்கள் இரண்டாம் இடத்தையே பெற்றன. வெளியீடு, நடிப்பு ஆகியவற்றுக்குத்தான் நாங்கள் கவனம் செலுத்தினோம். ஆடை அலங்காரங்கள் இல்லாத பொழுது, நாடகம் நடிப்பையும் பிள்ளைகளின் புத்திசாலித்தனத்தையும் பொறுத்தே அமைகிறது. இதனால் அவர்கள் நாடகத்தை எப்படியும் வளர்த்துக் கொள்ளலாம் என்றாகிறது. நீங்கள் நாடகத்தைப் பார்த்தீர்கள். எந்த அளவுக்கு நாங்கள் வெற்றி அடைந்தோம் என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளலாம். குழந்தைகளுக்கு

இப்படிப்பட்ட நடவடிக்கைகள் என்றால் ஒரே சந்தோஷம். அவர் களுக்குப் பாராட்டோ பரிசுகளோ தேவை இல்லை. இங்கே நடிப்பும், திருப்தியும் எடுத்துக்கொண்ட காரியம் நிறைவேறுவதும் தான் தேவை. நிறைவேற்றல்தான் காரியத்தின் வெற்றி." அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறி நான் என் பேச்சை முடித்தேன். பார்வையாளர்கள் எங்கள் மாணவர்களின் நாடகங்களைக் கண்டு களித்தமைக்காக நன்றி கூறினேன்.

ஆணையர் வெளிப்படையாக மகிழ்ச்சி அடைந்தார். அவர் நாகடத்தைப் பார்த்தபொழுதே அவரிடம் தோன்றிய மாற்றங்களை நான் கவனித்தேன். அவர் தம்முடைய பேச்சில் ஆசிரியர்களையும் மாணவர்களையும் மனமாரப் பாராட்டினார். "அன்று மாலை அவர்கள் வழங்கிய உண்மையான நாடக விருந்து" என்று பாராட்டிப் பேசினார். நாடகம் அபாரமாக அமைந்திருந்தது என்றும் தம்முடைய நாடாகிய இங்கிலாந்தில் முற்போக்கான பள்ளிகளில் இப்படித்தான் இருக்கிறது என்றும் கூறினார். "சின்னக் குழந்தைகள் பல பாத்திரங்களை ஏற்று, சுண்டெலியாகவும், தையற் காரராகவும், அரசராகவும் இயல்பாகவே மாறி நடித்தது மிகவும் அற்புதமாக இருந்தது" என்றார். "இதுதான் உண்மையான கல்வி" என்றார். "மனப்பாடம் செய்வதும் ஒப்புவிப்பதும் எல்லாம் கடந்து போன பழைய கால முறைகள்; அவை அவலட்சணமாகவும் ஆன்மாவைக் கொல்லுபவையாகவும் இருக்கும்" என்றார்.

சிறிது நேரம் சிந்தித்துவிட்டு மறுபடியும் மீண்டும் "நான் இந்தக் காட்சிகளை மிகவும் ரசித்தேன். குழந்தைகளுக்கு நான் பரிசுகள் வழங்கப்போவதில்லை. நடிக்கும்பொழுது அவர்கள் அடைந்த உண்மையான மகிழ்ச்சியே அவர்களுக்குப் போதுமான பரிசாகும்" என்றார். "நான் மிகவும் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைகிறேன். மிகமிக மகிழ்கிறேன்" என்றார்.

விழா இனிது நிறைவேறியது. எல்லாரும் திரும்பிக் கொண் டிருந்தார்கள். கல்வி அதிகாரிக்கு ஒரே மகிழ்ச்சி; என்னைத் தனியே அழைத்து ஆணையருக்கு அறிமுகம் செய்துவைத்தார்; என் பரிசோதனையைக் குறித்து ஆணையரிடம் எடுத்துரைத்தார். ஆணையர் என்னோடு கைகுலுக்கினார். என்னை மிகவும் பாராட்டினார். எனது பரிசோதனையை மேலும் மேலும் தொடரும் படி ஊக்கம் அளித்தார். "வழக்கமான கல்வி முறைகள் போலி யானவை; உள்ளீடு அற்றவை. இவ்வகையான பரிசோதனைகள் மிகவும் மதிப்பு வாய்ந்தவை" என்றார். கல்வி அதிகாரி இதைக் கேட்டு என்ன நினைத்தார் என்று நான் யோசித்துக் கொண்டேன்.

நான் மிகவும் உற்சாகத்தோடு வீடு திரும்பினேன். ஆணையர் என்னைத் தனியே அழைத்துப் பாராட்டினார் என்பதும் ஒரு

காரணம். ஆனால் என் பரிசோதனை பாராட்டப்பட்டது என்பது தான் என் மகிழ்ச்சிக்கு முக்கியமான காரணம். நான் நினைத்துப் பார்த்தேன். "அரசு அதிகாரியாகிய ஆணையருக்கு எப்படி முற் போக்குப் பள்ளிகளைப் பற்றித் தெரிந்தது" என்று நினைத்தேன். பின்னர் அவர் தம் பையனை ஐரோப்பாவில் உள்ள இப்படிப்பட்ட ஒரு முற்போக்குப் பள்ளியில் சேர்த்திருந்தார் என்பதும், அதனால் தான் புதிய கல்வி முறையில் அவருக்கு மிகவும் ஈடுபாடு உண்டு என்றும் தெரிந்து கொண்டேன்.

அன்றிரவு இரண்டு மூன்று ஆசிரியர்கள் என்னைப் பார்க்க வந்தார்கள். ஆணையர் என்ன சொன்னார் என்று அவர்கள் தெரிந்து கொள்ள விரும்பினார்கள். அடுத்து கல்வி அதிகாரி தம்மை வந்து பார்க்கும்படி எனக்கு அனுப்பிய கடிதம் வந்தது. ஆகவே அவர் இருப்பிடம் சென்றேன்.

கல்வி அதிகாரி மிகவும் உற்சாகத்துடன் இருந்தார். அன்று பள்ளியில் நடந்தவற்றைக் குறித்து ஆணையர் மிகவும் மகிழ்ச்சி அடைந்திருந்தார். எனக்கு ஒரு நாற்காலியைக் கொடுத்துவிட்டு அவர் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

"முதலில் எனக்கு இதைச் சொல். நீ படைத்துக் காட்டிய நாடகங்களில் எந்தப் பையனும் எதையும் மனப்பாடமே செய்ய வில்லையா?" என்று கேட்டார்.

"அவர்கள் அப்படிச் செய்ததாக உங்களுக்குத் தோன்றியதா?"

"இல்லை; ஆனால் எப்படி அவர்கள் அவ்வளவையும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டார்கள். தங்கள் வசனங்களைத தங்கு தடையின்றிப் பேசினார்களே."

"அதுதான் முக்கியம். அவர்களுக்குக் கதை சொல்லப்பட்டது. கதைகளை அவர்கள் விரும்பினார்கள். அவர்கள் கதாபாத்திரங் களோடு தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டு, பாத்திரங்களின் உணர்ச்சிகளைத் தாங்களும் அனுபவித்தார்கள். ஆகவே தங்கள் சொந்த உணர்வுகளைக் குறித்தே பேசினார்கள்" என்றேன் நான்.

"அவர்களுக்கு நடிப்புக் கற்றுக் கொடுத்தது யார்?"

"யாரும் அவர்களுக்கு முறைப்படி கற்றுக் கொடுக்கவில்லை. நாங்கள் வாரம்தோறும் நாடகங்களை நடிக்கிறோம். நானும் அவர்களோடு பங்கு கொள்கிறேன். என்னால் முடிந்தவரை என் பாத்திரத்தை நான் நன்றாக நடிக்கிறேன். ஆகவே பையன்களும் என்னைப் பின்பற்றுகிறார்கள்."

"அது எப்படி முடியும்? எனக்குப் புரியவில்லை..."

"அவர்கள் கண்களை அகலத் திறந்திருக்கிறார்கள். நன்றாகக் கவனிக்கிறார்கள். பல தொழில்களிலும் ஈடுபட்டிருப்போரை— தச்சர்கள், குயவர்கள், தையற்காரர்கள் முதலியவர்களை அவர்கள்

கூர்ந்து நோக்குகிறார்கள். அவர்கள் எப்படிப் பேசுகிறார்கள், அவர் களது தனித்தன்மைகள் என்ன என்று அவர்கள் கவனிக்கிறார்கள். அவர்களுக்குக் கூறப்படும் கதைகளில் இப்பாத்திரங்கள் விவரிக்கப் படும்போது நன்றாகக் கேட்கிறார்கள். மேலும், கடவுள் அவர் களுக்குக் கற்பனை ஆற்றலைக் கொடுத்துள்ளார். தங்களது அனுபவத்தையும் கற்பனை ஆற்றலையும் இணைத்துத் தத்தம் பாத்திரங்களை இயல்பாகவும், தன்னிச்சையாகவும் நடிக்கிறார்கள். அவர்களே தம்மைச் சுயவிமர்சனம் செய்து கொள்கிறார்கள். மேடையில் தங்கள் கற்பனையும் அனுபவமும் சரிவர வெளியிடப் படுகின்றனவா என்று அவர்கள் உற்று நோக்குகிறார்கள்" என்றேன் நான்.

"இது இயற்கைக்கு அப்பாற்பட்டதாகவும், புரிந்துகொள்ளக் கஷ்டமாகவும் தோன்றுகிறது" என்றார் கல்வி அதிகாரி.

"ஆனால் பையன்களுக்கு இது கஷ்டமாக இல்லை. அவர்கள் எப்படி நடிக்கிறார்கள் என்பதை நான் பகுத்து ஆராய்ந்ததில் எனக்குப் புலப்பட்டது இதுதான்."

"நல்லது. எப்படி இருந்தாலும் உங்கள் படைப்பு மிக நன்றாக இருந்தது. ஆணையர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்."

"அவர் மகிழ்ச்சி அடையாவிட்டாலும் நாடகம் இப்படியே நடந்திருக்கும்" என்றேன் நான்.

"ஆமாம். நீங்கள் இது குறித்து எனக்கு முன்னமே ஒன்றும் சொல்லவில்லையே. தலைமை ஆரிரியருக்கும் மற்ற ஆசிரியர் களுக்கும்கூட இது குறித்துத் தெரியாது போலும்."

"உண்மைதான். நான் யாருக்கும் சொல்லவில்லை. அவர்கள் இதெல்லாம் காலவிரயம் என்று கருதுகிறார்கள். எல்லாரும் பருவ இறுதித் தேர்வுகளுக்குத் தயார் செய்து கொண்டிருக்கிறார்கள்."

"அவர்களுக்குத் தெரியாமல் எப்படி இது நடக்க முடியும்?"

"முடியும். வாரந்தோறும் நாங்கள் சுற்றுலாச் செல்கிறோம். இந்த நடவடிக்கைகளையும் பயிற்சிகளையும் நாங்கள் அங்கேதான் செய்கிறோம். வெறும் பொழுது போக்குக்காகத்தான். நான் ஒரு படுக்கை விரிப்பை என்னுடன் எடுத்துச் செல்கிறேன். அதுதான் எங்களுக்குத் திரை. இரண்டு பையன்கள் இரண்டு முனைகளில் அதைப் பிடித்துக் கொள்வார்கள். நடிகர்கள் திரைக்கு ஒரு புறமும், பார்வையாளர்கள் மறுபுறமும் இருப்பார்கள்."

"அப்படியா? உண்மையாகவா?"

"ஆம். அப்படித்தான்."

"நல்லது. அப்படியானால் நம் பள்ளியில் எல்லா வகுப்பு களிலும் நாடக நடிப்பை ஒரு பாடமாக நாம் சேர்த்து விடலாம். இந்தப் போதனை முறையை ஆணையர் மிகவும் பாராட்டுகிறார்.

நாடங்கள் மிகவும் சுவையாக இருந்தன. கவிதை ஒப்புவிப்பதைக் கைவிட்டுவிட்டால் என்ன?" என்றார் கல்வி அதிகாரி.

"நான் ஏற்கெனவே கைவிட்டுவிட்டேன். மற்ற வகுப்புகளிலும் அவ்வாறு செய்துவிட்டால் எனக்கு மகிழ்ச்சிதான்."

"நிச்சயமாக அப்படியே செய்வோம். மனப்பாடம் செய்ய வைப்பது மோசமான போதனை முறை என்று ஆணையர் கருது கிறார். நான் சிறுவயதில் மனப்பாடம் செய்ததை இப்பொழுது நினைத்துப் பார்க்கிறேன். நான் சராசரிக்கு மேற்பட்ட மாணவன். எனக்கு அது கஷ்டமாகத் தோன்றவில்லை. ஆனால் மற்றவர்கள் பட்ட வேதனையைச் சொல்லி முடியாது. மனப்பாடம்! ஒழிக மனப்பாடம்!"

எனக்குச் சற்று வேடிக்கையாக இருந்தது. ஆணையர் அன்று வருகை புரிந்தது நல்லதாகப் போயிற்று. எனது பரிசோதனையில் இது ஒரு நல்ல அனுபவமாக இருந்தது.

## 2

பருவ இறுதித் தேர்வு நெருங்கிக் கொண்டிருந்தது. மற்ற வகுப்புகள் மீள்பார்வையை மேற்கொண்டிருந்தன. வரலாறு, புவியியல், கணக்கு, மொழிப்பாடம் ஆகியவை மீண்டும் மீண்டும் மனப் பாடம் செய்யப்பட்டு வந்தன. அப்பருவத்துக்குரிய பாடங்கள் ஏற்கெனவே ஒருமுறை முடிக்கப்பட்டு விட்டன. நானோ பின் தங்கிவிட்டேன். தேர்வுகளைப் பொறுத்த வரையில் நான் மிகவும் பின்தங்கிப்போனேன். என்னுடைய வகுப்பும் தேர்வு எழுத வேண்டும். நான் மீள்பார்வை செய்யக் காலம் ஒதுக்கவில்லை. அந்த நேரத்தை நான் பயன்படுத்தினேன். கடைசிநாள் வரை நான் பாடம் நடத்துவேன். பாடம் நடத்தும் முறையிலேயே மீள்பார்வை அமையுமாறு நான் திட்டமிட்டிருந்தேன். இவ்வாறு நாங்கள் 'அந்தாதி' விளையாட்டு விளையாடும் பொழுதே கவிதைகளை மீண்டும் மீண்டும் நினைவுபடுத்திக் கொண்டோம்.

ஆனால் இதுவரை நான் புவியியல், அறிவியல், இலக்கணம் ஆகியவற்றைச் சற்றும் தொடவே இல்லை. நான் இலக்கணத்தை எடுத்துக்கொள்ளத் தீர்மானித்தேன். அது ஒரு கடினமான பாடமாகக் கருதப்பட்டது. மேலும் மாணவர்களுக்கு அதில் ஆர்வம் இருப்பதும் இல்லை. நான்காம் வகுப்பு மாணவர்களுக்கு அதில் ஏன் ஆர்வம் இருக்க வேண்டும்? அதில் ஏதேனும் சுவையுள்ளது உண்டா? இந்த வயதில் அப்பாடத்தில் அவர்களுக்கு ஆர்வம் இல்லாதபொழுது அவர்களுக்குப் பயன்படும்படியான எந்தவித

அறிவையும் இலக்கணம் கொடுக்க முடியவில்லையே! எப்படித் தான் ஒரு மாணவன் அதில் ஆர்வம் கொள்ளவும் பயன்படவும் முடியும்? மொழிகளைக் கற்றுக் கொள்வதில் ஆர்வம் உடைய மேல்வகுப்பு மாணவர்களுக்கு மட்டுமே இலக்கணம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பது என்னுடைய கருத்து. மாணவர் களுக்கு சலிப்பைத் தருவதும், கற்றுக் கொடுப்பதில் சிரமம் உள்ளதுமான ஒரு பாடத்தை ஏன் கற்றுக் கொடுக்க வேண்டும்? அதற்குப் பதிலாக வேறு பாடங்களைக் கற்றுக் கொள்ளக்கூடும்.

ஆனாலும் நான் ஒரு பரிசோதனையை செய்துபார்க்கத் தீர்மானித்தேன். எனக்கு விதிக்கப்பட்ட நிபந்தனைகளை நான் நிறைவேற்ற வேண்டுமே. இலக்கணத் தேர்வுக்கு மாணவர்களை நான் தயாரித்தாக வேண்டும். நான் எனக்கென்று சில தத்துவங் களை வைத்துக் கொண்டிருந்தபோதிலும் பழைய நடைமுறையை முற்றிலும் புறக்கணித்துவிட முடியாது. இப்பொழுது நிலவும் சூழ்நிலையில் இலக்கணப் பாடத்தை நான்காம் வகுப்புக்கு எப்படிக் கற்பிக்க வேண்டும் என நான் செய்துகாட்ட வேண்டும்.

நான் இலக்கணப் பாடத்திட்டத்தைப் படித்துப் பார்த்தேன். அதில் கூறியுள்ள வரிசைப்படி பாடம் நடத்த இயலவில்லை. பெயர்ச்சொல், வினைச்சொல் ஆகியவற்றைக் குறித்த விளக்கங் களை மனப்பாடம் செய்துவிட முடியும். ஆனால் கற்போருக்கு அதனால் ஒருவிதத் தெளிவும் ஏற்படாது. எனக்கு எந்த வயதில் பள்ளியில் இலக்கணம் கற்பிக்கப்பட்டது என்பது நினைவில் இல்லை. வார்த்தைகள் மட்டும் நினைவில் இருக்கின்றன. ஞாபக சக்தியையும், புரிந்து கொள்வதையும் ஆசிரியர்களில் பலர் குழப்பிக் கொள்கின்றனர். இலக்கணத்தைக் கற்பிக்கும் தற்கால முறைக்கு நான் விடைகொடுத்து விட்டேன். அப்படியானால் இலக்கணம் கற்பிக்க நான் எந்தப் புதிய முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். இவற்றைக் குறித்து நான் நன்றாகச் சிந்தித்து ஒரு திட்டத்தை வகுத்தேன். மாணவர்களுக்குச் சுவைதரும் ஒரு விளையாட்டை நான் உருவாக்கினேன். இரண்டு மாதங்களுக்குள் மாணவர்கள் பெயர்ச்சொல், வினைச்சொல், பெயரடைகள், வினை அடைகள், பிரதிப் பெயர்கள் ஆகியவற்றைக் கொடுத்த வாக்கியத்தில் அடையாளம் கண்டுகொள்ளவும் தனியே பிரித்தெடுக்கவும் தெரிந்து கொண்டார்கள். ஒருமை பன்மை வேற்றுமை தெரியவும், ஆண்பால், பெண்பால் வேற்றுமை தெரியவும் அவர்கள் பழகிக் கொண்டார்கள். வாக்கியத்தில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் ஆகியவற்றைப் பிரித்துப் பார்க்கக் கற்றுக் கொடுக்க நினைத்திருந்த பொழுது கல்வி அதிகாரி ஒருநாள் என் வகுப்புக்கு வந்தார். நான் செய்வதைப் பார்த்து அவர் திகைப்படைந்தார்.

"ஓஹோ! பையன்களைச் சீட்டு விளையாட வைக்கிறீரா? பருவத் தேர்வு வந்துவிட்டது. காலத்தை வீணாக்காதே. போதனையைக் கவனி. அவசரமாகச் செயல்படு. நம்மால் காலத்தை இழக்க முடியாது. பரிசோதனை வெற்றி பெற வேண்டும் அல்லவா?" என்றார்.

நான் சிறிது புன்னகை புரிந்துவிட்டு, "ஐயா! எனக்கு அது நன்றாகத் தெரியும். வகுப்பில் நடைபெறுவது இலக்கணம் கற்றுக் கொடுப்பதற்கான ஒரு விளையாட்டு. நீங்கள் பையன்களைப் பரீட்சித்துப் பார்க்கிறீர்களா?" என்றேன்.

கல்வி அதிகாரி சோதனை செய்தார். பையன்களும் நன்றாகப் பதில் அளித்தார்கள். அவருக்குத் திருப்தி. "அடடே! நல்ல வேலை செய்யப்பட்டிருக்கிறதே? நீ பயன்படுத்திய முறையை நான் அறிய விரும்புகிறேன். இலக்கணத்தை இப்படி சுவையுள்ள முறையில் கற்றுத்தரக் கூடுமானால் மற்ற வகுப்புகளிலும் இதைப் பின் பற்றலாம்" என்றார்.

மறுநாள் விடுமுறை நாள். நான் பயன்படுத்திய போதனை முறையை விபரமாக அறிவதற்காகக் கல்வி அதிகாரி என்னைத் தன் வீட்டுக்கு வரச் சொன்னார்.

ஆகவே என் போதனை முறைச் சாதனங்களோடு நான் அவர் வீட்டுக்குச் சென்றேன். "ஐயா, இந்த அட்டைத் துண்டுகள் என் முதல் சாதனங்கள். ஒரு பக்கத்தில் ஆண்பால் பெயர்ச் சொற் களையும் மறுபக்கத்தில் பெண்பால் பெயர்ச்சொற்களையும் எழுதியுள்ளேன். பெரும்பாலான வழக்கமாக வரும் சொற்களும் சிறுபான்மை சிறப்பாக வரும் சொற்களும் அட்டைத் துண்டுகளில் எழுதப்பட்டுள்ளன. முதல் பணியாக நான் மாணவர்களுக்கு இவற்றைக் கொடுத்துப் படிக்கச் சொல்வேன். பையன்கள் இவற்றைப் பல முறை படிக்கிறார்கள். இவ்வாறு இருபால்களுக்கும் உரிய பெயர்ச்சொற்களை அவர்கள் அறிகிறார்கள். ஒவ்வொன் றுக்கும் 'ஆண்பால்', 'பெண்பால்' எனவும் நான் தலைப்புக் கொடுத்திருக்கிறேன். இதன்மூலம் பெயர்ச்சொற்களுக்குப் பால் வேறுபாடு உண்டு என்பதை மாணவர்கள் அறிகிறார்கள். இது பால்பற்றிய அறிமுகம்.

"ஒருநாள் நான் அவர்களைப் பொருத்தமான பால் பெயர்களைக் கூறச் சொன்னேன். 'எருது' என்றவுடன் அவர்கள் 'பசு' என்றனர். 'சிறுவன்' என்றவுடன் 'சிறுமி' என்றும், 'ஆண்' என்றதும் 'பெண்' என்றும், 'சேவல்' என்றதும் 'கோழி' என்றும் கூறினார்கள். இவ்வாறு வினாவிடைகள் நிகழ்ந்தன. என்னுடைய திட்டம் வெற்றி பெற்றது. ஆரம்ப அறிமுகம் அவர்களுக்கு அடிப் படையாக அமைந்தது."

"அடுத்து நாள் ஒரு விளையாட்டைத் தொடங்கினேன். நான் கரும்பலகையில் ஓர் ஆண்பால் பெயரை எழுதுவேன். ஒரு மாணவன் அதன் பெண்பாலைக் கீழே எழுத வேண்டும். அவர்கள் என் முறையை நன்றாகப் பின்பற்றினார்கள். அவர்களது பட்டியல் களைச் சரிபார்த்தேன். சில தவறுகளே காணப்பட்டன. ஒருசில மாணவர்களே தவறு செய்தார்கள்.

"அடுத்து நான் மற்றொரு விளையாட்டை ஆரம்பித்தேன். அவர்களிடம் இரண்டு பெட்டிகளைத் தந்தேன். ஒரு பெட்டியில் ஆண்பால் பெயர்களும், மற்றொன்றில் பெண்பால் பெயர்களும் எழுதப்பட்டன. ஒவ்வொரு பையனும் ஒரு பெட்டியிலிருந்து ஒரு ஆண்பால் பெயர்ச்சொல்லை எடுத்தபின் அதற்குப் பொருத்தமான பெண்பால் பெயர்ச்சொல்லை மற்ற பெட்டியிலிருந்து எடுக்க வேண்டும். மாணவர்கள் அலுப்போ சலிப்போ இல்லாமல் இந்த விளையாட்டை மணிக்கணக்காக விளையாடினார்கள்."

"ஆனால் எல்லாப் பையன்களும் எப்படி ஒரு ஜோடிப் பெட்டிகளைக் கொண்டே விளையாட முடியும்?" என்று கல்வி அதிகாரி ஒரு வினாவை எழுப்பினார்.

அதற்கும் ஒரு வழியைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. வகுப்பின் ஒரு பாதியில் பத்து வட்டங்களையும் மற்றொரு பாதியில் பத்து வட்டங்களையும் வரைந்தேன். ஒரு பக்கத்திலிருந்த வட்டங் களில் ஆண்பால் பெயர்களையும், மற்றொரு பக்கத்தில் இருந்த வட்டங்களில் பெண்பால் பெயர்களும் வைக்கப்பட்டன. ஒவ்வொரு பையனுக்கும் ஒரு வட்டம். ஒரு பக்கத்தில் உள்ள ஒரு பையன் தன் அட்டையை எடுத்து அதற்குப் பொருத்தமான அட்டையை மறுபக்கத்தில் கண்டுபிடித்து அங்கே அவற்றை வைத்துவிடுவான். எல்லா அட்டைகளும் இவ்வாறு இணை சேர்ந்ததும் ஒரு சுற்று விளையாட்டு முடிந்துவிடும். மறுபடியும் புதிய சுற்று ஆட்டம் தொடங்கும். இரண்டு பையன்கள் மட்டும் விளையாடுவதானால், ஒவ்வொருவனும் ஒரு பெட்டியை வைத்துக் கொண்டு இணைகளைச் சேர்ப்பார்கள்."

"மிகவும் சுவையாக இருக்கிறது. ஆனால் அஃறிணைப் பெயரை எவ்வாறு இப்படிக் கண்டுபிடிக்க முடியும்?" என்றார் கல்வி அதிகாரி.

"ஆண்பால் பெண்பாலை நன்றாகப் பிரித்தறியத் தெரிந்தபின் நான் மேசை, நாற்காலி, துடைப்பான் என்று கரும்பலகையில் எழுதினேன். இவற்றுக்கு அஃறிணைப் பெயர்கள் என்று தலைப்புக் கொடுத்தேன்.

"ஆணும் பெண்ணும் அல்லாததும், மக்கள்போல உயர்திணை அல்லாததும் இப்பகுப்புகளுள் அடங்கும் என்பதையும் நான்

விளக்கிக் கூறினேன்."

"அவர்கள் புரிந்து கொண்டதாகத் தோன்றியது. அவர்களின் சிலேட்டுகளில் மூன்று பிரிவுகளாகக் கோடுகள் வரையைச் செய்து ஒவ்வொன்றிலும் ஆண்பால், பெண்பால், அஃறிணைப் பெயர் களை எழுத வைத்தேன். நான் அறுபது சொற்களைக் கொடுத்து இவ்வாறு பிரித்து பொருத்தமான பகுதிகளில் எழுதச் செய்தேன். ஆச்சரியப்படத் தக்கவையில் ஏறக்குறைய அனைவரும் சரியாகவே விடை எழுதினார்கள். இதன்மூலம் நான் இலக்கண விள்க்கங் களும் விதிகளும் வரையறைகளும் தருவதை விட நேரடியாகச் சொற்களையே தருவது நல்ல முறை என்று முடிவு செய்தேன். பின்னர், தக்க தருணத்தில் விதிகளையும், விளக்கங்களையும் எடுத்துக் கூறமுடியும்."

"இதைவிட ஒவ்வொரு பெயர்ச்சொல்லுக்கு முன்னும் அவன், அவள், அது என்னும் இடப்பெயர்களைச் சொல்லச் செய்து பால் வேற்றுமையைக் கண்டுபிடித்திருக்கலாமே" என்று கல்வி அதிகாரி கேட்டார்.

"அது சரிவரப் புரிந்துகொள்ளாமல் மனப்பாடம் செய்யும் முறையாகத்தான் அமையும். ஆனால் இப்பொழுதோ அவர்கள் அடிப்படையான கருத்தைப் புரிந்து கொள்ளுகிறார்கள். இந்த முறையை வேண்டுமானால் மேலும் சிறிது விளக்கம் பெறுவதற்காக மேற்கொள்ளலாம்" என்று கூறினேன்.

"நல்லது. அடுத்து என்ன செய்தாய்?" என்று கேட்ட கல்வி அதிகாரி உண்மையிலேயே மிகவும் ஆர்வம் கொண்டவராகத் தோன்றினார்.

"இதே முறையில் நான் ஒருமை பன்மையைக் கற்பிக்க ஆரம்பித்தேன்."

"அதற்கும் ஒரு விளையாட்டைக் கண்டுபிடித்தாயா?"

"ஆம். ஒருமையிலுள்ள ஒரு பெயர்ச்சொல்லை வைத்திருக்கும் ஒரு பையன் அதற்குரிய பன்மைப் பெயரைக் கண்டுபிடித்து இணை சேர்க்க வேண்டும்."

"அது சரி. பெயர்ச்சொல், வினைச்சொல் என்ற பாகுபாட்டை நீ எப்படிக் கற்பித்தாய்?

"நான் முதலில் வினைச்சொற்களை எடுத்துக் கொண்டேன். பையன்களுக்குப் படிக்கத் தெரியும். நான் கரும்பலகையில் என்ன எழுதுகிறேனோ அதைச் செய்ய வேண்டும் என்றேன். அவர்கள் செய்ய வேண்டியதைக் கரும்பலகைகளில் எழுதினேன். அதற் கேற்ப அவர்கள் செய்ய வேண்டும். நான் யாரைக் குறிப்பிடுகின் றேனோ அந்தப் பையன் அதைச் செய்துகாட்ட வேண்டும். நான் கரும்பலகையில் 'நில்' என்று எழுதினேன். தொடர்ந்து 'உட்கார்',

'ஓடு', 'நட', 'ஆடு', 'படி', 'பேசு', 'விளையாடு', 'விழு', 'குதி', முதலியவற்றை எழுதினேன்.

"பையன்கள் இந்த எளிய செயல்களைச் செய்வதில் மிகவும் ஈடுபாடு காட்டினார்கள். அது போன்ற மேலும் பல சொற்களை எழுதச் சொன்னார்கள். நான் அப்படிப்பட்ட வார்த்தைகளை எழுதிக் கொண்டே போனேன். அவர்களும் இதில் குறிப்பிட்ட செயல்களைச் செய்துகொண்டே போனார்கள்.

"மறுநாள் துண்டு அட்டைகளில் 'உட்கார், நில், ஓடு' முதலிய சொற்களை எழுதிக் காண்பித்துவிட்டு 'இவை வினைச்சொற்கள்' என்று அவற்றிற்குப் பெயர் சூட்டினேன். பையன்கள் இதைப் படித்தார்கள். அடுத்தநாள் ஒரு அட்டைப்பெட்டி நிறைய வினைச்சொற்கள் எழுதிய துண்டுக் காகிதங்களைக் கொண்டு வந்து 'வினைச்சொல் பெட்டி' என்று அதற்குப் பெயரிட்டேன். பையன்கள் பெட்டியைத் திறந்து நான் சில சொற்களை எழுதி யிருந்த துண்டுகளை எடுத்தனர். அட்டைத் துண்டில் எழுதி யிருந்ததை அவர்கள் செய்து காட்ட வேண்டும். அட்டைகளில் எழுதியிருந்த சொற்களுக்கு ஏற்றாற்போல, பையன்கள், ஆடினார்கள், குதித்தார்கள் ஓடினார்கள், விழுந்தார்கள்.

"அதன் பிறகு நான் தங்கள் நினைவுக்கு வரும் வேறு சில வினைச் சொற்களை எழுதச் சொன்னேன். அவர்களும் புதிய வினைச் சொற்களை எழுதினார்கள்.

"பிறகு நான் ஒரு புதிய விளையாட்டை ஆரம்பித்தேன். ஒரு பையன் ஒரு செயல் செய்யும்படி நான் கூறுவேன். அவன் என்ன செய்கிறான் என்பதைச் சொல்வதோடு அதைக் கரும்பலகையிலும் எழுத வேண்டும். நான் ஜகஜீவனை ஓடச் சொன்னேன். அவன் ஓடினான். பையன்களைப் பார்த்து 'ஜகஜீவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்' என்று கேட்டேன். 'அவன் ஓடிக் கொண் டிருக்கிறான்' என்று அவர்கள் சொன்னார்கள்.

"மற்றொரு பையனைப் பார்த்து 'அவன் என்ன செயல் செய்கிறான்?' என்று கேட்டேன். 'ஓட்டம்'.

"அதையடுத்து ஒவ்வொன்றாக அவர்களை, 'குதி, எழுது, வாசி முதலியவற்றைச் செய்யச் சொன்னேன். அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைக் கரும்பலகையில் வேறு மாணவர்களைக் கொண்டு எழுதச் செய்தேன். பெரும்பான்மையான மாணவர்கள் சரியாகவே எழுதியிருந்ததைக் கண்டேன். இவ்விளையாட்டைச் சரிவரப் புரிந்து கொள்ளாத ஓரிரு மாணவர்கள் மட்டும் தவறு செய்திருந்தார்கள்.

"மேலும் தொடர்ந்து, ஒவ்வொரு மாணவனும் அவனவனே ஒரு செயலை நிகழ்த்திவிட்டு அதைக் கரும்பலகையில் எழுதச்



அட்டைகளில் எழுதப்பட்டிருந்த சொற்களுக்கு ஏற்றாற்போல பையன்கள் ஆடினார்கள், குதித்தார்கள், ஓடினார்கள், விழுந்தார்கள்.

செய்தேன். ஜகஜீவனை ஓடச் சொன்னேன். அவனே திரும்பி வந்து 'ஓடினேன்' என்று எழுதினான்.

"இவ்வாறு விளையாட்டைத் தொடர்ந்தோம். அவர்களாகவே விளையாடிவிட்டு வந்து எழுதும்படி அவர்களை ஊக்கப் படுத்தி னேன். அவர்களுக்கு ஒரே சந்தோஷம்.

"ஒருநாள் வகுப்பில், 'ராம்ஜி ஓடும்பொழுது 'ஓடுதல்' என்ற செயலைச் செய்கிறான். சரி. இப்பொழுது சியாம்ஜி எழுதும் பொழுது என்ன செயலைச் செய்கிறான்?' என்று கேட்டேன். 'எழுதுதல்' என்று அவர்கள் சொன்னார்கள்.

"இதுபோன்ற வேறு வினைகளைச் செய்யும்படி கூறி உரிய விடைகளைக் கூறச் செய்தேன். அதையடுத்துக் கரும்பலகையில் 'ஓடுகிறான்—ஓடினான், எழுதுகிறான்—எழுதினான், நடக்கிறான்—நடந்தான்' முதலியவற்றை எழுதினேன். இவை வினைச்சொற்கள். ஒவ்வொரு சொல்லும் ஒரு செயலைக் குறிக்கும் என்று விளக்கி னேன். பையன்கள் புரிந்து கொண்டார்கள்.

"அடுத்து?" என்று கல்வி அதிகாரி கேட்டார்.

"அவர்கள் எத்தனை வினைச் சொற்களைக் கூற முடியுமோ அத்தனை சொற்களையும் கூறச் சொன்னேன். அவற்றைச் சிலேட்டுகளில் எழுதச் சொன்னேன். சிலேட்டுகள் நிறைந்து விட்டன. அடுத்தபடியாக வேறொரு விளையாட்டை

ஆரம்பித்தேன். கரும்பலகையில் ஒரு வாக்கியத்தை எழுதினேன். 'ராம்ஜி ஓடுகிறான். சம்பக் படிக்கிறான்'. வாக்கியங்களிலுள்ள வினைச் சொற்களை மட்டும் விட்டுவிட்டு மற்ற சொற்களை அழிக்கச் சொன்னேன். இதைப் பையன்கள் பிழையின்றிச் செய்தார்கள். இந்த நிலையில் வினைச் சொற்களைப் பற்றிய பாடத்தை நிறுத்தினேன்."

"இந்த முறையில் பையன்கள் கட்டாயம் கற்றுக் கொள் வார்கள் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இதற்கு நீண்ட காலம் ஆகுமே" என்றார் கல்வி அதிகாரி.

"விளையாட்டுமூலம் கல்வி கற்பது மிகவும் சுவை உடையது. இதற்காகச் சிறிது நேரம் செலவிட்டாலும் பலன் குறிப்பிடத்தக்க தல்லவா. காலத்தைக் குறைக்க வேண்டும் என்று கருதி, பலனில் லாமல் போய்விடக் கூடாதே. இதனால் செலவுசெய்யப்பட்ட காலம் முழுதும் வீணாகப் போய்விடுமே" என்று பதில் கூறினேன்.

"சரி. பெயர்ச் சொற்களைப்பற்றி என்ன செய்தீர்கள்?" என்று கல்வி அதிகாரி கேட்டார்.

"வழக்கம்போல நான் சில பெயர்ச்சொற்களை அட்டைத் துண்டுகளில் எழுதி, அவற்றை வகுப்பறையில் தொங்கவிட்டேன். அவற்றில் உள்ள பெயர்ச்சொற்களைப் பையன்கள் திரும்பத் திரும்பப் பலமுறை படித்தார்கள். பல வகையான பெயர்ச் சொற் களை நான் சேகரித்திருந்தேன். அவற்றைச் சிற்சில பகுதிகளால் பிரித்திருந்தேன். இவற்றைப் படிப்பது மாணவர்களுக்கு ஒரு சுவையான பொழுதுபோக்காக இருந்தது. நான் வெளிப்படையாக ஏதும் கற்றுக் கொடுக்காமலேயே மாணவர்கள் அந்தச் சொற்களை மட்டும் படித்தார்கள். துண்டு அட்டைகளிலிருந்த பெயர்ச் சொற்களை மாணவர்கள் பிரித்து அறிய முடிந்தது. இருவகைச் சொற்களைப் பகுத்து அறிவதில் அவர்கள் மேலும் மேலும் விரைவாக ஆற்றல் பெற்றார்கள்.

"ஒருநாள் நான் 'என்னிடம் கொண்டு வாருங்கள்..' இன்ன பொருள் என்று சொல்லாமலே, 'தனக்கென ஒரு தனிப்பெயர் உள்ள ஒரு பொருளைக் கொண்டு வாருங்கள்' என்றேன். 'அப் பொருளைப் பார்த்து அதன் பெயர் என்ன என்று கேளுங்கள். அதற்கென ஒரு பெயர் இருந்தால் அதைக் கொண்டு வாருங்கள்' என்றேன்.

"பையன்கள் புரிந்து கொண்டார்கள். கரும்பலகையிடம் சென்று 'உன் பெயர் என்ன?' என்று கேட்டார்கள். அவர்களே 'கரும்பலகை' என்று பதிலும் சொல்லிக் கொண்டார்கள். உடனே கரும்பலகையைக் கொண்டு வந்தார்கள். இவ்வாறே அவர்கள், மேசை, நாற்காலி, துடைப்பான், ஒரு கோல், ஒரு புத்தகம், ஒரு

சிலேட்டு, ஒரு பேனா, ஒரு பெட்டி, மற்றும் பெயர் சொல்லக்கூடிய எந்தப் பொருளையும் கொண்டு வந்தார்கள். ஒருவன் பக்கத்து வகுப்பிலிருந்து ஒரு மாணவனை அழைத்து வந்தான்.

"இது என்ன? என்று நான் கேட்டேன். 'அவனுக்கு ஒரு பெயர் உண்டு" என்றான் அந்தப் பையன். 'நான் எப்படி சூரியனைக் கொண்டு வருவேன்?' என்று கேட்டான் ஒரு பையன். 'அந்த மரத்தை நான் கொண்டு வர முடியாதே' இது மற்றொரு பையனின் புகார்.

"பையன்கள் பெயர்ச்சொல் என்ன என்பதன் அடிப்படைக் கருத்தைப் புரிந்து கொண்டார்கள் என்பதை நான் உணர்ந்தேன். இதையடுத்து ஒரு அட்டைப் பெட்டியில் பலவகைப் பெயர்களை எழுதிய துண்டுச் சீட்டுக்களைப்போட்டு நான் கொண்டு வந்தேன். பையன்களுக்கு இப்பொழுது இத்தகைய விளையாட்டு புரிந்து விட்டது. அவர்கள் ஒரு கைநிறையத் துண்டுச் சீட்டுகளை எடுத்துக் கொண்டு அவற்றில் எழுதியுள்ள பெயர்ச்சொற்களைப் படித்தார்கள். நான் எல்லா வகையான பெயர்ச்சொற்களையும் எழுதியிருந்தேன். ஒரு பையன் ஒரு கேள்வியை எழுப்பினான். 'பச்சை எப்படி ஒரு பெயர்ச்சொல் ஆகும்?'

"நான் அவனுக்கு ஒரு இலையைக் காட்டிச் சொன்னேன். 'இந்த இலைக்கு ஒரு நிறம் இருக்கிறது. அந்த நிறத்துக்கு என்ன பெயர் கொடுப்பது?' அந்தப் பையன் புன்னகை புரிந்து விட்டுப் போய் விட்டான்.

"பெயர்ச்சொற்களையும் வினைச் சொற்களையும் ஒன்றாக இட்டுக் கலக்கிவிட்டு பெயர், வினைகளைத் தனித்தனியே பிரிக்கச் சொன்னேன். இந்த விளையாட்டு நன்றாக நடைபெற்றது. மாணவர்கள் பெயர்ச் சொற்களையும், வினைச் சொற்களையும் நன்றாக அறிந்து கொண்டதை வெளிக்காட்டும்படி நடந்து கொண்டார்கள்.

"அடுத்து நான் மற்றொரு விளையாட்டை ஆரம்பித்தேன். ஒரு கொடுக்கப்பட்ட வினைச் சொல்லோடு இணையத் தகுந்த பெயர்ச்சொல்லைக் கூறும்படியும், அப்படியே பெயர்ச் சொல்லோடு இணையும் வினைச் சொல்லைத் தரும்படியும் கேட்டுக் கொண்டேன். உதாரணமாக, குதிரை என்று கொடுக்கப்பட்ட பெயர்ச்சொல்லோடு 'ஓடுகிறது' அல்லது 'ஓடியது' என்ற வினையை இணைக்க வேண்டும். 'படிக்கிறான்' என்ற வினைச் சொல்லோடு 'பையன்' என்ற பெயர்ச்சொல் இணைய வேண்டும். சொற்களை எவ்வாறு வரிசைப்படி அமைக்க வேண்டும் என்பதை நான் விளக்கினேன். இந்த விளையாட்டும் நன்றாக நடைபெற்றது."

"இதைத் தொடர்ந்து நான் சில வாக்கியங்களைக் கரும்

பலகையில் எழுதி அவற்றிலிருந்து பெயர்ச்சொற்களையும் வினைச் சொற்களையும் தங்கள் சிலேட்டுகளில் எடுத்து எழுதும்படி கேட்டுக் கொண்டேன். சிறிது மாறாக வாக்கியங்களிலிருந்து பெயர்களையோ வினைகளையோ அழித்துவிடச் சொன்னேன். இவ்வாறு மாணவர்கள் பெயர்களையும் வினைகளையும் இணைக்கும் முறைகளை அறிந்தனர்.

"நீ செய்தது சரி. மாணவர்களுக்கு இது மிகவும் எளிதாகத் தோன்றியிருக்க வேண்டும். இந்த உபகரணங்களைச் செய்வதற்கு நீ பணம் செலவு செய்திருக்க வேண்டுமே? உன்னைப்போல ஒவ்வொருவரும் பாடத்தின் உட்பொருளைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்" என்றார் கல்வி அதிகாரி.

"பையன்களை குருட்டு மனப்பாடம் செய்வதிலிருந்து காப்பாற்ற வேண்டுமானால் பணம் செலவழிப்பது ஒரு பொருட்டு அல்ல. நான் சொந்தமாகக் கொஞ்சம் பணம் செலவு செய்தேன். பெட்டிகள் செய்ய என்னிடமிருந்த பழைய அட்டைகளை நான் பயன்படுத்திக் கொண்டேன்; பழைய துண்டுக் காகிதங்களைக் கொண்டு சீட்டுகள் தயாரித்தேன்."

"நீ செலவழித்த பணம் உனக்குக் கிடைக்க நான் ஏற்பாடு செய்கிறேன்" என்று கல்வி அதிகாரி கூறினார்.

"ஐயா, நீங்கள் என் போதனை முறையை ஒப்புக்கொண்டால் போதும். பணம் கிடைப்பது பற்றிக் கவலையில்லை" என்றேன்.

"அதை நாம் பார்த்துக் கொள்வோம். அடுத்தபடி நீ என்ன செய்தாய்?" என்று கேட்டார்.

"பெயர் அடைச் சொற்களை அடுத்து எடுத்துக் கொண்டேன். நான் உங்களுக்குச் சலிப்பூட்டுகிறேன். இலக்கணம் என்பது ஒரு சுவாரஸ்யமற்ற பாடம். அத்துடன் நான் ஒவ்வொன்றையும் விளக்கமாகச் சொல்ல நினைப்பதும் கூடுகிறது" என்றேன்.

"விளக்கமாகச் சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை. விளக்கம் தராவிட்டால் எனக்கு முழு விபரமும் எப்படித்தெரியும்? நீ மேலும் சொல்வதற்கு முன் நாம் சிறிது தேநீர் அருந்தலாம்" என்றார்.

அவர் ஒரு நல்ல ரசிகர். அவர் நல்ல தரமான தேயிலை வைத்திருந்தார். நல்ல தேநீரை நானும் விரும்பிச் சுவைப்பேன் என்பது அவருக்கும் தெரியும். தேநீர் அருந்துவதில் சுமார் இருபது நிமிடங்கள் கழிந்தது. இருவரும் சற்றுக் களைப்பு நீங்கி உற்சாகம் அடைந்தோம். எங்கள் உரையாடல் தொடர்ந்தது.

"வழக்கம்போல் பெயர்அடைகள் எழுதிய அட்டைத் துண்டு களைப் பையன்களிடம் நான் கொடுத்தேன். நான் பல அடைச் சொற்களை எழுதியிருந்தேன். பையன்களும் அவற்றில் ஆர்வம் காட்டினார்கள். அவற்றைப் பையன்கள் படித்தார்கள்.

'ஐயா, பெயர் அடை என்ற சொல்லுக்கு என்ன அர்த்தம்?' என்று கேட்டான். 'நீயே கண்டுபிடி. இவையெல்லாம் பெயர் அடைகள்தான்' என்றேன்.

"படிப்படியே அவர்கள் புரிந்துகொண்டார்கள். விளை யாட்டுகள் தொடர்ந்தன. அடுத்து பெயர்ச்சொற்கள், வினைச் சொற்கள், பெயர் அடைகள் அடங்கிய துண்டுகளை அவர்கள் பிரித்தார்கள்.

"அடுத்து நான் ஒரு புதிய விளையாட்டை ஆரம்பித்தேன். 'நான் கேட்கும் பொருளை என்னிடம் கொண்டு வாருங்கள். ஒரு பென்சிலைக் கொண்டு வாருங்கள்' என்றேன். ஒரு பையன் பென்சிலைக் கொண்டுவந்தான்.

"ஒரு சிவப்புப் பென்சில் கொண்டுவா'—சிவப்புப் பென்சில் வந்தது. 'நீலப் பென்சில் கொண்டுவா'—அதுவும் வந்தது.

"பென்சிலை எடுத்துக்கொண்டு போ—என்றேன். 'எந்தப் பென்சிலை?' என்று பையன் கேட்டான். 'சிவப்புப் பென்சில்! என்றேன் நான்."

"படிப்படியாக நான் நீலம், மஞ்சள், நீளம், குட்டை முதலிய அடைமொழிகளைப் பயன்படுத்தினேன். 'ஒரு பென்சிலை எடு' என்றேன். ஒரு பையன் ஒரு பென்சிலை எடுத்தான்.

"இப்பொழுது ஒரு பச்சைப் பென்சிலை எடு! ஒரு பையன் பச்சைப் பென்சிலை எடுத்தான்."

"மஞ்சள் பென்சிலை எடு!"

"நீளமான பென்சிலை எடு!"

"இப்படியே நடைபெற்றது. அதையடுத்து, 'நீ எந்தப் பென்சிலை எடுத்தாய்?' என்று கேட்டேன். 'மஞ்சள் பென்சிலை எடுத்தேன்.'

"நீ எதை எடுத்தாய்? 'நீளமான பென்சிலை!"

"கரும்பலகையில் நான் எழுதினேன்: இந்தச் சொற்கள்—பெயர் அடைச்சொற்கள். சில பொருள்களை விசேஷிக்கின்றன."

"அதன்பிறகு பெயர்ச் சொற்களும், பெயர் அடைகளும் அடங்கிய தனித்தனி அட்டைப் பெட்டிகளைக் கொடுத்து அவற்றிலிருந்து பொருத்தமானவற்றைப் பொறுக்கி இணைசேர்க்கச் சொன்னேன். ஒரு பையன் 'சிவப்பு' என்ற அடைமொழியைத் தேர்ந்தெடுத்து அதனுடன் 'குதிரை' என்ற பெயர்ச்சொல்லை இணைத்தான். மற்ற பையன்களும் இவ்வாறே இணைகளைச் சேர்த்தார்கள். நான் அவர்கள் செய்வதைக் கவனித்துக் கொண்டு மட்டும் இருந்தேன். ஏதோ ஒரு சமயம் இந்த இணைகள் தவறாகச் சேர்க்கப்பட்டன."

"எனக்கே உரிய முறையில் நான் அவர்களைச் சோதனை செய்தேன். பெயர் அடை என்ற தத்துவம் அவர்களுக்கு விளங்கி

விட்டது. ஆகவே சரியான பெயர்களையும் அடைமொழிகளையும் அவர்கள் சேர்த்தார்கள்.

“நல்ல சுவைமிகுந்த விளையாட்டை நீ தயாரித்து இருந்தாய். பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள், பெயரடைகள் ஆகியவை நன்றாக அறிமுகம் செய்யப்பட்டுவிட்டன. ஆனால் அவற்றுக்குரிய வரையறையை, விளக்கத்தை எப்படித் தருவது?” என்று கேட்டார் கல்வி அதிகாரி.

“வரையறைகள் பயிற்சியிலேயே உள்ளடங்கி இருக்கின்றன. இருந்தபோதிலும் பாடப்புத்தகங்களில் கொடுக்கப்பட்ட வரை யறைகளை நான் கொடுக்கவில்லை. தாங்களும் தேர்வில் இத்தகைய வரையறைகளைப் பற்றிக் கேள்வி கேட்கக் கூடாது என்று நான் வேண்டிக் கொள்கிறேன். மாறாக ஒரு இலக்கண ரீதியான வாக்கியத்தை அமைக்கும்படி கேட்கலாம்.”

“உங்கள் பையன்களுக்கு இலக்கணத்தில் தேர்வே வேண்டாம். இந்த முறையைப் பள்ளி முழுவதிலும் நான் புகுத்த விரும்புகிறேன். இலக்கண விதிகளை மனப்பாடம் செய்வதில் மாணவர்கள் நெடுங்காலம் கஷ்டப்படுகிறார்கள்.”

“ஐயா, நான் பள்ளியில் இலக்கணம் கற்கும்பொழுது வாங்கிய அடியினால் என் முதுகு இன்னமும் வலிக்கிறது. எதிர்பார்த்த விடையைத் தராவிட்டால் எங்கள் ஆசிரியர் எங்களை அடிப்பது வழக்கம்.”

“ஏன். இன்னும்தான் குழந்தைகளை அடிப்பது நிற்கவில்லை” என்றார் கல்வி அதிகாரி.

“நீங்கள் ஏன் அதை நிறுத்தக்கூடாது?”

“அது முற்றிலும் என் கையில் இல்லை. ஓரளவு முடியும். அதை விட்டுவிடுவோம். நாம் நன்றாகக் கற்பித்தோமானால் அடியும் உதையும் தானாகவே நின்று போகும். உன்னுடைய உதாரணத்தையே எடுத்துக் கொள்வோம். இலக்கணம் கற்பிக்கும் பொழுது நீ யாரையும் அடிக்கவேண்டியிருக்கவில்லையே. இப்பொழுது மூவிடப்பெயர்களைக் கற்பிப்பதில் உன்னுடைய முறையை அறிய விரும்புகிறேன்” என்றார்.

“அதில் ஒன்றும் புதுமை இல்லை. அதுவும் ஒரு எளிய விளையாட்டுத்தான். பையன்களைப் பார்த்து ‘நான் யார்?’ என்று கேட்டேன்.”

“திரு. லட்சுமிராம்” என்றார்கள்.

“அப்படியானால், நீ யார்?”

“ராம்ஜி”

“அவன் யார்?”

“தான்ஜி”

பின்பு நான் கரும்பலகையில் எழுதினேன்.

நான்—லட்சுமிராம்

நீ—ராம்ஜி

அவன்—தான்ஜி

நாம்—லட்சுமிராம், ராம்ஜி, தான்ஜி, பீம்ஜி.

நீங்கள்—ரவி, லவ்ஜி, திரிகம், தேவ்ஜி

அவர்கள்—மூன்றாம் வகுப்பு மாணவர்கள், மோன்ஜி, மூல்சந்த், லகாம்ஷி, ரூப்சிங்.

"பையன்கள் கரும்பலகையில் எழுதப்பட்டவற்றைப் படித்தார்கள். அடுத்து, 'நான், நீ, அவன், அவர்கள்' என்னும் சொற்கள் இடப்பெயர்கள் என்று கூறினேன்."

"ஒருபையன் 'இடப்பெயர் என்றால் என்ன?' என்று கேட்டான்."

"நீயே சிந்தித்துப்பார்! என்றேன் நான்."

"மற்றொரு பையன் ஐயா 'என்னுடையது' என்றால் லவ்ஜியுடையது. உம்முடையது என்றால் லட்சுமிராம் உடையது. இல்லையா? என்றான்.

"மூன்றாமவன், 'அப்படியானால் என்னுடையது, உன்னுடையது, அவனுடையது என்பவையெல்லாம் இடப்பெயர்களாக வேண்டும்' என்றான்."

"சரியானது என்றேன் நான்."

"ஒரு பையன் விடாப்பிடியாக, 'ஆனாலும் இடப்பெயர் என்றால் என்ன?" என்று கேட்டான்.

"நான் கரும்பலகையில் எழுதினேன்:

—ராம்ஜி ஒரு சிலேட்டு வைத்திருக்கிறான்.

—ராம்ஜி ஒரு பேனா வைத்திருக்கிறான்.

—ராம்ஜி பள்ளிக்கூடம் செல்கிறான்.

—ராம்ஜி தினமும் சீக்கிரமாகப் பள்ளிக்கு வருகிறான்.

—லட்சுமிராம் உங்களை சுற்றுலாவுக்கு அழைத்துச் செல்வார்.

"பையன்கள் வாக்கியங்களைப் படித்தார்கள். அதன்பின் நான் இரண்டாம் வாக்கியத்திலிருந்து 'ராம்ஜி' என்ற சொல்லுக்குப் பதிலாக 'அவன்' என்று எழுதினேன். லட்சுமிராம் என்ற இரண்டாம் வாக்கியத்தில் 'நான்' என்று எழுதினேன்.

"பையன்கள் வாக்கியங்களை மறுபடியும் படித்தார்கள். அவர்களுக்குப் புரிந்ததாகத் தோன்றியது. 'இப்பொழுது நான் எந்த இடத்தில் இடப்பெயர்களை உபயோகிக்கவேண்டும் என்று சொல்லுங்கள்' என்றேன்."

"ராம்ஜிக்குப் பதிலாக என்றார்கள் சிலர். லட்சுமிராமுக்குப் பதிலாக என்றார்கள் மற்றும் சிலர்.

"ராம்ஜி, லட்சுமிராம் என்பவை வினைகளா பெயர்களா?"

"பெயர்கள்"

"ஒரு பெயரின் இடத்தில் நிற்பது எது?"

"ஓர் இடப்பெயர்."

கல்வி அதிகாரி சிரித்தார். "நீ ஒரு சரியான ஆசிரியர். ஒவ்வொன்றையும் விபரமாக விளக்குகிறாய்" என்றார்.

"நான் வேறு எப்படி இருக்க முடியும்? நான் ஒரு வழக் குரைஞர் ஆக இருந்திருந்தால் சுருக்கமாகச் சொல்வேன்.'"

செய்திகளை அறிய ஆர்வம் இருந்தபோதிலும் கல்வி அதிகாரி மிகவும் களைப்புடன் தோன்றினார். ஆகவே அவரிடம் விடை பெறறேன்.

"உன் வகுப்பை இலக்கணத் தேர்விலிருந்து விட்டுவிடப் போகிறேன். நீ காலங்களையும், வேற்றுமைகளையும் கற்பிக்க வேண்டும். அவற்றைக் கற்பிக்கும்பொழுது எனக்குத் தெரிவிக்கவும். அடுத்த வருடம் இலக்கணம் கற்பிக்கும் முறைக்கு ஏதாவது செய்ய வேண்டும்" என்றார்.

அவருக்கு நன்றி கூறிவிட்டு, வீட்டுக்கு வந்து படுக்கையில் படுத்தேன். சரியான களைப்பு.

## 3

பருவத் தேர்வுகள் நெருங்கின. கல்வி அதிகாரியே தேர்வாளராக வந்திருந்தார். அந்தப் பணி அவருக்கு மிகப் பிடித்தமானது.

எனக்கே உரிய வகையில் என் வகுப்பை நான் ஆயத்த நிலையில் வைத்திருந்தேன். மற்ற எல்லா வகுப்புகளையும் பரீட்சை செய்தபின்பு என் வகுப்புக்குத் தேர்வு வைக்கும்படி அவரை நான் கேட்டுக்கொண்டேன். என்னுடைய வகுப்பில் தேர்வு நடக்கும் பொழுது எல்லா ஆசிரியர்களும், தலைமை ஆசிரியரும் அங்கே இருக்கவேண்டும் என நான் விரும்பினேன். மேலும் அச்சமயத்தில் ஒவ்வொரு வகுப்பிலிருந்தும் ஐந்து மாணவர்கள் வீதம் அங்கே இருக்கவேண்டும் என்றும் கேட்டிருந்தேன்.

தேர்வு நாளன்று நான் அமைதியாகவும் எவ்விதப் பரபரப்பு இன்றியும் இருந்தேன். என் மனத்தில் எந்த இறுக்கமும் இல்லை. வெற்றி தோல்விகளைப்பற்றி நான் கவலைப்படவே இல்லை. மாணவர்களிடம் 'நீங்கள் அன்றாடம் எப்படி இருப்பீர்களோ அப்படியே இருங்கள். நீங்கள் அனைவரும் கட்டாயம் வெற்றி பெறுவீர்கள். ஆனால் மற்றவர்களுக்கு நாம் என்ன செய்து கொண்டிருந்தோம் என்பதைக் காட்டவேண்டும்.'

வழக்கம்போல் நான் எல்லா ஏற்பாடுகளையும் ஒரு திரைக்குப்பின் செய்து வைத்திருந்தேன். எல்லாரும் திரைக்கு முன்பு அமர்ந்திருந்தார்கள். பின்னர் நான் திரையை விலக்கினேன்

பிற வகுப்பு மாணவர்கள் சிறுசிறு குழுவாக அங்கு அமர்ந்து இருந்தார்கள். ஒவ்வொரு குழுவிற்கும் என் வகுப்பைச் சேர்ந்த ஒரு மாணவன் ஒரு கதை சொன்னான். கதை கூறுதல் முழு வேகத்துடன் நடைபெற்றது. ஒவ்வொரு மாணவனும் அவனுக்கு மிகவும் பிடித்தமான கதையைத் தேர்ந்தெடுத்திருந்தான். ஒரு வேளை மறந்துபோனால் நினைவுபடுத்திக் கொள்வதற்காக அவரவர் தம் கதைப் புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டனர். ஒவ்வொரு மாணவனும் தனக்கே உரிய பாணியில் கதையைச் சொன்னான். கதை கூறுபவனும் கேட்பவர்களும் கதையை வெகுவாக ரசித்தார்கள். கதை கூறும் தொழில் நுணுக்கம் ஒவ்வொருவனுக்கும் நன்றாகத் தெரிந்திருந்தது. கதையைச் சரியான நடையில், குரலில் ஏற்ற இறக்கம், நடிப்பு ஆகியவற்றோடு கூறினார்கள். கதை கேட்டவர்கள் கதையில் ஒன்றிப்போனர்கள். ஆசிரியர்கள் ஆச்சரியத்தோடு இதைப் பார்த்தார்கள்.

"இது என்னுடைய வகுப்புகளுக்கு ஒரு தேர்வு" என்றேன் நான்.

"எதைக் குறித்த தேர்வு?" என்று ஓர் ஆசிரியர் கேட்டார்.

"மொழித்திறன், கதை கூறும் திறன், ஞாபக சக்தி, நடிப்புத் திறன் முதலியவற்றுக்கான தேர்வு" என்றேன் நான்.

அடுத்த தேர்வை ஆசிரியர்கள் ஆவலோடு எதிர்பார்த்தார்கள்.

மறுபடியும் திரை நீக்கப்பட்டது. பையன்கள் இப்பொழுது வட்ட வடிவத்தில் அமர்ந்திருந்தார்கள். கரும்பலகையில் 'அந்தாதி விளையாட்டு' என்று எழுதப்பட்டிருந்தது. ஒரு பையன் ஒரு பாடலைக் கூறினான். இதன் இறுதி எழுத்தை முதலாகக் கொண்டு மற்றொருவன் இன்னொரு பாடலைக் கூறினான். வட்டத்தில் அமர்ந்திருந்த எல்லார் முறையும் முடிந்தபின்பு விளையாட்டின் முதற் சுற்று முடிந்தது. பின்னர் அடுத்த சுற்று ஆரம்பம் ஆகியது.

"ஏன் நீங்கள் மாணவர்களை இரண்டு குழுக்களாகப் பிரிக்கவில்லை. இந்த விளையாட்டுக்கு இரண்டு குழுக்கள் வேண்டுமே?"

"இல்லை ஐயா! நான் வேண்டுமென்றே அவ்வாறு செய்யவில்லை. குழுக்களுக்கிடையில் போட்டி என்றால் அது வெற்றியிலோ தோல்வியிலோ முடியும். அதனால் போட்டி மனப்பான்மையும் பொறாமையும் ஏற்படும். என்னுடைய ஏற்பாட்டின்படி ஒரு பையனுக்குத் தெரியவில்லை என்றால் அடுத்த பையன் ஆரம்பித்துவிடுவான். விளையாட்டுத் தொடர்ந்து நடைபெறும். ஒரு முறை விடை சொல்லத் தெரியாதவன் அடுத்த சுற்றில் விடை



வழக்கம்போல் நான் எல்லா ஏற்பாடுகளையும்
ஒரு திரைக்குப்பின் செய்துவைத்திருந்தேன்.

சொல்லிவிடுவான்."

கல்வி அதிகாரி தன் முகவாய்க் கட்டையைத் தடவியவாறே பார்த்துக் கொண்டிருந்தார்.

பையன்கள் விளையாடக் கொடுக்கப்பட்ட நேரம் குறைவு. ஆனால் அவர்கள் இவ்விளையாட்டை மிகவும் ரசித்தபடியால் மணி அடித்தபின்பும் தொடர்ந்து கொண்டே இருந்தார்கள். நான் அவர்களுக்கு மேலும் கொஞ்சம் நேரம் கொடுத்து விட்டுத் திரையைப் போட்டேன். வெளியில் வந்து பார்வையாளர்களிடம், "பாடப்புத்தகங்களில் உள்ள எத்தனை பாடல்கள் அவர்களின் நாவில் நடனமாடுகின்றன என்பதைப் பார்த்தீர்களா? செய்யுள் பாடநேரத்தில் நான் அவர்களைத் தினமும் இந்த விளையாட்டை விளையாடச் செய்வேன்" என்றேன்.

திரை மறுபடியும் விலக்கப்பட்டபொழுது பையன்கள் வட்ட வடிவில் அமர்ந்துகொண்டு ஒருவருக்கொருவர் விடுகதை போட்டுக் கொண்டிருந்தார்கள். எல்லாருக்கும் ஒரே ஆச்சரியம்.

"ஓகோ, விடுகதையும், புதிர்களுமா! நானும் சிறு வயதில் இவற்றைக் கேட்டதுண்டு. ஆனால் இவை பாடத்திட்டத்தில் உள்ளவையா?" என்று கேட்டார் கல்வி அதிகாரி.

"பாடத்திட்டத்தில் மொழிப்பாடம் போதிக்கப்பட வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. அதன் குறிக்கோள் மாணவர்களின் ஆர்வத்தைத் தூண்டி அவர்களின் மொழியறிவை வளர்ப்பதுதான். பையன்கள் இந்த விளையாட்டை மிகவும் விரும்புகிறார்கள். அவர்கள் கணக்கற்ற விடுகதைகளை அறிவார்கள்! மொழிப்பாடத் திற்கு ஒவ்வொரு புதிரும் ஒரு வகையில் உதவுகின்றது. பாடத் திட்டத்தில் வெளிப்படையாக இது குறிப்பிடப்படவில்லை என்றிருக்கலாம். இருந்தாலும் நான் அவற்றை மேற்கொண்டேன். இவற்றை வரும் வருடத்தில் பாடத்திட்டத்தில் நீங்கள் சேர்ப்பீர்கள் என்று நான் நம்புகிறேன்.

"இதை அடுத்து வார்த்தை புனைதல் விளையாட்டு. ஒரு பையன் ஒரு சொல்லைச் சொல்லவேண்டும். அடுத்தவன் அச் சொல்லின் கடைசி எழுத்தை முதலாகக் கொண்டு மற்றொரு சொல்லைச் சொல்லவேண்டும். இது எளிய விளையாட்டு. ஆனால் ஒவ்வொரு பையனும் ஏதாவது ஒரு பாடத்தை அடிப்படையாகக் கொண்டே இவ்விளையாட்டை அமைத்தான். சொற்கள் அந்தப் பாடத்தைப் பற்றியதாக இருக்கவேண்டும் என்று காணும்பொழுது இது சுவை நிறைந்ததாயிற்று. சிலர் ஆறுகளின் பெயர்களை மட்டும் குறிப்பிட்டார்கள். வேறு சிலர் மலைகளைக் குறிப்பிட்டார்கள். சிலர் இந்து சமயப் பெயர்களைக் குறிப்பிட, வேறு சிலர் இசுலாமிய சமயப் பெயர்களை மட்டும் எடுத்துக் கொண்டார்கள்.

"புதிய சொற்களைக் காண அகராதிகளையும், தேச வரை படங்களையும் நான் உபயோகிக்கச் சொல்கிறேன். இதன்மூலம் அவர்கள் பல புதிய சொற்களைக் கற்கிறார்கள். வீணாகக் காலத்தைக் கழிப்பதைவிட்டு அவர்கள் வெவ்வேறு தொகுதிகளைக் குறித்த சொற்களைச் சேகரிப்பதை நான் பார்த்திருக்கிறேன். புதிய சொற்களைத் தேடும் முயற்சியில் அவர்கள் ஒருவருக்கொருவர் உதவுகிறார்கள், மேலும் குறிப்புகளைத் தயாரிக்கிறார்கள்" என்று நான் விளக்கினேன்.

"இந்த விளையாட்டில் நிறைய ஆற்றல் மறைந்திருக்கிறது. மாணவர்களுக்குச் செய்திகளைத் தருவது, பொது அறிவை வளர்ப்பது என்பவற்றோடு, சொற்களின் மூலத்தைத் தேடும் அறிவு பூர்வமான கல்விக்கும் இது உக்கம் அளிக்கிறது" என்று கல்வி அதிகாரி பாராட்டினார். அடுத்து என்னை வாஞ்சையோடு நோக்கி, "உனக்குப் புதிய கண்டுபிடிப்புகளில் மிகவும் ஆர்வம் உள்ளது" என்று பாராட்டினார்.

ஒரு ஆசிரியர் ஒரு குறையைக் கூறியது கல்வி அதிகாரியின் காதில் விழவில்லை. "அவர் இந்த மாதிரியான வேலையைச் செய்வதற்காகவே இங்கு வந்திருக்கிறார். அவருக்குக் கற்றுக்



அகராதிகளையும் தேசவரைபடங்களையும் நான் உபயோகிக்கச் சொல் கிறேன். இதன்மூலம் அவர்கள் பல புதிய சொற்களைக் கற்கிறார்கள்.

கொடுக்க வேண்டிய வேலை இல்லை. எல்லா வேடிக்கைகளையும் அவர் செய்யலாம். நமக்குப் போதனையிலேயே முதுகு முறிந்து விடுகிறது. அவருக்கு அந்த வேலை இல்லை. ஒரே தமாஷ்தான்” என்றார்.

மற்றொருவர், “காலம் மாறிவிட்டது. இது புதிய கல்வியாளர் களின் காலம். செல்வம் என்பது கையிலிருக்கும் பணம்; அறிவு நாக்கின் நுனியிலிருப்பது என்றிருந்த காலம் எல்லாம் மலை யேறிவிட்டது. இவ்பொழுது அறிவு பெறுவதற்கு ஒருவன் விளையாட வேண்டும். எதிர்காலத்தில் இவர்கள் எல்லாம் எப்படி இருப்பார்கள் என்பது கடவுளுக்கே வெளிச்சம்! ஒருவருக்கும் படிப்பில் அக்கறை கிடையாது. பையன்களை விளையாட அழைத்துச் செல்பவர் செல்வாக்குப் பெறுகிறார்” என்றார்.

நான் பையன்களோடு பேசுவதில் ஈடுபட்டிருந்தேன். ஆகவே நான் இந்தப் பேச்சுகளைக் கேட்கவில்லை. பின்னால் தெரிய வந்தது.

நான் விசில் ஊதியவுடன் எல்லா மாணவர்களும் பெருக்கும் மாறுகளைக் கையில் ஏந்தினர். விளக்குமாறுகளை ஆடும் விளை யாட்டுக்கு நான் தலைமை தாங்கினேன். அவர்களைப் பள்ளிக் கட்டிடத்தைத் தூய்மை செய்யச் சொன்னேன். அவர்கள் கட்டிடம் முழுவதும் சென்று மூலைமுடுக்குகளை எல்லாம் சுத்தம்

செய்தார்கள். குப்பைகளையெல்லாம் ஒரு கூடையில் அள்ளிக் கொண்டு வந்தார்கள்.

கல்வி அதிகாரியும் மற்ற ஆசிரியர்களும் கவனித்தார்கள். இது எங்கள் வகுப்பின் பருவத்தேர்வில் ஒரு பகுதியாக அமைந்தது. "விளக்குமாறுகளை பயிற்சி செய்வதன் பொருத்தம் எனக்கு விளங்க வில்லை" என்றார் கல்வி அதிகாரி.

"இந்த நாட்டின் மிகப் பெரிய சாபக்கேடு அசுத்தம்தான். அசுத்தமும் அழுக்கும் இருக்கும்வரை நம் நாடு முன்னேறுவதற்கு உரிய வழியே புலப்படவில்லை. ஆகவே எனது பணி முதன் முதலில் அசுத்தத்தின்மீது போர் தொடுப்பதாக அமைந்தது. குப்பையை அகற்றுவதற்கு நாம் ஒரு போராட்டமே நிகழ்த்த வேண்டியுள்ளது. விளக்குமாறுகளோடு கூடிய பயிற்சி ஓர் அடை யாளமே. இந்தப் பயிற்சிதான் என்னுடைய முதல் போதனை. வகுப்பறை சுத்தமாக இருக்கும்வரை நாங்கள் வேறு எந்தப் பணியும் செய்வதில்லை. இப்பொழுது பையன்கள் குப்பை கூளங்களை வெறுக்கக் கற்றுக்கொண்டு விட்டார்கள்" என்றேன் நான்.

நாங்கள் பேசிக் கொண்டிருந்ததற்குள் பையன்கள் தங்கள் கைகளைக் கழுவித் தூய்மையாக அடுத்த பணிக்கு ஆயத்தம் ஆனார்கள். நான் மறுபடியும் விசில் ஊதினேன்.

கல்வி அதிகாரி, "உன்னுடைய பரிசோதனைகள் மிகவும் வினோதமாக இருக்கின்றன. நான்காம் வகுப்புக்குப் போதிக்கும் போது இது போன்ற பணிகளை எந்த அளவுக்கு நீ செய்திருக் கிறாய்?" என்று கேட்டார்.

"என்னுடைய பரிசோதனைகள் இப்படிப்பட்ட நடவடிக்கை களுக்கு இடம் அளிக்கின்றன. நான் நான்காம் வகுப்புப் பாடத்தைக் கற்றுக்கொடுக்கும் முன் முதலாம் வகுப்புப் பாடத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டும்."

நாங்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்த பொழுதே பையன்கள் அனைவரும் வெளியே பள்ளிவளாகத்திற்குச் சென்று விட்டனர். அவர்கள் மரங்களில் ஏறியிருந்தார்கள். என்னுடைய அடுத்த விசில் ஊதப்பட்டதும் அவர்கள் கீழே குதித்தார்கள். மூன்றாம் முறை விசில் ஊதிய உடன் அவர்கள் மறுபடியும் மரங் களில் ஏறினார்கள். நான்காம் முறை ஊதியவுடன் கீழே குதித்தார்கள்.

"அப்பாடி. இது வினோதமான படிப்பு முறை. இதற்கு எந்தவிதப் போதனையும் தேவையில்லை. இது என்ன விதமான கல்வி!" என்றார் தலைமைஆசிரியர்.

"இப்பொழுதெல்லாம் கற்றுக் கொடுக்காமல் ஒருவன் இவற்றை அறிவதில்லை. இவற்றைக் கற்பிப்பதையோ கற்பதையோ

நாம் அனுமதிப்பதும் இல்லை. இவற்றைக் கற்பிப்பதை நாம் விரும்புவதாகவும் தெரியவில்லை'' என்று நான் தலைமை ஆசிரியரிடம் கூறினேன்.

"அது உண்மையில்லை" என்றார் தலைமை ஆசிரியர்.

"அப்படியானால் சரி. நம் பள்ளி மாணவர்களில் எத்தனை பேருக்கு மரம் ஏறத் தெரியும் என்று கேளுங்கள்" என்றேன் நான். அங்கே அமர்ந்திருந்த மற்ற வகுப்பு மாணவர்களைப் போய் மரம் ஏறும்படி கல்வி அதிகாரி கேட்டுக் கொண்டார். ஆனால் ஓரிருவர் கூட மரம் ஏற அறிந்திருக்கவில்லை.

"ஐயா, நான் மாணவர்களுக்குப் பல்வேறு நடவடிக்கைகளில் பயிற்சி அளித்திருக்கிறேன். என்னுடைய பரிசோதனைகளில் இவையெல்லாம் அங்கம் ஆகின்றன" என்றேன் நான். மேலும் சிறிது விளையாட்டாக "ஐயா. இவர்களுடைய பெயர்கள் எல்லாம் தேர்வாளர்கள் பட்டியலில் உள்ளன. இவர்களுக்குத் தங்கள்தான் உரிய மதிப்பெண்கள் வழங்க வேண்டும்" என்றேன்.

கல்வி அதிகாரியும் விளையாட்டாகவே, "உனக்கு என்ன? உனக்கும் மதிப்பெண்கள் வேண்டுமா?" என்றார்.

அடுத்த முறை விசில் ஊதிய உடன் மாணவர்கள் அலமாரி களிலிருந்து பம்பரத்தையும் சாட்டையையும் எடுத்துக்கொண்டு, அவற்றைச் சுழல விட்டனர். ஆனால் அது பையன்கள் தெருவில் விளையாடும் குறிக்கோள் அற்ற விளையாட்டாக இருக்கவில்லை. சத்தமோ குழப்பமோ இல்லாமலே பையன்கள் விளையாடி னார்கள். ஒருவனும் மற்றவனை ஏமாற்றவில்லை. ஒவ்வொரு வனுக்கும் தனித்தனியே ஓர் இடம் ஒதுக்கப்பட்டது. குழுத் தலைவனின் ஆணைக்கு இணங்க அவர்கள் விளையாடினார்கள்.

அங்கிருந்தவர்கள் எல்லாரும் தத்தம் குழந்தைப் பருவத்தில் பம்பரம் விளையாடியவர்கள்தான். ஆகவே அவர்கள் அந்த விளையாட்டை ரசித்தனர்.

கல்வி அதிகாரி "இவர்களைப் பம்பரம் வைத்து விளையாடக் கற்றுக்கொடுத்தவர் யார்? அவர்கள் விதிகளுக்குக் கட்டுப்பட்டும் ஒழுங்கான முறையிலும் விளையாடுகிறார்களே!" என்றார்.

"ஐயா எங்கள் பயிற்சிக்கூடம் ஆற்றங்கரைதான். நாங்கள் அடிக்கடி இவ்வாறு சுற்றுலாச் செல்வோம். இது போன்ற பல நடவடிக்கைகள் அப்போது நடைபெறும். பல வித நடவடிக்கை களை அவர்கள் விளையாட்டின் மூலம் கற்றுக் கொள்கிறார்கள்" என்றேன் நான்.

"நீ சொல்வது சரி. குழந்தைகள் விளையாட்டின்மூலம் நன்றாகக் கற்றுக் கொள்கிறார்கள் என்று நான் அண்மையில் படித்தேன்" என்று கூறிய கல்வி அதிகாரி, தலைமை ஆசிரியரைப்

பார்த்து "நீங்கள் எப்பொழுது நம் பள்ளியில் இவற்றைப் புகுத்து போகிறீர்கள்?" என்று கேட்டார்.

தலைமைஆசிரியர் "இவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தால் பாடத்திட்டத்தை எப்படிப் பூர்த்தி செய்ய முடியும்? இவர் நிரந்தர ஆசிரியர் இல்லை. அவர் வேண்டிய வற்றைச் செய்துவிட்டுத் தன் வழியே போய்விடுவார். 'இது ஒரு பரிசோதனை; என்னால் முடிந்ததைச் செய்தேன். மற்றவற்றை என்னால் செய்ய முடியவில்லை. பையன்களும் அவற்றைச் செய்ய வில்லை' என்று சொல்லிவிடுவார். நீங்கள் அதை ஒப்புக்கொண்டு விடுவீர்கள். பரிசோதனைகளின் முடிவுகளை, அவை எப்படி இருந்தாலும் சரி, ஒப்புக்கொள்ள வேண்டும் என்று சொல்லி விடுவீர்கள். நாங்கள் பாடத்திட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் பாடத்திட்டத்தை முழுமையாக முடிக்காவிட்டால் ஏன் முடிக்க வில்லை என்று விளக்கம் கேட்டு நீங்களே ஆணைகள் அனுப்பி யிருக்கிறீர்கள். தேர்வு முடிவுகள் ஏன் சரியாக இல்லை? குறித்த காலத்திற்குள் ஏன் பணியை முடிக்கவில்லை என்றெல்லாம் எங்களைக் கேட்பீர்கள்."

இதைக்கேட்டுக் கல்வி அதிகாரி புன்னகை புரிந்தார். ஒன்றும் சொல்லவில்லை. அவர் சிறிது கோபம் அடைந்தார் என்று தெரிந்தது. இருந்தாலும் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார். வேறு எதுவும் சொல்லவில்லை.

நான் விசிலை ஊதினேன். பையன்கள் தங்கள் சட்டைகளைக் கழற்றிவிட்டு வரிசையில் நின்றார்கள். எல்லாரும் நிமிர்ந்து நேராக நின்றார்கள். அவர்களின் உடல் கட்டுமஸ்தாகவும், தூய்மையாகவும் இருந்தது. அவர்களின் கைகள், பாதங்கள், தலைமுடி எல்லாம் சுத்தமாக இருந்தன. பிராமணப் பையன்களின் பூணூல் சுத்தமாக இருந்தது. அழுக்குப் படிந்த நகங்கள் இல்லை. தலைமுடி வெட்டப் பட்டு சுத்தமாக இருந்தது. அவர்களின் கண்கள் பிரகாசமாக இருந்தன. அவர்களின் குல்லாய்கள் சுத்தமாகப் பளிச்சென்றிருந்தன.

கல்வி அதிகாரி புன்னகையுடன், "இதற்கெல்லாம் எவ்வளவு காலம் தயாரிப்புச் செய்தீர்கள். இவ்வாறு உடல் தூய்மை செய்து கொள்வதற்கு நீங்கள் பெரும்பாடுபட்டிருக்க வேண்டும்!" என்றார்.

"கடந்த ஆறு மாதங்களாகவே இதற்கான தயாரிப்பு நடந் திருக்கிறது. நான் ஆறுமாதம் உழைத்தது உங்களுக்குத்தான் தெரியுமே" என்றேன் நான்.

நான் மறுபடியும் விசில் ஊதியதும் பையன்கள் தத்தம் சட்டைகளை அணிந்துகொண்டு வரிசையில் நின்று, அனை வருக்கும் வணக்கம் கூறியபின் கலைந்தார்கள்.

தலைமை ஆசிரியர் சிறிது கிண்டலாக, "ஆகவே தேர்வ

முடிந்துவிட்டது போலும்" என்றார்.

"இன்னும் இல்லை. நீங்கள் எல்லாரும் அடுத்த அறைக்கு வர இயலுமா?" என்று கேட்டேன்.

"ஓ! கட்டாயமாக வருகிறோம். நீங்கள் கடந்த பல நாட்களாக அந்த அறையைக் கேட்டுப் பெற்றீர்கள். எங்களில் யாரையும் அதைப் பார்க்கவும் விடவில்லை. நீங்கள் ஏதோ சேகரிப்பு செய் திருக்கிறீர்கள் இல்லையா?" என்றார் தலைமைஆசிரியர்.

"நீங்களே நேரில் வந்து பார்த்துக் கொள்ளுங்கள்" என்றேன் நான்.

நாங்கள் வகுப்புக்குள் நுழைந்தோம்.

கல்வி அதிகாரி "ஓ! இது ஒரு சிறிய காட்சிக் கூடமாக அல்லவா இருக்கிறது?" என்றார்.

"நான் அப்படித்தான் யூகித்தேன்" என்றார் தலைமைஆசிரியர். "மாணவர்கள் அங்கும் இங்கும் ஓடிப் பொருட்களைத் தேடிக் கொண்டு வந்து அவற்றை அடுக்கிக் கொண்டிருந்தார்கள்."

"இந்தப் பணியில் அவர்கள் அனைவரும் மிகவும் உற்சாகத் தோடு ஈடுபட்டார்கள். அவர்கள் விரும்பும் எந்த விதத்திலும் பொருள்களை ஒழுங்குபடுத்தி வைக்கலாம் என்று நான் கூறி யிருந்தேன். நான் அவர்களுக்கு எந்த வகையிலும் வழிகாட்ட வில்லை" என்றேன் நான்.

"இந்தப் பொருள்களையெல்லாம் மாணவர்கள் தாங்களாகவே அடுக்கி வரிசைப்படுத்தினார்களா?" என்று கேட்டார் கல்வி அதிகாரி.

"ஆம். ஐயா."

"என்னால் நம்ப முடியவில்லை. அது சாத்தியமில்லை. எல்லாம் மிகச் சீராகவும் கலைநயத்தோடும் ஒழுங்குபடுத்தப் பட்டுள்ளது."

நான் ஒன்றும் பதில் கூறவில்லை. என் பணி, தன்னைக் குறித்துத் தானே பேசியது.

"இப்பொருள்களையெல்லாம் எங்கிருந்து சேகரித்தீர்கள்? இவையெல்லாம் இயற்கைப் பாடத்திற்கு மிகவும் தேவைப்படுமே?" என்றார் கல்வி அதிகாரி.

"இயற்கையிலிருந்துதான். இயற்கைப் பாடத்திற்காக நாங்கள் சுற்றுலாக்கள் சென்றபொழுது இவற்றைச் சேகரித்தோம்" என்றேன் நான்.

"ஒருவேளை இவர்கள் வெளியே நடைப்பயணங்கள் மேற் கொண்டபொழுது சேகரித்திருக்கலாம்" என்றார் தலைமை ஆசிரியர்.

"அற்புதமான பணி. இந்தக் காட்சியைக் கலைத்துவிட

வேண்டாம். பள்ளி முழுவதற்கும் இது பயன்படும். இந்தத் தொகுப்போடு மற்ற ஆசிரியர்களையும் பொருள்களைச் சேகரிக்கச் சொல்வோம்" என்றார் கல்வி அதிகாரி.

"அப்படியானால் ஆசிரியர்கள் வகுப்பறைப் போதனை செய்வது எப்போது?" என்று முணுமுணுத்தார் தலைமைஆசிரியர்.

தாங்கள் சேகரித்தவற்றுக்கு மாணவர்கள் ஒரு பட்டியல் தயாரித்திருந்தார்கள். கல்வி அதிகாரி அதைப் படித்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். "இந்தப் பையன்களுக்குப் பரிசு வழங்க வேண்டும்" என்றார் அவர்.

"ஐயா, காட்சிக்காகப் பொருள்களைச் சேகரிப்பதே மகிழ்ச்சி தரும் பணிதான். அதுவே அவர்களுக்குப் பரிசு. இந்தக் காட்சிச் சாலையே அவர்களுக்குப் பரிசுதான்."

"இருந்தபோதிலும்..." கல்விஅதிகாரி வாக்கியத்தை முடிக்க வில்லை. மீண்டும் நான் பேசாமல் இருந்தேன்.

அறையில் ஒரு மூலையில் சில பொம்மைகள் இருந்தன.

"இந்தப் பொம்மைகளை யார் செய்தார்கள்?" என்று கேட்டார் கல்வி அதிகாரி.

"பையன்கள்தான் செய்தார்கள். நீங்கள் இங்கே பார்க்கும் எந்தப் பொருளிலும் என் பங்கு ஒன்றும் இல்லை."

"இவை ஆற்றங்கரையிலேயே செய்யப்பட்டன. வார இறுதி விடுமுறை நாட்களில் சுடப்பட்டன."

"உனக்கு மூளை அதிகம். உனது பரிசோதனை ஆச்சரிய கரமானது. உன்னிடத்தில் எந்தச் சாதனமும் இல்லை. ஆற்றங் கரைக்குப்போய் வயற்காட்டுக் களிமண்ணைக் கொண்டு இத்தனை புதுமை செய்திருக்கிறாய். மிகவும் நன்று" என்று பாராட்டினார். அவருக்கு ஒரே மகிழ்ச்சி.

அதற்குமேல் அவரைப்பேச விடாமல் இடைமறித்து, "சிறிது நேரம் தாழ்வாரத்தில் அமர்ந்திருக்க முடியுமா? நான் வேறு ஒன்றை உங்களுக்குக் ,காண்பிக்க விரும்புகிறேன்" என்றேன் நான்.

அவர்கள் அமர்ந்திருந்தனர். தலைமை ஆசிரியர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தார். மேலும் "ஐயா, நாங்களும் இவற்றை யெல்லாம் செய்ய முடியும். ஆனால் எப்பொழுது கற்பிப்பது?" என்றார்.

நான் சில அட்டைத் துண்டுகளைக் கொண்டு வந்தேன். நான் இந்த வகுப்பின் பொறுப்பை மேற்கொண்ட பொழுது வகுப்பு மாணவர்களில் சிலர் எழுதிய கையெழுத்துப் படிகள் அதில் இருந்தன. மற்றொரு அட்டைத்துண்டில் இரண்டு நாட்களுக்கு முன் அதே மாணவர்களின் கையெழுத்துப்படிகள் இருந்தன. அட்டைத் துண்டுகளில் கையெழுத்தின் முன்னேற்றத்தைக்

குறிக்கும் அட்டை என்று தலைப்பிடப்பட்டிருந்தது.

பையன்களின் கையெழுத்து முன்னேற்றத்தைப் பார்த்து எல்லாரும் பாராட்டினர்கள். ஒரே ஒரு ஆசிரியர் மட்டும் மற்றொருவரிடம் 'நல்ல கையெழுத்து எழுதும் ஒரு மாணவனின் மாதிரியை மட்டும் எடுத்து விளம்பரத்துக்காகச் செய்யப்படும்' என்று முணுமுணுத்தார்.

இந்தக் குற்றச்சாட்டை நான் வெறுத்தேன் என்றாலும் பொருட்படுத்தவில்லை. இதைப்போய் ஒரு பொருட்டாக நினைத்தால் மிகவும் கேவலம் எனக் கருதினேன். கல்வி அதிகாரி "இப்படிப்பட்ட மாற்றத்தை எப்படிக் கொண்டுவந்தாய்?" என்று கேட்டார்.

"பல முறைகளை மேற்கொண்டேன்" என்றேன் நான்.

"இம்முறைகளை நாம் நம் பள்ளிகளில் எல்லாம் புகுத்தினால் எப்படி இருக்கும்?"

"அதைச் செய்ய முடியும். அதனால் நல்ல முன்னேற்றத்தை என்னால் கொண்டுவர முடியும்."

நான் மற்றொரு குறிப்பேட்டைக் கொண்டுவந்தேன். கடந்த ஆறுமாதங்களில் என் வகுப்பில் ஒவ்வொரு மாணவனும் எத்தனை புத்தகங்கள் படித்தான் என்ற விபரம் அதில் குறிப்பிட்டிருந்தது. ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும் ஒரு மாணவனின் பெயர் குறிப்பிடப்பட்டிருந்தது. அதற்குக் கீழே தான் படித்த புத்தகத்தின் பெயரை அம்மாணவனே குறித்திருந்தான். குறிப்பின் கடைசியில் நான், மொத்த மாணவர்களின் எண்ணிக்கை, அவர்களால் படிக்கப் பட்ட புத்தகங்களின் எண்ணிக்கை, ஒவ்வொரு மாணவனும் படித்த புத்தகங்களின் சராசரி எண்ணிக்கை, மிக அதிகமாக புத்தகங்கள் படித்த மாணவனின் பெயர், மிகக் குறைவாகப் படித்த மாணவனின் பெயர் முதலியவற்றைக் குறித்திருந்தேன். அதோடு மிக விரும்பிப்படிக்கப்பட்ட புத்தகத்தின் பெயர், மிகவும் விரும்பப் படாத புத்தகத்தின் பெயர் ஆகியவற்றையும் குறித்தேன். மேலும், பாடவாரியாக மாணவர்கள் படித்த புத்தகங்களில் மாணவர்கள் எந்த வகைப்புத்தகங்களை மிகவும் விரும்பிப் படித்தனர் என்ற செய்தியும் குறிக்கப்பட்டிருந்தன.

கல்விஅதிகாரி இவற்றையெல்லாம் பார்த்துவிட்டு ஆச்சரியப் பட்டார். "எத்தனை புத்தகங்களைப் பையன்கள் படிக்கிறார்கள்? மேலும் எத்தனை பாடங்களைப் பற்றிய புத்தகங்கள்? இவற்றை யெல்லாம் எப்பொழுது படித்தார்கள்?"

"அது உண்மைதான் ஐயா. அவர்கள் இந்தப் புத்தகங்களை என் மேற்பார்வையின் கீழ் படித்தார்கள்."

கல்வி அதிகாரி தலைமைஆசிரியரைப் பார்த்து, "உங்கள்

பள்ளியின் மாணவர்கள் கடந்த ஆறு மாதங்களில் எத்தனை புத்தகங்கள் படித்தார்கள்?" என்று கேட்டார்.

"இப்படிப்பட்ட புத்தகங்களில் அவர்கள் இத்தனை புத்தகங்களை எப்படிப் படிப்பார்கள்? இவற்றைப் படித்துக் கொண்டிருந்தால் வரலாறு, புவியியல், ஜாமெட்ரி முதலிய பாடப் புத்தகங்களை படிக்க அவர்களுக்கு நேரம் எப்படிக் கிடைக்கும்?" என்றார் தலைமை ஆசிரியர்.

கல்வி அதிகாரி ஒன்றும் பேசவில்லை. அவர் சிந்தித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. பிறகு என்னைப்பார்த்து "உங்கள் மாணவர்கள் மொழிப்பாடத்தில் தேர்வு நடத்தப்படாமலேயே வெற்றி பெற்றுவிட்டார்கள். இன்னும் என்ன இருக்கிறது?", என்றார்.

மாணவர்களால் தயாரிக்கப்பட்ட கையெழுத்து சஞ்சிகையை நான் கொண்டுவந்தேன். "இந்தக் கட்டுரைகள், கதைகள் எல்லாம் மாணவர்களே எழுதியவையா?" என்று கேட்டார் அதிகாரி.

"ஆம் ஐயா. கடைசியாக இரண்டு மாணவர்கள் கவிதைகள் கூட எழுத முயற்சி செய்தார்கள்" என்றேன்.

"அவர்கள் எழுதுவதில் நீ எதுவும் மாற்றமோ திருத்தமோ செய்வதுண்டா?" என்று கேட்டார்.

"இல்லை. இதுவரை இல்லை. அவர்கள் எழுதியபடியே வெளியிடப்பட்டுள்ளன."

"இவர்கள் மாணவர்களின் சொந்தப்படைப்பா இல்லை கடன் வாங்கப்பட்டவையா? அவர்களுக்கு எழுதுவதற்கான கருத்துக் களையாவது நீங்கள் கொடுத்ததுண்டா?"

"மற்றவர்களின் எழுத்துக்களைக் 'காப்பி' அடிப்பதில் என்ன பயன்? அவர்களுக்கு மனத்தில் தோன்றியவற்றை எழுதச் சொல்வேன்; அவற்றையே வெளியிடச் சொல்வேன். அவர்கள் தாங்கள் எழுதியவற்றை விரும்பினார்கள். நானும் வெளியிட்டேன்."

"இது பருவத் தேர்வுக்கான சிறப்புப் படைப்பா?"

"இல்லை. கடந்த மூன்று மாதங்களாக மாதம்தோறும் நாங்கள் ஒரு இதழ் வெளியிட்டு வருகிறோம். இதை இப்பொழுது பருவத் தேர்வுக்காகச் சமர்ப்பிக்கிறோம். ஆனால் தேர்வுக்காக இதைத் தயாரிக்கவில்லை."

கல்விஅதிகாரி மிகவும் மகிழ்ச்சி அடைந்து ஒப்புதலுக்கு அடையாளமாகத் தலையை ஆட்டிக் கொண்டார். "மிகவும் கடினமான காரியம். நீங்கள் மிகமிக நல்ல பணி செய்து கொண்டிருக்கிறீர்கள். ஆறு மாதத்திற்குள் எப்படிப்பட்ட சாதனை!"

தலைமை ஆசிரியர் குறுக்கிட்டார். "கணக்கு, புவியியல், வரலாறு ஆகியவற்றில் எப்போது தேர்வு நடைபெறும்? நாங்கள் பிற்பகலிலும் இங்கேயே இருக்க வேண்டுமா?" என்றார்.

ஒருவேளை அவர் என்னைக் குத்திக்காட்ட நினைத்திருக் கலாம். நான் இன்னும் கணக்கிலும், புவியியலிலும் ஒன்றும் செய்யவில்லை என்பதை அவர் அறிந்திருக்கலாம்.

"நான் கணக்கிலும், புவியியலிலும் இன்றும் ஒன்றும் செய்யவில்லை. ஆண்டிறுதித் தேர்வுக்குள் நான் அவற்றையும் எடுத்து முடித்து விடுவேன். வரலாற்றிலும் இதுவரை செய்யப் பட்டது குறிப்பிடத்தக்கதாக இல்லை."

"ஓ! முக்கியமானவை விடப்பட்டு விட்டன" என்றார் தலைமை ஆசிரியர்.

"அது உங்கள் கண்ணோட்டத்தில். அவருடையதில் இல்லை. உங்கள் கருத்துப்படி கல்வித்திட்டத்தில் வரலாறு, புவியியல், கணக்கு என்பதுதான் கடுமையானது போலும்" என்றார் கல்வி அதிகாரி.

கல்வி அதிகாரி உற்சாகமான மனோநிலையில் இருந்தார். ஆகவே தலைமைஆசிரியரும் பரிகாசமாகவே, "ஐயா! உங்கள் கண்ணோட்டத்திலும்தான். இந்தப் பாடங்களிலும் நல்ல தேர்ச்சி விகிதம் வேண்டும் என்றுதானே நீங்களும் விரும்புகிறீர்கள்" என்றார்.

இம்மாதிரியான மனம்விட்டுப் பேசிய பேச்சு சூழ்நிலையைச் சமநிலைக்குக் கொண்டு வந்தது. எல்லாரும் கலைந்துபோகத் தொடங்கினார்கள். கல்விஅதிகாரி "எங்கே உன் தேர்வு முடிவு அறிக்கைத்தாள்?" என்றார்.

"அதை இன்னும் நான் தயாரிக்கவில்லை ஐயா" என்றேன்.

"தேர்விலிருந்து உன் வகுப்பிற்கு விலக்கு அளிக்கப்படுகிறது."

# கடைசிக் கூட்டம்

## 1

பருவத்தேர்வு முடிந்த சில நாட்களுக்குப்பின் நான் என் சக ஆசிரியர்களோடு உரையாடிக் கொண்டிருந்தேன்.

சந்திராசங்கர், "நீ ஓர் ஆச்சரியப்படத்தக்க பேர்வழி. உன் பரிசோதனை வெற்றி பெற்றுவிட்டது என்று நான் ஒப்புக் கொண்டே ஆக வேண்டும். ஒரு ஆரம்பப் பள்ளியில் இப்படிப் பட்ட நிகழ்ச்சி நடைபெற முடியும் என்று நாங்கள் சற்றும் கருதவில்லை."

பத்ராசங்கர் இதை மறுத்துப் பேசினார்: "அவருக்கு ஆங்கிலம் தெரியும். ஆகவே ஆங்கிலப் புத்தகங்களைப் படிப்பார். அப் புத்தகங்களிலிருந்து புதிய கருத்துக்களைக் கற்றுப் பரிசோதனைகள் செய்வார்" என்றார்.

சம்பக்லால், "இருக்கலாம். அவருக்கு அதெல்லாம் முடியும். அவருக்குப் பணத்தைப் பற்றிய கவலை இல்லை. முடிவுகளைப் பற்றியும் அவருக்குக் கவலை இல்லை. பரிசோதனை தோல்வி அடைந்துவிட்டால் அவருக்கு ஒன்றும் சங்கடம் இல்லை" என்றார்.

வெங்கிலால், "நாம் எப்படி இத்தகைய பரிசோதனைகளைச் செய்ய முடியும்? பரிசோதனைகளுக்குக் காலம் செலவாகும். இதை எல்லாம் சிந்தித்துத் தயாரிக்க யாருக்கு நேரம் இருக்கிறது. நமக்குத் தனி 'ட்யூஷன்' உள்ளது. தினமும் மாலையில் நாம் கல்வி அதிகாரியை வேறு கண்டுகொள்ள வேண்டும், நம் குழந்தைகளைப் பராமரிக்க வேண்டும். சமூக உறவுகளைக் கவனிக்க வேண்டும். இன்னும் என்னென்னவோ. எத்தனை விஷயங்களைத்தான் நாம் கவனிக்க முடியும்? அவருக்கு என்ன? சுதந்திரப்பறவை. அவரால் இதெல்லாம் செய்ய முடியும்" என்றார்.

கடைசியில் நான், "இதோ பாருங்கள். நாம் இப்பொழுது செய்வதைவிட ஆரம்பக் கல்விக்கு இன்னும் எவ்வளவோ செய்ய முடியும். ஆரம்பக் கல்வி அமைப்பையே மாற்றி அமைக்க முடியும். அதை மாற்றி அமைக்க உறுதிகொண்ட ஒரு ஆள்தான் வேண்டும். இன்றைய உலகமே, பழைய உலகத்திலிருந்து பௌதிக நிலையிலும்,

சமூக நிலையிலும் மாறுபட்டு உள்ளது. மக்கள் அதை மாற்றி விட்டார்கள். தான் மேற்கொண்ட குறிக்கோளை நிறைவேற்ற ஒருவனுக்கு உற்சாகமும், தன்னம்பிக்கையும், ஆழ்ந்த ஈடுபாடும் தான் தேவை. ஒருவருக்கு ஆங்கிலம் தெரிவதால் மட்டும் பரி சோதனைகள் வெற்றி அடைந்துவிடுவதில்லை. ஒருவருக்கு வேலை செய்ய விருப்பம் இல்லாதபொழுது அவர் கூறும் நொண்டிச் சாக்குத்தான் இது. புதியன செய்யவேண்டும் என்பதற்கான உள்ளுணர்வுதான்—முக்கியமான ஒரு குறிக்கோளுக்காக ஒருவனது ஆன்மாவின் ஏக்கம்தான்—இதை உண்டாக்க வல்லது. சம்பக்லால் அவர்களே, தான் மேற்கொண்ட பரிசோதனையின் விளைவைப் பற்றி அதை மேற்கொள்பவருக்கு மேல் வேறு யாருக்கும் கவலை இல்லை. நீங்கள் பெறும் முன்னேற்றத்திற்காகவே நல்ல விளைவு களை விரும்புறீர்கள். என்னைப் பொறுத்த வரையில், தோல்வி என்பது, இம்மாதிரியான பரிசோதனைகள் செய்வதற்கான ஒரு வாய்ப்பை நிரந்தரமாக இழப்பதாக ஆகும். அதுமட்டுமல்ல, நான் தோல்வி அடைந்தால் எதிர்காலத்தில் யாரும் இத்தகைய சோதனைகளை மேற்கொள்வதற்குக் கதவுகள் சாத்தப்பட்டுவிடும். வேணிபாய்க்கு நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், சமூக உறவுகளைக் கவனித்துக் கொள்வதற்கும், வீட்டில் அரட்டை அடிப்பதற்கும் நேரம் இருக்கிறது. உங்களை யார் நாள்தோறும் கல்வி அதிகாரியைக் கண்டுகொள்ளச் சொல்கிறார்கள்? நாம் நம் பணியை நன்றாகச் செய்துவிட்டால், அதுபோல் முகஸ்துதி செய்து கொண்டிருக்க வேண்டியதில்லை. வேலை செய்யாதவர்கள்தான் இப்படிப்பட்ட கீழ்த்தரமான பணிகளைச் செய்ய வேண்டும். மாணவர்களுக்குத் தனி 'ட்யூஷன்' ஏன் வைக்க வேண்டும்? வகுப்பில் நாம் நன்றாகச் சொல்லிக்கொடுத்தால், வீட்டில் ட்யூஷன் வைக்க வேண்டிய அவசியம் இல்லையே. பள்ளியில் நன்றாகச் சொல்லிக் கொடுக்காதபொழுதுதான் தனி ட்யூஷன் தேவைப் படுகிறது" என்றேன்.

சிவசங்கர் குறுக்கிட்டு, "ஆனால் என் நண்பரே! நாங்கள் பெறும் குறைந்த சம்பளத்தை நீங்கள் ஏன் மறந்துவிடுகிறீர்கள். உங்களுக்குக் கொழுத்த சம்பளம் கிடைக்கிறது. என்ன செய்வது?" என்றார்.

"சம்பள உயர்வு கேளுங்கள். உங்களுக்குக் கொடுக்கப்படும்."

"சரியாய்ப்போச்சு. சம்பள உயர்வுக்குப் பதிலாக வேலை போகும். இதுதான் எங்களுக்குக் கிடைக்கும்" என்றார் விஸ்வநாத்.

"எல்லா ஆசிரியர்களும் ஒன்று சேர்ந்து கோரிக்கை எழுதித் தரவேண்டும். அப்பொழுது எத்தனை பேரை வேலையைவிட்டு நீக்குகிறார்கள் என்று பார்ப்போம். அவர்களை நீக்குவதற்கு முன்

நாமே வேலையைவிட்டுவிட வேண்டும் என்கிறேன். கொஞ்சம் தைரியமாக இருங்கள். நான் தைரியமாக இருப்பதால்தான் நான் நினைத்ததைச் செய்கிறேன்" என்றார்.

பத்ராசங்கர் "நம் பிழைப்புக்கு என்ன செய்ய முடியும்?" என்றார்.

"பிழைப்பா? தமக்குத் தாமே உதவி செய்பவர்களுக்குத்தான் கடவுளே உதவுகிறார். வேலைகளுக்காக பஞ்சம்? வயிற்றுப் பிழைப் புக்காக நான் குப்பைகூடக் கூட்டுவேன். உங்களைப் போல் நான் அரைப்பட்டினியாக இருக்க மாட்டேன். உங்களுடைய தற்போதைய சம்பளம் படுமோசமானது."

"நாங்கள் வேலையைவிட்டால் அடுத்த நிமிடம் அந்த வேலையைச் செய்ய எத்தனையோ பேர் காத்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் உணரவில்லை போலும்" என்றார் விஸ்வநாத்.

"நாம் மறியல் செய்யவேண்டும். புதிய ஆட்கள் வந்தால் பொறுப்பை ஒப்படைக்கக் கூடாது. நம்முடைய இடத்தை அவர்கள் ஏற்க அனுமதிக்கக் கூடாது. பள்ளியில் இரவு பகலாக மறியல் செய்ய வேண்டும். நாம் விழுந்து கிடக்கும் குழிக்குள் அவர்களும் விழுந்துவிட அனுமதிக்கக் கூடாது. பட்டினி, முகஸ்துதி, சோம்பல் என்ற ஆழ்குழிகளுக்குள் விழுந்துவிடாமல் அவர்களை வேறு வேலைகளுக்கோ, தொழில்களுக்கோ போகும்படி கேட்டுக் கொள்ளவேண்டும்."

இப்படியாக நாங்கள் பேசினோம். ஆசிரியர்கள் உற்சாகத் தோடு இதை ஆமோதிப்பதைக் கண்டேன். பழைய அடிமைத் தனமான கல்வி முறையை ஒழிக்க ஒரு பொறி பற்றவைக்கப்பட்டு விட்டது என்பதை நான் உணர்ந்தேன்.

## 2

நான் புவியியல் கற்பிப்பதைக் குறித்துச் சிந்திக்க ஆரம்பித்தேன். புவியியல் பாடங்களைப் பார்த்துவிட்டு மிகுந்த ஏமாற்றத்தோடு அவற்றைத் தூரத் தள்ளிவைத்தேன். பாடத்திட்டத்தைப் பார்த்த பொழுது எனக்கு ஒரே எரிச்சல். பையன்கள் ஏன் நதிகள், மலைகளின் பெயர்களை மனப்பாடம் செய்யவேண்டும் என்று எண்ணினேன். எனக்கே அவையெல்லாம் ஞாபகம் இல்லை. நேற்று கல்வி அதிகாரிகூட ஆஸ்திரேலியாவுக்குச் செல்லும் மார்க்கத்தை ஒரு தேசப்படத்தை வைத்துத் தேடிக் கொண்டிருந்தார். குழந்தைப் பருவத்தில் மனப்பாடம் செய்த புவியியலை யார் ஞாபகம் வைத்திருக்கிறார்கள்? இளம் குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட

புவியியலை ஏன் சொல்லித்தரவேண்டும்?

நானே ஆப்பிரிக்காவுக்குப்போனபொழுதுதான் புவியியலைப் புரிந்துகொண்டேன். புவியியலில் ஒரு ஆழ்ந்த நோக்கு எனக்கு அப்பொதுதான் ஏற்பட்டது. இன்று எனக்குப் புவியியலில் மிகுந்த ஆர்வம். அந்தப் பாடம் மிகவும் பயனுள்ளதாக உணர்கிறேன். இந்த வயதில் குழந்தைகளுக்கு இவற்றையெல்லாம் ஏன் கற்றுக் கொடுக்கவும் விளக்கிக் கூறவும் வேண்டும்? இந்தப் பாடத் திட்டத்தைப் பின்பற்றுவது அறிவுடைமை ஆகாது என்று நான் கருதுகிறேன். பாடப்புத்தகம் எனக்குச் சிரிப்பைத்தான் வரவழைத்தது. கல்வி அதிகாரியைச் சந்திக்க வேண்டும், புவியியல் பாடத்தை மாணவர்கள் சரிவரப் புரிந்துகொள்ளவும், பாடத்தில் சுவை காணவும் வேண்டுமென்றால் என்னுடைய முறையிலேயே கற்றுக் கொடுப்பதற்கு அவரிடம் அனுமதி பெற வேண்டும் என்று எண்ணினேன்.

கல்வி அதிகாரியை அணுகினேன்.

"என்ன விஷயம்?" என்றார் அவர்.

"பாடத்திட்டத்திலிருந்து புவியியலை நீக்கிவிட்டால் என்ன? அப்படிச் செய்யக் கூடுமா?" என்று கேட்டேன்.

"முடியாது. அப்படிச் செய்ய இயலாது. புவியியல் என்பது ஒரு மிக முக்கியமான பாடம். இப்பொழுதெல்லாம் வரலாற்றை விடப் புவியியல்தான் முக்கியமான இடம் பெறுகிறது. நம் பரிசோதனையில் எந்தப் பாடத்தையும் விட்டு விடுவதற்கு இடம் இல்லை. இருக்கும் பாடங்களை மேலும் நல்ல முறையில் கற்றுக் கொடுப்பதுதான் நம் குறிக்கோள். நீங்கள் அதைப் போதிப்பதற்கு எந்த முறையை வேண்டுமானாலும் கையாளலாம். மற்ற ஆசிரியர் களுக்குப் புவியியல் என்பது ஒரு சுவை மிகுந்த பாடம் என்பதை உணர்த்தவும், அதை மேலும் நன்றாகக் கற்றுக் கொடுக்க முடியும் என்பதைக் காட்டவும் வேண்டும். அதுதான் உன்னுடைய பரிசோதனைக்கே ஒரு பரீட்சை" என்றார் கல்வி அதிகாரி.

கல்வி அதிகாரி என்னை மிகச் சாதுரியமாக வாயடைக்க வைத்துவிட்டார். "ஆனால் ஐயா! இந்தப் பாடத்திட்டமோ, பாடப் புத்தகங்களோ வேண்டாம். நான் புவியியலை என் சொந்த முறையில் கற்பிக்க விழைகிறேன். உங்களுக்கு ஏமாற்றமே ஏற்படாது என்று நான் உறுதி கூற முடியும்" என்றேன் நான்.

"நானும் அதைத்தான் எதிர்பார்க்கிறேன்" என்றார் கல்வி அதிகாரி. சிறிது நேரம் கழித்து அவர் மற்றொரு பிரச்சினையை எழுப்பினார்.

"நாங்கள் நடத்தும் தேர்வுகளைக் குறித்து நீ என்ன நினைக் கிறாய்? புதிய கல்விக் கொள்கையாளர்கள் ஒட்டுமொத்தமாகத்

தேர்வுகளையே எதிர்க்கிறார்கள். அது ஒரு தீமை என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் நாங்கள் கல்வித்துறையை நடத்தியாக வேண்டும். ஆகவே தேர்வுகளையே முற்றிலும் நீக்கிவிட முடியாது. தேர்வு முடிவுகளும் நமக்கு வேண்டும். தேர்வுகளையே நீக்கி விடுவோமானால் ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்காமலே போகக் கூடும். நேர்மையான ஒரு ஆசிரியர் சொல்லிக் கொடுத்தாலும், அவர் சரியாகச் சொல்லிக் கொடுத்திருக்கிறாரா என்று சோதனை செய்து பார்க்க முடியாது. மாணவர்கள் பலன் அடைந்திருக் கிறார்களா என்பதைப் பார்ப்பதற்கும் நமக்கு ஒரு அடிப்படைக் கருவி தேவை. நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"உங்கள் பிரச்சினை மிகவும் சரியானது. மாணவர்கள் பள்ளி செல்லும் வரையும், அவர்களுக்கு ஓர் ஆசிரியர் கற்றுக்கொடுக்கும் வரையும் தேர்வுகள் இருந்துதான் ஆகவேண்டும். மாணவர்கள் கற்றக்கொள்ள வேண்டும் என்னும் உள்ளார்ந்த ஆர்வத்தோடு வரவேண்டும்; போதனைமுறைக் கலையை அறிந்த உற்சாகம் மிகுந்த ஆசிரியர்கள் வேண்டும். அப்பொழுதுதான் தேர்வுகளைக் கைவிட முடியும். இன்று நம்மிடையே உள்ள பணத்தை மையமாகக் கொண்ட அமைப்பு உள்ளவரை தேர்வுகள் இருந்துதான் ஆகவேண்டும்."

"அது சரிதான்; இந்த முறையில் ஏதோ சில முன்னேற்றம் செய்ய முடியுமானால் சிந்தித்துப் பார்ப்போம்" என்றார்.

"தற்சமயம் நீங்கள் வருடத்தில் இரண்டு தேர்வுகள் நடத்து கிறீர்கள்: அதாவது பருவத் தேர்வும் ஆண்டிறுதித்தேர்வும். இதற்குப் பதிலாக மாதாந்திரத் தேர்வுகளை நடத்தலாம். மாணவனைப் பரீட்சித்துத்தான் ஆகவேண்டும் என்றால், அதை அவன் அடிக்கடி சந்திப்பது நல்லது. இவ்வாறு பழக்கமாகி விடுவதால் தேர்வுப் பயம் நீங்கிவிடும், தேர்வுச் சுமையும் நீங்கிவிடும். இரண்டாவதாக, தேர்வு என்பது மாணவர்களின் தகுதியை நிர்ணயிப்பதாக அமையாமல், மாணவர்களின் பலவீனத்தைக் கண்டு அறியவும், முன்னேற்றம் குறைந்த மாணவர்களை எச்சரிக்கை செய்யவும் சாதனமாகப் பயன்பட வேண்டும். இதுவே மிகப் பெரிய வித்தியாசம். மூன்றாவ தாக பாடத்தை நன்றாக அறிந்துவிட்டதாக உறுதியுடன் கூறும் மாணவர்களுக்குத் தேர்வில் இருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும். மாணவர்கள் தங்கள் பலவீனத்தைத் தெரிந்து கொள் வதற்காகத் தாங்களாகவே தேர்வில் கலந்து கொள்ள முன்வர வேண்டும். தேர்வில் கலந்து கொள்ளாதவர்களுக்குத் தத்தம் குறைபாடுகள் தெரியாமல் போகும் வாய்ப்புள்ளது. பொருத்தமான தேர்வு முறைகள் சாத்தியப்படும் பாடங்களில் மட்டுமே தேர்வுகள் நடக்க வேண்டும். மற்ற பாடங்களில் தேர்வு இருக்கக் கூடாது.

மேலும் தேர்வுகளில் வினாக்களுக்கு விடையெழுதப் பாடப் புத்தகங்களை அனுமதிக்க வேண்டும். பையன் பாடப்புத்தகத்தை எப்படிப் பயன்படுத்துகிறான் என்பதே சோதனைமுறையாகும். தேர்வு முடிவுகள் பின்வருமாறு மூன்று வகையாகப் பிரித்து வெளியிட வேண்டும்: 1) மேல் வகுப்புக்குச் செல்லத் தகுதியில்லை; 2) பலவீனமான பாடங்களில் முன்னேற்றம் காட்டுவதைப் பொறுத்து மேல் வகுப்புக்குச் செல்லலாம்; 3) மேல்வகுப்புக்குச் செல்லலாம். முதல் இடம் இரண்டாம் இடம் என்று மதிப்பெண் கொடுத்துத் தகுதியளிக்கும் முறையை விட்டுவிட வேண்டும்."

கல்வி அதிகாரி, "அடுத்த ஆண்டுக்கு நான் உன்னை என் துணை அதிகாரியாக நியமிக்க வேண்டும்" என்றார்.

நான் புன்னகை புரிந்தேன். மேலும் தொடர்ந்து, "ஆசிரியர் தேர்வாளர்களாக இருக்க வேண்டும். வேறெவரையும் விடத் தன் மாணவர்களின் பலவீனங்களும், அவ்வாறு இருப்பதற்கான காரணங்களும் அவர்களுக்குத்தான் நன்றாகத் தெரியும். மாணவன் மேல் வகுப்புக்குச் செல்லத் தகுதி உடையவனா இல்லையா என்பதை அவர்கள்தான் நன்றாகத் தெரிந்து முடிவு செய்ய வேண்டும். எப்படித் தேர்வுகளை நடத்த வேண்டும், ஆசிரியர் நன்றாக தேர்வை நடத்த அறிந்திருக்கிறாரா என்று மேற்பார்வை செய்யத் துணைக் கல்வி அதிகாரி தேவைதான்" என்றேன்.

"முற்றிலும் புதிய கருத்து" என்றார் கல்வி அதிகாரி.

"ஆமாம்" என்றேன் நான்.

தேர்வுகளைப் பற்றி இன்னும் சொல்லிவிடுவேன். ஆனால் உணவருந்தும் நேரம் வந்துவிட்டது. கல்வி அதிகாரி உணவருந்தச் செல்வதற்காக எழுந்துவிட்டார். என்னை நோக்கி ஒரு புன்னகை யுடன், "நல்லது. நல்லது. நாம் இதைப்பற்றி மேலும் பின்னர் பேசுவோம். போகட்டும். இது குறித்து நீ ஏன் நம் ஆசிரியர் களிடையே ஒரு சொற்பொழிவு செய்யக்கூடாது?" என்று கேட்டார்.

நான் அவரிடம் விடைபெறுவதற்காக எழுந்தேன். எனக்கு நானே கூறிக்கொண்டேன், "என்னுடைய சொற்பொழிவால் ஆசிரியர் யாரும் பயனடையப் போவதில்லை. இன்றைய தேர்வு முறை என்னும் படுகுழியிலிருந்து அவர்களை வெளியே கொண்டு வருதல் என்பது மிகக் கடினமான காரியம். கல்வி அதிகாரி யிடமிருந்து ஒரு ஆணை பிறப்பிக்கப்பட்டால்தான் இந்த முறையை மாற்ற முடியும். ஆனால் அவரோ..."

## 3

நான்காம் வகுப்பு மாணவர்கள் புவியியல் கலைச்சொற்களை அறிந்திருப்பதோடு, ஓரளவு புவியியல் பாடத்தைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே நான் தேச வரைபடங்களை வரவழைத்து அவற்றைச் சுவர்களின் தொங்கப்போட்டேன். கத்தியவார், குஜராத், பம்பாய் மாநிலம் ஆகியவற்றின் வரைபடங்கள் அவை. பையன்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். இதுவரை நான் புவியியலே கற்பிக்கவில்லை.

அவர்கள் தங்கள் நோட்டுப்புத்தகங்களிலிருந்து காகிதங் களைக் கிழித்துக் கூர் உருளைகள்போல் செய்து கொண்டார்கள். இவற்றைத் தங்கள் சுண்டுவிரல்களில் அவர்கள் மாட்டிக் கொள்வார்கள்.

“ஏன் இந்தக் காகிதக் கூர் உருளைகள்” என்று நான் கேட்டேன்.

“வரைபடத்தை மனப்பாடம் செய்வதற்காக” என்றார்கள்.

நான் அதிர்ச்சி அடைந்தேன். வரைபடங்களை மனப்பாடம் செய்வதா? வேடிக்கை செய்வதற்காகவே ஒரு பையனை வரை படத்திலிருந்து பவநகரைக் கண்டுபிடிக்கச் சொன்னேன். அவன் பம்பாய் மாநில வரைபடத்தைக் கண்களால் துழாவினான். அவன், பம்பாய், அகமதாபாத், ஹைதராபாத் என்று படித்தான். கீழ் நோக்கிப் பார்த்துப் பூனா என்று படித்தான். பக்கவாட்டில் பார்த்துப் போர்பந்தர் என்றான். அவனுக்கு அடுத்திருந்த இரண்டு மூன்று பையன்கள் ஏற்கெனவே பவநகரைக் கண்டுபிடித்து விட்டார்கள். அவர்கள் தாங்களே பதில் அளிக்க விரும்பினார்கள். நான் கேளாமலே கடைசியில் ஒரு பையன் வரைபடத்தில் பவநகரைக் காண்பித்தான்.

“கத்தியவாரில் எந்தத் திசையில் பவநகர் உள்ளது? அதன் திசையை எனக்குக் காட்டுங்கள்” என்றேன்.

பையன்கள் மேலும், கீழும், வலமும், இடமும் பார்த்துவிட்டு ஏதோ மனக்கணக்குப் போட்டுப்பார்த்துவிட்டு வடக்கு என்றார்கள்.

“வடக்கு என்றால் அங்கே மேலே. இந்தப் பக்கம் கிழக்கு எனப்படும்” என்றான்.

எனக்கு சிரிப்பை அடக்க முடியவில்லை. “மேலே ஆகாயம் தான் இருக்கிறது. மேலே எப்படி வடக்கு இருக்க முடியும்?”

“இல்லை ஐயா, மேலே வடக்கு, கீழே அங்கே தெற்கு உள்ளது” என்றார்கள் மற்ற மாணவர்கள்.

ஒரு பையன் “நீளவாட்டில் வடக்கு-தெற்கு, அகல வாக்கில் கிழக்கு-மேற்கு” என்றான்.

மற்றொரு பையன், "சூரியன் உதிக்கும் திசை கிழக்கு" என்றான்.

"இந்த வரைபடத்தில் சூரியன் எங்கே இருக்கிறது? காட்டுங்கள்" என்றேன்.

மாணவர்கள் குழப்பம் அடைந்தார்கள். "செத்குஞ்சி நதியைக் காட்டுங்கள்" என்று மேலும் கேட்டேன்.

தங்கள் விரலிலிருந்து காகிதச் சுருளைக்கொண்டு, செத்குஞ்சி நதியைக் காட்டினார்கள்.

"அது எதனுடன் கலக்கிறது?"

"கம்பட் வளைகுடாவில் சென்று கலக்கிறது."

"அது ஏன் இந்தப் பக்கம் அரபிக்கடலில் கலப்பதில்லை?" என்று கேட்டேன்.

ஒரு பையன் "அது ஆற்றின் விருப்பம். அது கம்பட் வளை குடாவில் தான் கலக்க விரும்பியது" என்றான்.

"ஆனால் ஆறானது ஏன் இங்கே கீழே இறங்கி வருகிறது?" என்றேன்.

"அது இயற்கை ஐயா. தண்ணீர் மேலே இருந்து கீழ் நோக்கித் தான் பாயும். தெற்குப்பக்கம்தான் கீழே" என்றான்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. கடந்த ஆண்டு படித்த புவியியலை அவர்கள் மறந்துவிடவில்லை. மனப்பாடம் வெற்றி கரமாக இருந்தது. இந்த வருடமும் நானும் அப்படியே போதிக் கலாம். ஆனால் அது புவியியல் போதனையாக இருக்காது. நான் பையன்களிடம் "வரைபடங்களைச் சுருட்டிவையுங்கள். நாம் அடுத்தமாதம் புவியியலைப் படிப்போம். இப்பொழுது நாம் ஓவியம் பழகுவோம்" என்றேன்.

பையன்கள் என்னைப் பார்த்துத் திருதிருவென்று விழித் தார்கள். பள்ளியிலேயே சித்திரம் தீட்டுதல் என்பது புதிய பாடம். அது பாடத்திட்டத்தில் சேர்க்கப்படவில்லை. பள்ளியில் இது போன்ற ஏதாவது ஒரு செய்முறையைப் பாடத்திட்டத்தில் சேர்க்கலாம்.

அடுத்த நாள் என்னுடைய வகுப்பில், "உங்களுக்கு விருப்ப மானவற்றை வரையுங்கள்; உங்களால் முடிந்தவற்றை வரையுங்கள். வேண்டுமானால் ஒரு படத்தைப் பார்த்துப்போடுங்கள், அல்லது அதன்மேல் வைத்து நகல் செய்யுங்கள். இல்லையேல் நினைவு படுத்திக்கொண்டு ஏதாவது வரையுங்கள். மனிதன், விலங்கு, பறவை, பட்டுப்பூச்சிகள், மரங்கள், பூக்கள், வானம், வீடு, ஆகியவற்றில் ஏதாவதொன்றையோ அல்லது அதுபோன்ற ஏதாவது ஒரு பொருளையோ வரையுங்கள். தேசப்படத்தைக்கூட வரையுங்கள்" என்றேன்.

குழந்தைகள் தங்கள் சிலேட்டுகளில் அவற்றை வரையத் தொடங்கினார்கள். அன்று முற்பகல் முழுவதும் எல்லாவகையான பொருள்களையும் வரைந்தார்கள். மணி அடித்தபொழுதுதான் அவ்வளவு நேரம் ஆனது தெரிந்தது. நேரம் ஆகிவிட்டது. நான் வகுப்பை நோக்கி, "உங்கள் பெற்றோர்கள் உங்களுக்குக் காகிதங்கள், பென்சில்கள் கொடுத்தால் நோட்டுப்புத்தகங்களில் வரையுங்கள். இல்லையேல் சிலேட்டுகளிலேயே வரையுங்கள்" என்றேன்.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. பல படங்கள் வரையப் பட்டன. ஓவியர்கள் இவற்றைப் பார்த்தால் தூக்கித் தூர எறிந்து விடுவார்கள். இருந்தபோதிலும் அவை குழந்தைகளால் அவரவர் கற்பனைக்கும் ஆற்றலுக்கும் தகுந்தாற்போல் வரையப்பட்டவை. அவற்றைப் பாதுகாத்து வைப்பது எதிர்காலத்தில் உபயோகிப்படும் என்று நான் கருதினேன். கல்விஅதிகாரியை நான் சந்தித்து, சிறிது கஷ்டப்பட்டு, ஒரு பக்கம் எழுதப்படாத சில தாள்களை நான் பெற்றேன். அவரிடமிருந்து சுமார் இருபத்தைந்து வண்ணப் பென்சில்களையும் பெற்றேன். அவர் என்னைப் பார்த்துப் புன்னகையுடன், "படிப்புச் சொல்லிக் கொடுப்பதை விட்டுவிட்டு, ஓவியத்தை மேற்கொண்டுவிட்டாய் போலும்!" என்றார்.

வெவ்வேறு தலைப்புகளுக்கு ஏற்ப நோட்டு புத்தகங்கள் தைத்து அவற்றில் பையன்களைப் படம்போடச் சொன்னேன். பொருத்தமான அலங்காரத்துக்கு, சிலர் வேப்பம் கொப்புகளையும் அரசமர இலைகளையும், துளசிச் செடியின் கொப்புகளையும், சாதாரண மலர்களையும் இடையில் வைக்கச் செய்தேன். துணிக்கடைக்காரர் ஒருவரிடம் இருந்து துணிகளில் அச்சிடப்பட்ட சில துண்டுகளை வாங்கித் தொங்கவிட்டேன். என்னுடைய நண்பர்களிடம் சிலரிடமிருந்து இரவலாக சில நல்ல ஓவியங்களை வாங்கி மாதிரிகளாக விளங்கும்படி அவற்றையும் மாட்டித் தொங்கவிட்டேன். பொருள்களைப் பார்த்து வரைவதற்காக அன்றாட உபயோகப் பொருள்களாகிய—மைக்கூடு, பேனா, ஒரு பெட்டி, தீப்பெட்டி, முதலியவற்றை வைத்தேன். கரும்பலகையில் எழுதினேன்:

வரைக, வரைக, வரைக
நீங்களே செய்யுங்கள்
எப்படி வரைவது என்பது உங்களுக்கே தெரியும்
உங்கள் ஓவியங்கள் நாளுக்குநாள் சீரடைகின்றன.

பையன்கள் மிகவும் ஆர்வமாக இருந்தார்கள். சித்திரத் தையல் போட்ட துணிகளிலிருந்து பார்த்துப் பையன்கள் அவற்றைப் போலவே துல்லியமாக வரைந்தார்கள். உண்மையான பூக்களைப் போலவே சிலர் பூக்களை வரைந்தார்கள். சிலர் படம் வரையவே

இல்லை. அவர்கள் சும்மா உட்கார்ந்துகொண்டு மற்றவர்கள் வரைவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பதினைந்து நாட்கள் கழித்து, உயர்நிலைப் பள்ளியிலிருந்து ஓவிய ஆசிரியரை வரவழைத்தேன். அவரிடம், “பையன்களுக்கு எப்படிப் படம் வரைய வேண்டும் என்று நீங்கள் கற்றுக் கொடுக்க வேண்டாம். உங்களுக்குப் பிடித்தமானவற்றைக் கரும்பலகையில் வரையுங்கள். அதைச் சிறிது மெதுவாகவும், படிப்படியாகவும் வரையுங்கள். ஒரு நாற்காலி, அல்லது மரம் அல்லது வேறு ஏதாவது ஒரு பொருளை வரையுங்கள்” என்றேன்.

அவரும் அப்படியே செய்தார். பையன்கள் அவர் செய்வதைக் கூர்ந்து கவனித்தார்கள். அடுத்த நாள் ஓவியப் பணியில் ஊக்கம் கூடியது. ஓவியம் வரையும் உத்தியில் ஓரிரு நுணுக்கங்களை அவர்கள் கற்றுக் கொண்டிருந்தார்கள். அவரவர் தீட்டிய ஓவியங் களில் அவரவர் பெயர்களையும் தீட்டிய தேதியையும் நான் எழுதச் சொன்னேன்.

மேலும் சில நாட்கள் கழித்து நான் உயர்நிலைப்பள்ளி ஓவிய ஆசிரியரை வரவழைத்து ஓர் ஓவியத்துக்கு வண்ணம் தீட்டுவது எப்படி என்று விளக்கிக் காட்டச் சொன்னேன். விளக்கமாக அவர் வண்ணப் பென்சில்களைக் கொண்டு நான்கைந்து படங்களுக்கு வண்ணம் தீட்டிக் காண்பித்தார். பையன்களுக்கு ஒரு புதிய உலகம் தெரிந்தது.

அடுத்து, என்னுடைய நண்பரான ‘சர்வேயர்’ ஒருவரை வரவழைத்துப் பள்ளியின் வரைபடத்தை அறைகள் முதலியவற்றை அளவெடுத்து வரையச் சொன்னேன். அவரும் நானும் அளவு களைக் குறிக்க ஆரம்பித்தோம். மாணவர்கள் நாங்கள் செய்தவற் றைத் தொடர்ந்து கவனித்துக் கொண்டு வந்தார்கள். காகிதத்தில் ஒரு கட்டிடத்தின் வரைபடத்தை எப்படி வரைவது என்பதை நாங்கள் விளக்கினோம். சில நாட்களுக்குப் பையன்களை ‘சர்வேயர்’ அலுவலகத்திற்கு அழைத்துச் சென்று, தெருக்கள், கிராமங்கள், காட்டுப்பகுதிகள் ஆகியவற்றின் வரைபடங்களை எப்படி வரை கிறார்கள் என்பதைக் காட்டினேன். ஓரிரு முறை, பையன்களை சர்வேயருடன் நேரடியாக எங்கே நிலஅளவை செய்கிறார்களோ அந்த இடத்துக்கு அழைத்துச் சென்றேன்.

இப்பொழுது பையன்கள், அவர்களின் வீடுகள், வகுப் பறைகள், ஒரு கிணறு, ஏரி முதலியவற்றின் வரைபடங்களை வரைய ஆரம்பித்தார்கள். நான் பையன்களை இயற்கைச் சூழ்நிலைகளை நேரே கண்டறிவதற்காக விளையாட்டுகளை விளையாடச் சொன் னேன். இதன்மூலம் ஒரே பார்வையில், அவர்கள் கண்ட காட்சி களைக் கற்பனையில் கண்டு, அவற்றைப் படமாக வரையப் பயிற்சி

பெறச் செய்தேன். சூரியோதயத்திலும் அஸ்தமனத்திலும் ஆகாயத்தின் நிறங்களைக் கூர்ந்து கவனிக்கச் செய்தேன். மரங்கள் முதலிய பொருள்களைத் தூர இருந்தும் அண்மையில் இருந்தும் கவனிக்கச் செய்து பொருள்களைப் பற்றிய கண்ணோட்டம் பெறச் செய்தேன். மரங்கள், குன்றுகள், மனிதர்கள், ஆகிய பொருள்களின் மீது நிழலும் ஒளியும் விழுவதைக் கூர்ந்து கவனிக்கச் செய்தேன்.

எங்கள் ஓவியப்பணி முழு வீச்சில் நடைபெற்றது.

## 4

ஒருநாள் உயர்நிலைப்பள்ளியிலிருந்து இருகண் தொலைநோக்கி வாங்கி வந்தேன். அவற்றை உபயோகப்படுத்தித் தூரத்தில் உள்ள பொருள்களை எவ்வாறு நோக்குவது என்பதையும் காட்டினேன். பையன்களுக்கு ஒரே ஆச்சரியம். தொலைநோக்கியின் மூலம் ஒவ்வொருவராகப் பார்ப்பதற்கு ஒரு நாள் முழுவதும் செலவாயிற்று. ஒரு நாளிரவில் கிரகங்களையும், நட்சத்திரங்களையும் பார்ப் பதற்காக ஒரு வான்நோக்கியைக் கடன் வாங்கி வந்தேன். “நீங்கள் மிகவும் சுறுசுறுப்பானவர்” என்று என் நண்பர்கள் என்னைப் பாராட்டினார்கள்.

இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் என் ஆசிரியத் தோழர்கள் பொதுவாக என்னுடனேயே இருந்தார்கள். அவர்கள் என்னைப் பற்றி புறம் பேசுவதைவிட்டுவிட்டு என்னிடமிருந்து பலவற்றைக் கற்றுக்கொள்ள முன்வந்தனர். பிற ஆசிரியர்கள் என் வகுப்புகளுக்கு வந்து வாரத்தில் ஒரு மணிநேரம் கவனித்துக் கற்றுக்கொள்ள கல்வி இயக்குநர் அனுமதி வழங்கியிருந்தார்.

இரவில், மாணவர்களுக்கு நிலா, கிரகங்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றைத் தொலைநோக்கிமூலம் காண்பித்தேன். இது அவர்களுக்கு ஆச்சரியமான செயலாக அமைந்தது.

நான் அவர்களுக்குச் சந்திரனைக்காட்டி, “நிலாவில் ஒரு பாட்டி நூற்பதாகவும், ஒரு வெள்ளாடு வைத்திருப்பதாகவும் உங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கும். ஆனால் உண்மையில் அவை சந்திரனில் உள்ள பெரிய மலைகள், சந்திரன் மிகவும் குளிர்ச் சியாக இருக்கும். ஆகவே அதில் மனிதர்கள் வசிக்க முடியாது” என்று கூறினேன்.

பையன்கள் என்னை ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். நான் தொடர்ந்து, “நாம் வாழும் இந்தப் பூமியும் நிலாவும் ஒரு வகையில் சகோதரிகள், சூரியன்தான் இவர்களின் தந்தை” என்றேன்.

பையன்களின் ஆச்சரியம் இன்னும் அதிகரித்தது. “எந்தக்

கதைப்புத்தகம் இதையெல்லாம் கூறுகிறது?" என்று கேட்டான் ஒருவன்.

"இது ஒரு கதையல்ல. உண்மையான செய்தி."

"இல்லை. இல்லை"

"உண்மை அப்படித்தான்."

உலகம் எப்படி உண்டாகியது என்பதை அவர்களுக்கு நான் கூறினேன். அவர்கள் அதில் ஆர்வம் காட்டினார்கள். தினந்தோறும் நான் அந்த வரலாற்றைத் தொடர்ந்து கூறலானேன். உலகம் குளிர்ந்தவுடன் எவ்வாறு அதன் மேற்பரப்பு உண்டாகியது என்று கூறினேன். மலைகளும் பள்ளத்தாக்குகளும் எவ்வாறு உண்டாயின என்று கூறினேன். எவ்வாறு, பாசியும், அமீபாவும், மீன்களும், தவளைகளும், நிலத்திலும் நீரிலும் வாழும் உயிர்களும், காடுகளும், ஆதிகால மனிதக் குரங்குகளும் உருவாயின என்றும் இவற்றிலிருந்து படிப்படியாக இன்று நாம் காணும் மனித இனம் எவ்வாறு உருவாகியது என்றும் நான் அவர்களுக்குக் கூறினேன். இந்த வரலாறு அவர்களுக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்ததால் மிகுந்த உற்சாகத்தோடு கதை கேட்டார்கள். என்னுடைய இந்தப் பேச்சுக்களைக் கேட்பதற்கு ஏழாம் வகுப்புப் பையன்களைத் தலைமைஆசிரியர் என் வகுப்புக்கு அனுப்பினார்.

ஒருநாள் நான் வகுப்புக்கு ஒரு பூமிக்கோளத்தைக் கொண்டு வந்து, "நான் கூறியவை எல்லாம் இதோ நாம் காணும் இந்தப் பூமியில் நடைபெற்றது" என்று கூறினேன்.

அதன்பிறகு நான், உலகின் எவ்வளவு பகுதி நிலம் என்றும் எவ்வளவு பகுதி நீர் என்றும் கூறியதோடு, மனிதர்களில் வெவ்வேறு இனங்கள்—வெள்ளையர், கறுப்பர்கள், மஞ்சள் நிறத்தவர்கள் எங்கெங்கே காணப்படுகிறார்கள் என்றும் கூறினேன். பூமியின் இயற்கைப் பிரிவுகள் என்னென்ன என்றும், அவற்றின் பெயர்கள் என்ன என்றும் கூறினேன். நாம் ஆசியாவில் இருக்கிறோம் என்பதையும் கூறினேன். ஆசியாவில் இந்தியா எங்கே இருக்கிறது என்பதையும் கூறினேன். இந்தியாவில் 'கத்தி'களின் வாழ்விடமாகிய 'கத்தியவார்' எங்கே இருக்கிறது என்பதையும் காண்பித்தேன். கத்தியவாரின் பவநகரம் எங்கே உள்ளது என்பதையும் சுட்டிக் காட்டினேன்.

ஒவ்வொரு நாளும் விதவிதமான செயல்முறைகளைத் தந்து பூமிக்கோளத்திலிருந்தோ, தேசப்படங்களிலிருந்தோ ஏதாவது ஒன்றைக் கண்டுபிடிக்கச் சொன்னேன். தேசப்படத்திலிருந்து அவர்கள் பார்த்த கிராமங்களையும் அவற்றுக்குச் செல்லும் வழித் தடங்களையும் கண்டுபிடிக்கச் சொன்னேன். ஓரிடத்தை அடை வதற்கு முன் எந்தெந்த நதிகளைக் கடக்க வேண்டும் என்றும்



கிரகங்களையும், நட்சத்திரங்களையும் பார்ப்பதற்காக ஒரு தொலைநோக்கியை நான் கொண்டு வந்தேன்.

எந்த நகரங்களின் வழியாகச் செல்லவேண்டும் என்றும் கண்டு பிடிக்கச் செய்தேன்.

இது ஒரு அணுகுமுறை. மற்றும் ஒன்றும் உண்டு. நான் ஆப்பிரிக்காவுக்குப் போயிருந்தேன். ஆகவே கரும்பலகையில் ஒரு ஆப்பிரிக்க நாட்டின் வரைபடத்தை மாட்டி, அதன்மூலம் ஆப்பிரிக்காவை விவரித்தேன். விக்டோரியா நியாசா, தங்க நயிகா, நதிகள், ஜாம்பெஸி, நைல் முதலியவற்றைப் பற்றியெல்லாம் கூறினேன்.

ஆப்பிரிக்காவில் வாழும் விலங்குகளில் சிங்கங்கள், யானைகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறினேன். ஆப்பிரிக்க நாட்டு மக்களாகிய, மசாய்கள், கோவிரோஸ்டோக்கள் ஆகியோரைப் பற்றிக் கூறினேன். ஒருநாள் அவர்களிடம் “நம்மைச் சுற்றி வாழும் மக்களாகிய கோலிகள், ராபாரிகள், குயவர்கள், இடையர்கள் முதலியவர்களைச் சென்று காண்போம்” என்று கூறினேன்.

கிராமங்கள், நதிகள், மலைகள், கிராமங்களின் அண்மைப் பகுதிகள் ஆகியவற்றுக்குச் சுற்றுலாவாக அழைத்துச் சென்று மக்களைச் சந்தித்து அவர்களின் பூர்வீக வரலாறுகளைக் கேட்டறியச் செய்தேன். அதன்பிறகு புவியியலைப் பற்றிய ஒரு நூலகம் நிறுவ எண்ணினேன். ஆனால் குஜராத்தி மொழியில்

போதுமான புத்தகங்கள் கிடைக்கவில்லை. கிடைத்தவற்றை யெல்லாம் சேகரித்தேன். அவற்றைப் படிக்கக் கொடுத்துவிட்டு, "இவற்றைப் படியுங்கள், தேசப்படங்களையும் கூர்ந்து நோக்குங்கள். பயணிகள் எங்கே போகிறார்கள் என்பதைக் கண்டறிந்து அவர்களோடு தொடர்ந்து போகவும்" என்று கூறினேன்.

பயணக் கட்டுரைகளைப் படிப்பதில் மாணவர்களுக்கு ஆர்வம் அதிகம். கத்தியவார் குறித்த அனைத்து விவரப் புத்தகத்தைப் படிப்பதில் ஓரிருவர் ஆர்வம் காட்டினார்கள். ஏதோ ஒரு கிராமத்தைப் பற்றி முழுவதும் படித்தார்கள். ரவிபாய் ரவால் என்னும் ஓவியரின் ஓவியங்களிலிருந்து அகமதாபாத்தைக் குறித்து நன்றாகத் தெரிந்து கொண்டார்கள். ஒவ்வொரு முக்கிய நகரத்தைக் குறித்தும் இப்படி ஒரு ஓவியத் தொகுப்பு இருக்குமானால் நன்றாக இருக்கும். ஒருநாள் ரவிபாய் எங்கள் வகுப்புக்கு வந்தார். அவரிடம் சென்னையைக் குறித்த ஒரு திரைப்படம் இருந்தது. அதைக் காட்டினேன். கல்வித்துறைக்குத் திரைப்படம் ஒரு நல்ல உதவும் கருவியாக இருக்க முடியும். வெகு தொலைவில் உள்ள இடங் களைக் குறிக்கும் உண்மையான காட்சிப்படங்கள் இருக்குமானால் புவியியல் ஆர்வம் கூடும்.

நான் நினைக்கவில்லை. பையன்களே எல்லாவற்றையும் மனப்பாடம் செய்ய வேண்டும் என்றும் நான் எதிர்பார்க்கவில்லை. பையன்கள் அவற்றைத் தெரிந்துகொண்டால் போதும். அவற்றைக் கற்றுக்கொள்ளப் பல்வறு வழிகள் உண்டு. நான் விரும்பியது அவ்வளவே.

"நாம் பயணம் செய்வோம்" என்று மற்றொரு விளையாட்டை நான் உருவாக்கினேன். பவநகரிலிருந்து அகமதாபாத், துவாரகை, மும்பை, இமயமலை, இங்கிலாந்து வரை செல்லும் கற்பனைத் திட்டம் ஒன்றைத் தீட்டினோம். எப்படிப்போவது என்பதை அடுத்துத் தீர்மானிப்போம். எந்தப் புகை வண்டிகளைப் பிடிக்க வேண்டும், எங்கே வண்டி மாற்ற வேண்டும், போகும் வழியில் எதைப் பார்க்க வேண்டும், பயணத்துக்கு ஆகக்கூடிய காலம், யார் யாரைப்பார்க்க வேண்டும், என்ன வாங்க வேண்டும் முதலிய வற்றைத் தீர்மானித்தோம். வழிகாட்டிப்புத்தகங்களை வாங்கிப் பார்க்க வேண்டிய முக்கிய இடங்களை அறிந்து கொண்டோம். ஒவ்வொரு இடத்திலும் வாங்கத் தகுந்த பொருள் என்ன என்பதைப் புவியியல் நூல்களிலிருந்து தெரிந்துகொண்டோம். நாங்கள் உண்மையாகவே சுற்றுலாச் செல்வதாக நினைத்து ஒவ்வொன் றையும் தெளிவாகத் தெரிந்துகொண்டோம். மற்றவற்றை மாணவர் களிடமே விட்டுவிட்டேன். சில சமயங்களில் அவர்கள் ஒரு தீப்பெட்டி எங்கிருந்து வந்தது என்பதைத் தேசப்படத்தில் தேடிக்

கண்டுபிடித்தார்கள். சில சமயங்களில் அவர்கள் மார்க்கெட்டுக்குப் போய் அங்குள்ள கடைகளில் உள்ள பொருள்கள் எந்தெந்த நாடு களிலிருந்து வந்தன என்று அறிந்து கொண்டார்கள். ஆறுகள், நகரங்கள் மலைகள், நாடுகள் ஆகியவற்றின் பெயர்களைக் கொண்டு அந்தாதி விளையாட்டு விளையாடினார்கள். தாங்கள் பார்த்த அல்லது படித்தறிந்த ஊர்களில் உள்ள, ஆறுகள், குன்றுகள், மற்றும் இயற்கை அமைப்புகளைக் கொண்டு கிராமங்களின் வரை படங்களை அவர்கள் வரைந்தார்கள். மேலும் தேவையான செய்தி களை அறிய அவர்கள் புவியியல் புத்தகங்களின் துணையை நாடினார்கள்.

இவ்வாறு புவியியல் கல்வி நடைபெற்றது. இருந்தாலும்கூட சக ஆசிரியர்கள் பலர் இது குறித்து மகிழ்ச்சி அடையவில்லை. 'நீங்கள்தான் இதைச் செய்ய முடியும். நாங்கள் எங்கிருந்து இதை யெல்லாம்..." என்றார்கள்.

ஆனால் அவர்களும் இதைச் செய்ய முடியும் என்று நான் கருதினேன். வேண்டியதெல்லாம், உழைப்பும் உற்சாகமும்தான்.

## 5

முழு ஆண்டுத் தேர்வு நெருங்கிக் கொண்டிருந்தது. இதுவரை செய்யப்பட்ட பணியின் இருப்புக் கணக்கை நான் பார்க்க லானேன். கணக்குப்பாடத்தைப் பற்றிச் சிந்தித்தேன். இதுவரை நான் கணக்குப் பாடத்தைத் தொடக்கூட இல்லை என்பது உண்மையன்று. அது குறித்து இதுவரை நான் பேசவில்லை. கீழ் வகுப்புகளில் மாணவர்கள் படித்தவற்றை நினைவுபடுத்தும் வகையில் அவர்களுக்குச் சில பயிற்சிகள் வைத்தேன். அவற்றை அவர்கள் செய்து முடித்தார்கள். அவர்கள் கணிதப் பாடத்தில் நன்றாகவே பயிற்சி பெற்றிருந்தார்கள் என்று நான் முதலில் கருதினேன். அதுவும் ஒருவகையில் நல்லதே. ஏனெனில் அந்தப் பாடத்தில் எதுவும் புதிதாகச் செய்ய முடியாது என்று நான் கருதினேன். அவர்கள் கணக்கிடும் முறையின் அடிப்படையைக் குறித்து நான் கேட்டபொழுது அவர்களால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவர்களுக்கு கூட்டல், கழித்தல் முதலியவற்றைச் செய்யத் தெரிந்திருந்தபோதிலும், அதைவெறும் ஞாபக சக்தியையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. அப்பொழுது இது குறித்து நாம் என்ன செய்யலாம் என்று நான் கவலைப் பட்டேன். முக்கியமாக கணக்கு எனக்குப் பிடித்தமான பாடம் இல்லை. கணிதத்தைக் கற்பிக்கும் தற்போதைய முறை தவறானது என்று

நான் கருதினேன். ஆனால் இதைக் களைய என்ன செய்ய வேண்டும் என்று நான் சிந்தித்திருக்கவில்லை. என் பிரச்சினை வேறு. நான் கல்வி அதிகாரியிடம் நேரே போய், "கணக்கைப் பொறுத்தவரை நான் ஏதும் புதிதாகச் செய்ய இயலாது. நான் விஷயங்களை நன்றாக விளக்கிப் பாடத் திட்டத்தை முடித்து விடுகிறேன். அவ்வளவுதான் என்னால் முடியும்" என்றேன்.

"ஏன்? கணிதம் கற்பிப்பதில் ஒரு மாறுதலும் செய்ய வேண்டியது இல்லையா?"

"கட்டாயம் மாறுதல் செய்யவேண்டும். ஆனால் செய்ய வேண்டிய மாறுதல் மிகவும் அடிப்படையானது. குழந்தை எண்ணிக்கையைத் தொடங்கும் காலம் முதலே சரியான முறையைப் பின்பற்ற வேண்டும். அடிப்படைகளைச் சரிவரப் புரிந்து கொள்ளாவிட்டால் மாணவன் கடைசிவரை கணக்குப் பலவீனமாகவே இருந்து விடுவான்."

"அப்படியானால் கணிதத்தை அடிப்படையிலிருந்தே போதிக்க வேண்டியதுதானே" என்றார் கல்வி அதிகாரி.

"அதற்கு நேரம் எங்கே இருக்கிறது? காலம் இருந்த போதிலும், பையன்கள் மனப்பாடம் செய்வதைத்தான் பின்பற்றுகிறார்கள். தங்கள் கணக்குகளைச் செய்வதற்கான 'ஏன்?' 'எதற்காக?' என்பவற்றைக் குறித்து அவர்கள் சிறிதும் கவலைப்படுவதில்லை. அவர்களைத் திசைமாற்றுவது மிகவும் கடினம்.

"அப்படியானால் அவர்களின் கணக்குப்பாடம்..."

"என்னால் முடிந்ததைச் செய்வேன். இந்த நிலைமையில் கணக்கைக் கற்பிப்பதில் பின்பற்றப்படவேண்டிய முறைகளைக் கடைப்பிடிக்க முடியாது."

"ஒருவேளை ஒரு வகுப்பில் ஆரம்பத்திலிருந்தே கணக்குக் கற்பிக்கும் பணியை உன்னிடம் ஒப்படைத்தால், உன் புதிய முறைகளைப் பரிசோதனை செய்து பார்க்க முடியுமா?"

"எண்களைக் கற்பிக்கும் நிலையிலிருந்தே என்னுடைய புதிய முறைகளைப் பின்பற்ற வேண்டுமென நினைக்கிறேன். அப்போது தான் ஒரு குறிப்பிட்ட முறைதான் நல்லது என்று அடுத்தவர்களுக்கு நான் சொல்ல முடியும். என்னுடைய ஆசிரிய நண்பர்கள் கணிதம் கற்பிப்பதில் புதிய முறையை மேற்கொள்ள விருப்பத்தோடு இருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அடுத்த ஆண்டும் அதிர்ஷ்டவசமாக நான் என் பரிசோதனையைத் தொடர வாய்ப்புக் கிடைக்குமானால், திரு. சந்திராசங்கரும் நானும் சேர்ந்து ஒரு பரிசோதனையை மேற்கொள்வோம். கணக்கைக் கற்பிக்க மான்டிசோரி முறை நல்லது என்று நான் கருதுகிறேன். அது இயற்கையானது. அம்முறையைப் பற்றி நான் படித்திருக்கிறேன்; அது

குறித்துச் சிந்தித்தும் இருக்கிறேன். ஆனால் நான் அதை நடைமுறையில் சோதனை செய்து பார்த்ததில்லை."

"அப்படியானால் நீ அடுத்தவருடம் துணைக்கல்வி அதிகாரிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, ஆசிரியர் பயிற்சி நிலையத்தில் பணியாற்றிக்கொண்டு, கணக்குப் பாடத்தைக் கற்பிக்கும் சோதனைகளைச் செய்ய ஒப்புக் கொள்வாயா?"

"அதை நான் காலத்தின் கையில் விட்டுவிடுகிறேன். இப்பொழுது நான் சொல்லக்கூடியதெல்லாம், இந்த வருடம் நான் கணக்குப் பாடத்தில் ஒன்றும் செய்ய இயலாது என்பதுதான்."

## 6

முழு ஆண்டுத் தேர்வுகள் நெருங்கி வந்தன. என்னுடைய சொந்த வழியில் மாணவர்களை நான் தயாரித்து வந்தேன். அவர்களும் மிகுந்த உற்சாகத்தோடு பணிபுரிந்து வந்தார்கள். தேர்வுகளில் என் மாணவர்கள் கட்டாயம் வெற்றி பெறுவார்கள் என்பதில் நான் உறுதியாக இருந்தேன்.

தேர்வுகள் ஆரம்பித்தன. மற்ற வகுப்புகளைக் கல்விஅதிகாரி முதலில் பரீட்சை செய்தார். அடுத்து என் வகுப்புக்குத் தேர்வு! முதலில் இருந்தே என் வகுப்பைக் கல்விஅதிகாரிதான் நேரிடையாகப் பரீட்சை செய்வார் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது. அவர் புன்னகையோடு "உன் வகுப்பை நான் பரீட்சை செய்ய விரும்பவில்லை. உன் வகுப்பின் எல்லா மாணவர்களையும் நான் அடுத்த வகுப்பிற்குச் செல்ல அனுமதி வழங்குகிறேன்."

"அது சரியாகாது. இது சில மாணவர்களுக்கு நியாயம் வழங்காமல் போய்விடும்."

"அது எப்படி மாணவர்களுக்கு நியாயம் வழங்காமல் போகும்?"

"மேல் வகுப்புக்குச் செல்லத் தகுதியில்லாத மாணவர்களுக்கு அனுமதி வழங்கக் கூடாது" என்றேன்.

" ஆனால் நீதான் முழு வகுப்பிற்கும் மிக நன்றாகப் போதனை செய்திருக்கிறாயே? உன் போதனையின் மதிப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்."

"இருக்கலாம். ஆனால் எல்லாரும் ஒரே மாதிரியாக நன்றாகக் கற்றுக் கொண்டிருக்கிறார்களா? உண்மையாகப் பார்க்கப் போனால் ஒருசிலர் ஒன்றுமே கற்றுக் கொள்ளவில்லை. அவர்கள் எப்பொழுதும் போல் மரமண்டைகளாகவே இருக்கிறார்கள்."

"அப்படியானால் அவர்களை என்ன செய்ய வேண்டும்

என்கிறாய்?" என்று கேட்டார்.

"சிலரைப் பள்ளிக் கூடத்திலிருந்தே அனுப்பிவிட வேண்டும். சவரத் தொழிலாளி ரகுவின் மகனுக்கு வரலாறு, புவியியல், கணக்கு ஆகியவற்றில் சிறிதும் அக்கறை இல்லை. அவன் பள்ளியில் வீணே தேங்கிக் கிடக்கிறான். ஆனால் அவன் ஒரு குழுவை நிர்வகிப்பதில் சமர்த்தன். அவன் ஒரு பெரிய சவரக் கடை வைத்தால் சிறப்புப் பெறுவான். அவனைப் பம்பாய் நகருக்கு அனுப்பி சவரத் தொழிலைத் தெளிவாகக் கற்றுவரச் செய்யலாம். அத்துடன் பெரிய சவரத் தொழில் நிறுவனத்தைப் பராமரிப்பதையும் கற்று வரச் செய்யலாம்."

"அது சரி. வேறு யார் பள்ளிப்படிப்புக்கு லாயக்கு இல்லாதவர்கள்?"

"அவர்கள் பள்ளிப்படிப்புக்கு லாயக்கு அற்றவர்கள் என்று நான் சொல்ல வரவில்லை. அவர்களுக்கு இப்படிப்பட்ட பள்ளி பொருத்தம் அற்றது என்று கூறுகிறேன். அவர்களுக்கு ஆர்வம் உள்ள துறையைக் கற்பிக்க இங்கு வசதி இல்லை."

"சரி. சரி. அவர்கள் யார் யார்?"

"ஜீவன் சேத் என்பவன் காவல் துறைக்குப் பொருத்தமாக இருப்பான். அவனை உடற்பயிற்சிக் கூடத்தில் சேர்க்க வேண்டும். அவன் தகப்பனாரிடம் சொல்லி அவனைப் பிரயாணங்கள் மேற்கொள்ள உதவி செய்யும்படி சொல்ல வேண்டும். அவனை ஒரு நல்ல காவல்துறை அதிகாரியிடம் உதவியாளனாக நியமிக்க வேண்டும். அவனுக்குக் கொஞ்சம் சட்டமும் கற்றுக் கொடுக்க வேண்டும். ஐந்து ஆண்டுகளுக்குள் அவன் ஒரு சிறந்த காவல்துறை ஊழியனாக வளர்ச்சி பெறுவான். இப்பொழுது கூடப் பள்ளியில் அவன் காவல்துறை ஊழியனைப்போலவே நடந்து கொள்கிறான்."

"சரி. வேறு யார் பலவீனமாக இருக்கிறார்கள்?"

"மூன்று பேர் படிப்பில் மிகப் பலவீனமாக இருக்கிறார்கள். வரும் கோடை விடுமுறையில் நான் அவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி அளிக்கக் கருதுகிறேன். ஆனால் ஐயா, பாடத்திட்டத்தின் கடுமை யைக் குறைக்கவும், நம் பள்ளியின் தரத்தை அதிகரிக்கவும் வேறு வழியே இல்லையா?"

கல்வி அதிகாரி, "அதை விட்டுவிடுவோம். என் கைகள் தற்பொழுது கட்டப்பட்டிருக்கின்றன. நான் உங்களிடம் ஏற்கெனவே பலமுறை கூறியிருக்கிறேன். உங்கள் வகுப்புக்குரிய தேர்வு முடிந்துவிட்டது. கடந்த பருவத்தில் செய்தது போல இப்பொழுதும் நீ ஏதாவது செய்திருப்பீரே?"

## 7

தேர்வுக்கு அடுத்த நாள் பரிசளிப்பு விழா நாள். ஒவ்வொரு வருடமும் அதிக மதிப்பெண் பெற்ற மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும். நகரைச் சேர்ந்த முக்கிய பிரமுகர்களும், அரசாங்க அலுவலர்களும் பள்ளிக்கு வருகை புரிந்திருந்தார்கள். அன்றைய நிகழ்ச்சித்திட்டம் முழுவதையும் ஏற்பாடு செய்யும் பொறுப்பை கல்வி அதிகாரி என்னிடம் ஒப்படைத்திருந்தார். நான் என் வகுப்பு மாணவர்களிடம் இந்தப் பொறுப்பை ஒப்படைத்திருந்தேன். என்னைக் கலந்துகொண்டு என் மாணவர்கள் முழு ஏற்பாடு களையும் செய்திருந்தார்.

முதலில் உடற்பயிற்சிகள் நடைபெற்றன. அரைமணிநேரம் பயிற்சிகளைக் கண்டவர்கள் மிகவும் ஆச்சரியம் அடைந்தனர். அதை அடுத்து ஓட்டப்பந்தயங்கள் நடைபெற்றன. குதித்தும் தாவியும் ஓடுதல், மூன்றுகால் ஓட்டப்பந்தயம், கொய்யாப்பழம் பொறுக்கும் போட்டி, இசை நாற்காலி முதலிய விளையாட்டுகள் நடைபெற்றன. மக்கள் இவ்விளையாட்டுகளை ஆர்வத்துடன் கண்டு களித்தார்கள். இவற்றை அடுத்து சில சிறு நடனங்கள் நடைபெற்றன. ஒரு கடைக்காரர், கல்வித்துறை இயக்குநர், காவல் துறை அதிகாரி, அரசியல் தலைவர் ஆகியோரைச் சுற்றிக் கதைகள் புனையப்பட்டிருந்தன. அவை நன்றாக நிகழ்த்தப்பட்டன. அடுத்து மாணவர்கள் தாங்கள் வரைந்த ஓவியங்களைக் கொண்டு வந்தனர். ஒவ்வொரு விருந்தினருக்கும் ஒரு ஓவியத்தைப் பரிசாக அளித்தனர்.



மூன்றுகால் ஓட்டத்தை மக்கள் ஆர்வத்துடன் பார்த்தனர்.

பையன்களின் ஓவியங்களை அனைவரும் மிகுந்த ஆர்வத்தோடு நோக்கினர்.

இப்பொழுது பரிசு வழங்கும் நேரம். ஒவ்வொரு வருடமும் ரூ. 125/- பெறுமானமுள்ள பரிசுகள் வழங்கப்படும். அதிக மதிப்பெண் பெற்ற மாணவர்களுக்கு இவை பகிர்ந்தளிக்கப்பட்டன.

கல்வி இயக்குநர் எழுந்தார். தமது வழக்கமான பாணியில், "இன்றைய நிகழ்ச்சி வழக்கத்திற்கு மாறாகப் புதுமையாக அமைந்தது. இதோ என் அருகில் அமர்ந்துள்ளவர் பரிசளித்தல் பற்றிய ஒரு புதிய கருத்தை எனக்கு அளித்திருக்கிறார். ரூ.125/-ஐ நான் வெவ்வேறு மாணவர்களுக்கு அளிக்கப்போவதில்லை. இந்தப் புதிய நோக்கத்தை எனக்கு அளித்த இவரது பெயரால் இந்தப் பள்ளியில் ஒரு நூல்நிலையம் அமைப்பதற்கு நான் நன்கொடை யாக வழங்கப்போகிறேன். மேலதிகாரிகளும் இதற்கு அனுமதி வழங்கிவிட்டார்கள். ஆண்டுதோறும் இந்தப் பரிசுப் பணம் இவ்வாறே வழங்கப்பட்டு, இங்கு ஒரு நூல்நிலையம் கட்டி வளர்க்கப்படும். தனிப்பட்டவர்களுக்குப் பரிசு வழங்குவதால் வீண் கர்வமும் ஏமாற்றமும்தான் உண்டாகும். ஆனால் இந்தப் புதிய பரிசு வழங்கும் முறை அனைவரது நலனுக்கும் உதவும். பரிசு வழங்கும் முறையின் தீமையை எனக்கு உணர்த்திப் புதிய வழிகாட்டிய இவருக்கு நான் வெளிப்படையாக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"இந்த நேரத்தில், இவர் கடந்த ஆண்டு என்னை அணுகி இந்த ஆரம்பப் பள்ளியின் நான்காம் வகுப்பில் ஒரு பரிசோதனை நடத்த அனுமதி கேட்டபொழுது இவர் ஒரு நடைமுறைக்கு ஒவ்வாதவர் என்று நான் நினைத்தேன்.

"இவரைப்போலப் பரிசோதனைகள் செய்கிறேன் என்று சொல்லிக்கொண்டு வந்து எடுத்த எடுப்பிலேயே ஓடிப்போனவர் களைப் போல இவரும் இருப்பார் என்றுதான் நான் நினைத்தேன். இருந்தும் நான் அவருக்கு அனுமதி அளித்தேன். எனக்கு அவரிடம் நம்பிக்கை இருக்கவில்லை. ஆனால் அவர் தமது பரிசோதனையில் வெற்றி பெற்றிருக்கிறார் என்பதை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். இவர் என்னுடைய கருத்துக்களை மாற்றிவிட்டார். ஆரம்பக் கல்வியின் பழமையான அடிப்படையை மாற்றியே ஆகவேண்டும் என்பதைக் குறித்து எனக்கு முழு நம்பிக்கை வந்துவிட்டது. என் போன்ற அலுவலர்களும் ஆசிரியர்களும் தாமே முன்வந்து பதவியை விட்டு விலகி, முற்போக்கு நோக்கமுடைய புதிய தலைமுறை இளைஞர்களுக்கு வழி உண்டாக்க வேண்டும்.

"நான் என் சந்தோஷத்தை எப்படித்தான் வெளியிடுவேன்? அவருடைய வகுப்பு மாணவர்களைப் பாருங்கள். அவர்கள்

எவ்வளவு ஒழுங்காகவும், ஆரோக்கியமாகவும், கலகலப்பாகவும் இருக்கிறார்கள்! அவர்களின் முன்னேற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் நானே சான்று பகர்வேன். அவர்களுடைய பெற்றோர்கள் என்னிடம் பலமுறை தங்கள் மனத்திருப்தியைத் தெரிவித் திருக்கிறார்கள்."

இயக்குநரின் பேச்சு முடிந்தது. எல்லோரும் கலைந்து சென்றார்கள். நானும் வீடு திரும்பினேன்.

Lasertypeset at Capital Creations, New Delhi and
printed at Shivam Offset, New Delhi